# தென்பாண்டி தந்த திருவள்ளுவர்



ஆசிரியர்
ஆசிய நட்சத்திரம்
டாக்டர். திருக்குறள் **கேசவ சுப்பையா** M.A., M.A., B.Ed., D.Hon SW

தொடர்பு முகவரி:
ஏ125, என்.ஜி.ஓ. காலனி, காந்திநகர், கோட்டாறு அஞ்சல்,
நாகர்கோவில் - 629 002. கன்னியாகுமரி மாவட்டம், தமிழ்நாடு.
அலைபேசி : 94435 80797

“அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு”

வள்ளுவன் வாய்மொழி உள்ளுவம் என்றென்றும்
தெள்ளு தமிழால் நனி.

# தென்பாண்டி தந்த திருவள்ளுவர்



ஆசிரியர்:

ஆசிய நட்சத்திரம்

டாக்டர். திருக்குறள் **கேசவ சுப்பையா** M.A., M.A., B.Ed., D.Hon SW

தொடர்பு முகவரி:

ஏ125, என்.ஜி.ஓ. காலனி, காந்திநகர், கோட்டாறு அஞ்சல்

நாகர்கோவில் - 629 002, கன்னியாகுமரி மாவட்டம்,

தமிழ்நாடு.

அலைபேசி. 94435 80797

நூலின் பெயர் : **தென்பாண்டி தந்த திருவள்ளுவர்**

ஆசிரியர் : **ஆசிய நட்சத்திரம்** டாக்டர் திருக்குறள் **கேசவ சுப்பையா**



மொழி : தமிழ்

பதிப்பு : முதல் பதிப்பு

பிரதிகள் : 2000 (இரண்டாயிரம்)

வருடம் : 2014

புத்தக அளவு : டெம்மி 1/8

டைப் : 12 பாயின்ட்

பக்கங்கள் : 228

விலை : ₹.120

கணினி தட்டச்சு : பிரிண்ட் கிராபிக்ஸ்
நாகர்கோவில்

அச்சிட்டோர் : அசிசி ஆப்செட் பிறஸ்
நாகர்கோவில்

வெளியீடு : **துவாரகா பதிப்பகம்**
ஆசிரியர்,
ஏ.125, என்.ஜி.ஓ.காலனி,
காந்திநகர், கோட்டாறு அஞ்சல்,
நாகர்கோவில் - 629 002,
கன்னியாகுமரி மாவட்டம்,
தமிழ்நாடு.

அலைபேசி : 94435 80797

# நூலாசிரியர் உரை...

"தொண்டு செய்வாய் தமிழுக்குத்
துறைதோறும் துறைதோறும்
துடித்தெழுந்தே" எனப் பாவேந்தர் ஆணையிட்டார்.

அவ்வாணையினை ஏற்றுத் தமிழ்ப்பணியே என் தலையாய பணியாய்த் தொண்டு செய்வதே பைந்தமிழ்ப் பல்துறைச் செயல்பாடுகள் திருக்குறளுக்கு நான் ஆற்றிவரும் வாழ்நாள் பணிகள். கன்னியாகுமரி மாவட்டத்தில 1963இல் **இருந்தே சமய வகுப்புக்கள் நடத்தி வந்தேன்.** திருக்குறள் தமிழ்மறையே எனக்கொண்டு மாணவச் சிறார்களுக்குத் திருக்குறள் வகுப்பு நடத்தினேன். 1970இல் நாகர்கோவிலில் அறநிலையத்தைச் சார்ந்த **சித்திரா நூலகத்தில் வியாழக்கிழமைதோறும் மாலை 6.00 முதல் 7.00 மணி வரைக் குறள் விளக்கம்** சொல்லத் தொடங்கித் தொடர்ந்து ஐந்தாண்டுகள் அப்பணியை மேற்கொண்டேன்.

1995இல் சென்னைத் திருவல்லிக்கேணியில் நடந்த உலகத் திருக்குறள் மைய மாநாட்டில் **'திருக்குறள்'** என்னும் விருதை அக்கழகத் தலைவர் முனைவர் கு.**மோகனராசு** அவர்கள் வழங்கிச் சிறப்பித்தார்.

10.02.1996இல் **கோட்டாறு நாராயணகுரு ஆங்கிலப் பள்ளியில் திருக்குறள் வகுப்புத் தொடங்கி வெள்ளிக்கிழமை தோறும்** காலை 8.30 முதல் 9.30 மணி வரைக் குறள் வகுப்பு 5 ஆண்டுகள் நடத்தியும், ஆண்டுதோறும் போட்டிகள், பரிசுகள், சான்றிதழ்கள் வழங்கியும் திருக்குறள் பணிபுரிந்துள்ளேன். 1996இல் குமரி **மாவட்டத் திருக்குறள் ஆய்வு மையம்** எனும் அமைப்பைத் தொடங்கி, ஒவ்வொரு ஆங்கில மாதமும் முதல் ஞாயிற்றுக்கிழமை மாலை 6.00 முதல் 7.30 வரை மாதக் கூட்டம் நடத்தி 178 **ஆய்வரங்குகள்** தமிழ்ச் சான்றோர்களை அழைத்து ஆய்வுரைகள் வழங்கச் செய்து 133 அதிகாரங்களையும் ஆய்வு செய்து தொடர்ந்து குறள் தொடர்பான பல்வேறு தலைப்புக்களில் சிறப்புச் சொற்பொழிவுகளை இடையறாது எனது சொந்தச் செலவிலேயே தொடர்ந்து நடத்தி வந்தேன். இப்பொழுது குமரிமாவட்டக் கல்லூரிகளிலும் பள்ளிகளிலும் மாணவ,

மாணவிகளைப் பங்கேற்கச் செய்து கருத்தரங்குகள் நடத்தி வருகிறேன்.

26.12.1999இல் திருவள்ளுவர் திருஉருவச் சிலை திறப்பதற்கு நான்கு நாட்களுக்கு முன் கன்னியாகுமரி விவேகானந்தா கேந்திரா கலையரங்கில் திருக்குறள் மாநாடு நடத்தியும், மாநாட்டு மலர் வெளியிட்டும் திருக்குறள் பணிபுரிந்தேன். அம்மாநாட்டில் மாவட்ட ஆட்சியாளர் பாராளுமன்ற, சட்டமன்றப்பேரவை உறுப்பினர்கள், தமிழகத் தமிழ்ச் சான்றோர்கள் பங்கேற்றனர்.

திருவள்ளுவர் திருஉருவச் சிலை அமைக்கப்பட்ட அரங்கில் இரண்டாம் தளத்தில் பொறிக்கப்பட்டிருக்கும் குறள்பாக்களையும், டாக்டர் திரு. கணபதி பெருந்தச்சனாரின் வேண்டுகோளுக்கிணங்கக் குறட்பாக்கள் பிழையின்றிப் பொறிக்கச் சிற்பிகளுக்குத் துணை நின்று தொண்டாற்றினேன்.

16.1.99இல் நாகர்கோவில பி.டி.பிள்ளை மண்டபத்தில் மாபெரும் திருக்குறள் மாநாட்டை நடத்தி, திருக்குறள் மலையாள மொழி பெயர்ப்பாளர் திரு. இரமேசன் நாயர், திருக்குறளைப் பற்றிக் குமரி மாவட்டத்தில் நூல்கள் எழுதிய மலேசியா பல்கலைக்கழக முன்னாள் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர். ப.அருணாசலம், பெரும்புலவர் சே.சதாசிவம், டாக்டர்.சிவ.பத்மநாபன் ஆகியோர்களுக்குப் பொன்னாடை போர்த்தியும், நினைவுப் பரிசுகள் வழங்கியும், பாராட்டியும் சிறப்புக்கள் செய்தேன்.

27.11.99இல் குமரி மாவட்டத்துத் திருநயினார்க் குறிச்சியில் மாபெரும் திருக்குறள் மாநாடு நடத்தினேன்.

தொடர்ந்து தென்திருவிதாங்கூர் இந்துக் கல்லூரி, பெருமாள் திருமண்டபம், கவிமணிதாசன் நற்பணி இயக்கம், நாகர்கோவில் பெண்கள் கிறிஸ்தவக் கல்லூரி, திருச்சிலுவை கல்லூரி, பயோனியர் குமாரசுவாமிக் கல்லூரி, கன்னியாகுமரிப் புனித அந்தோணியார் மேல்நிலைப்பள்ளி, வல்லன் குமாரன்விளை அரசு மேல்நிலைப்பள்ளி போன்ற கல்வி நிலையங்களில் கருத்தரங்குகள் நடத்தியுள்ளேன். மேலும் குமரி மாவட்டத் தமிழமைப்புகளில் பல்வேறு தலைப்புக்களில் திருக்குறளின் சிறப்புகள் குறித்துச்

சொற்பொழிவுகள் ஆற்றிக் குறட்பணி செய்து வருகிறேன். மேலும் திருவள்ளுவர் பிறந்த தினமாகக் கொண்டாடப்படும் சனவரி 15ஆம் நாள் குமரியில் சிலையமைத்த ஆண்டிலிருந்து இவ்வாண்டு வரை, பல தமிழமைப்புக்களையும், திருக்குறள் ஆர்வலர்களையும், திருவள்ளுவர் அறக்கட்டளை உறுப்பினர்களையும் அழைத்துச் சென்று அய்யன் திருவடிகளில் மாலை சூட்டியும் மலர் தூவியும் வழிபட்டு, இரண்டாம் தளத்தில் கூட்டம் நடத்தியும் தொடர்ந்து வழிபாடு செய்வதை வழக்கமாகக் கொண்டுள்ளேன். **2012ஆம் ஆண்டிற்கான திருக்குறள் அறக்கட்டளை விருது கன்னியாகுமரி வீபுரத்தில் நடைபெற்ற திருவள்ளுவர் அறக்கட்டளை** மாநாட்டில் எனக்கு வழங்கப்பட்டது. ***சென்னையில் செந்தமிழ் விரும்பிகள்*** மாநாட்டில் **'திருக்குறள் திலகம்'** எனும் விருது வழங்கப்பட்டது.

**"திருவள்ளுவர் குமரியில் பிறந்தாரா? மயிலையில் பிறந்தாரா?** இதனை ஆய்வு செய்ய வேண்டும்" என்ற கருத்தினை முன்னாள் குடியரசுத் தலைவர் மேதகு. A.P.J **அப்துல் கலாம் அவர்கள் 25.5.2009 'தினமலர்'** நாளிதழில் பேட்டி கொடுக்கும்போது வெளியிட்டிருந்தார். எனவே, இதனை ஆய்வு செய்து ஒரு முடிவிற்குக் கொணர வேண்டும் என்று கருதி, அதன் அடிப்படையில் திருவள்ளுவரின் **பிறப்பிடம், ஆற்றிய பணி, நூல் இயற்றியது, மறைவிடம் ஆகியவற்றை ஆய்வு செய்ய வேண்டும்** என்ற உந்துதல் எனக்கு ஏற்பட்டு வரலாறு, இலக்கியம், கள ஆய்வு கல்வெட்டுக்கள் இவற்றின் வழியாக நான் ஆய்வு செய்ததில் கிடைத்த தகவல்களை இந்நூலில் வெளியிட்டுள்ளேன்.

முன்னர் வெளிவந்துள்ள ஆய்வுகளையும், கதைகளையும் அலசிப் பார்த்து ஒத்த கருத்துக்களும் மாற்றுக் கருத்துக்களும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. எனது ஆய்வுக் கட்டுரையைக் **கோவையில் 2010ஆம் ஆண்டு சூன் மாதம் 23-ஆம் தேதி முதல் 27-ஆம் தேதி வரை நடைபெற்ற உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டிற்குச் சமர்ப்பித்துள்ளேன்.**

ஆனால், கட்டுரையைப் பெற்று ஒப்புதல் அளித்த பிறகு உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டில் இருந்து எனது ஆய்வுக் **"கட்டுரையைப் படிப்பதற்குரிய வாய்ப்பை அளிக்காமல், நோக்காளராகக்**

கலந்துகொள்க" என்று ஒரு மாதத்திற்குப் பின் வந்த தகவலும், இந்நூல் இயற்றுவதற்கு மேலும் ஒரு காரணமாக அமைந்தது.

இவ்வாறெல்லாம் 1970 முதல் இந்நாள் வரைத் தொடர்ந்து தொய்வின்றி எனது சொந்தச் செலவிலேயே திருக்குறள் பணிகளைத் தலையாய பணியாகச் செய்துவருவதாலும், மேலும் திருவள்ளுவர் பிறப்பிடம், வள்ளுவநாடு, ஆதிஓலைச்சுவடி, விளவங்கோடு, வள்ளுவன்கோடு என நிலவரைபடம் வரைந்து வெளியிட்டது கூவைக்காடு, வள்ளுவன் பொற்றை, நூல் இயற்றியது இவைகளோடு கன்னியாகுமரி விவரச் சுவடியில் தவறான செய்தி கொடுத்து வெளியிட்டது, சொல்லாட்சி, வள்ளுவ முட்டம், நெய்தல் நிலத்தில் பிறந்தார், முட்டத்தில் வாழ்ந்தார், தூண்டில் பொன், திருநைனார்க்குறிச்சியை திரு நாயனார் என மாற்றியது, 18-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றிய கூழக்கடை, திருநைனார்க்குறிச்சியைத் திருநாயனார்க்குறிச்சி என மாற்றி கி.மு. முதல் நூற்றாண்டிற்குக் கொண்டு சென்றது போன்ற தமது தவறான கற்பனையை திரு. சிவபத்மனாபன அவர்கள் வரலாறாக்கி, பல கல்லூரிகளிலும், பள்ளிகளிலும் பல கருத்தரங்கங்களிலும், வெளிநாடுகளிலும் பறைசாற்றி விருதுகள் பெற்றும் உலகளாவிய நிலையில் பல பெரியவர்களை நம்ப வைத்ததையும் **கண்டு மனம் நொந்த காரணத்தாலும் 'இந்நூல் எழுதி உண்மையை உலகிற்கு வெளிக்கொணர வேண்டும்** என்ற எண்ணமும் வலுப்பெற்று இந்நூல் இயற்றக் காரணமாயிற்று. வருங்கால இளந்தலைமுறையினர் **உலகமகா கவியைத் தவறான வரலாற்றுக்குட்படுத்திப் புரியவைக்கும் முனைவர் சிவ.பத்மநாபனின்** தவறான போக்கை மாற்றி உண்மையை உலகிற்குணர்த்தவே இந்நூல் இயற்றப் பிறிதொரு காரணமாகும்.' அய்யன் திருவள்ளுவரைக் குறித்துக் குமரி மாவட்டத்திலேயே தவறான ஆய்வுகள் செய்து உலகெலாம் பறை சாற்றி வரும் **ஆய்வுக் களஞ்சியம்** எனும் மாத இதழில் வரும் புனை கதைகளையும் கண்டு மனம் நொந்த காரணத்தாலும் உண்மை தேடவேண்டுமென்ற நோக்கில் பல ஆய்வுகள் செய்துள்ளேன். "**தென்பாண்டி தந்த திருவள்ளுவர்**" என்ற இந்நூலை அவற்றின் அடிப்படையில் யாத்துள்ளேன்.

இந்நூலுக்கு அணிந்துரைகள் வழங்கி அணி சேர்த்த அறிஞர்களான தமிழ்நாடு தொல்லியல்துறை உதவி இயக்குநர் (ப.நி) திருமிகு **ர.பூங்குன்றனார்** அவர்களுக்கும், உலகத் தமிழ்ச்சங்க நிறுவனத் தலைவர் செவாலியர் கலைமாமணி டாக்டர் **வி.ஜி.சந்தோசம்** அவர்களுக்கும், பத்மபூஷன் அருட்செல்வர் டாக்டர் **நா.மகாலிங்கனார்** அவர்ளுக்கும், தொல் தமிழர் பண்பாட்டு வரலாற்று அதிநுட்ப ஆய்வுமையம் செனனை, தலைவர், வரலாற்று ஞாயிறு டாக்டர் **வே.தி.செல்லம்** அவர்களுக்கும், புதுக்கோட்டை மாமன்னர் கல்லூரி முன்னாள் முதல்வரும், முன்னாள் கல்லூரிக் கல்வி இணை இயக்குநர் திருநெல்வேலி மண்டலம் பேராசிரியர் **அ.கோவிந்தப்பிள்ளை** அவர்களுக்கும், முதுபெரும் புலவர் திருமிகு வெள்ளிமலை **சிவா** அவர்களுக்கும், மதுரை காமராசர் பல்கலைக்கழக முன்னாள் வரலாற்றுப்புலம் முனைவர் பேரா.**பி.சர்வேஸ்வரன்** அவர்களுக்கும், உலகத்திருக்குறள் தகவல் மையம், திருக்குறள் அரசுக்கழகத் தலைவர் அருண்மொழிச் செல்வர், **தமிழ்மாமணி**, திருக்குறள் தூதர் பேரா.முனைவர் **பா.வளன் அரசு** அவர்களுக்கும், மேனாள் துணை வேந்தர் அறிஞர் **அவ்வை நடராசன்** அவர்களுக்கும், கோட்டாறு ஆயர் மேதகு **பீட்டர் ரெமிஜியஸ்** அவர்களுக்கும், அகில இந்திய வானொலி நிலைய நிகழ்ச்சிப் பொறுப்பாளர் நாகர்கோவில் வானொலி நிலையம், கீழப்பாவூர் திருமிகு. **ஆ.சண்முகய்யா** அவர்களுக்கும், மேனாள் மத்திய இணை அமைச்சர் திருமிகு. **க.வெங்கடபதி** அவர்களுக்கும், பன்னாட்டுத் தமிழ்மொழி மையத் தலைவர், தமிழர் வரலாற்றுப் பாதுகாப்பு மைய நெறியாளர் அறிஞர் **சாத்தூர் சேகரன்** அவர்களுக்கும், கள ஆய்வுகளுக்கு உடனின்றுதவிய பொறியாளர் ***இரா.சிவராமகிருஷ்ணன்***, *திரு.ஆறுமுகம்*, *திரு.சி.காப்பித்துரை*, குமரி மாவட்டத் திருக்குறள் ஆய்வு மையச் செயலர் திரு.**மு.குமரிச் செல்வன்** அவர்களுக்கும், இந்நூலைச் சீரிய முறையில் கணினித் தட்டச்சுச் செய்து தந்த **பிரிண்ட் கிராபிக்ஸ்**, வடிவமைத்து நூலாக்கித் தந்த நாகர்கோவில் **அசிசி பிரிண்ட்** அச்சகத்தார்க்கும் என் நெஞ்சார்ந்த நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன்,

திருக்குறள் பணியில்,

திருக்குறள் டாக்டர். **கேசவ சுப்பையா**

## அணிந்துரை



இந்நூலாசிரியர் திருக்குறள் சுப்பையார் அவர்கள் யாத்த 'தென்பாண்டி தந்த திருவள்ளுவர்' என்ற நூலைப் படிக்கும் பேறு பெற்றேன். இந்நூல் குறள்போல் அமைந்துள்ளது. வ்ள்ளுவர் வரலாறு ம்ட்டும்ன்றி தமிழகத்தின் வரலாறு பேசும் சிறந்த நூல். வள்ளுவர் பற்றி ஆயிரக்கணக்கான நூல்கள் வெளிவந்திருப்பினும் இந்த நூல் ஆலமர வித்துபோல அமைந்துள்ளது. மூவேந்தர் வரலாறு பற்றிக் குறிப்பிடும் செய்திகள் வுரலாற்றியலைப் பின்பற்றி முறைப்படி எழுதப் பெற்றுள்ளது. வள்ளுவர் மீது அளவு கடந்து பற்றுவைத்திருக்கும் ஆசிரியர் வள்ளுவர் பற்றிப் பரப்பப் பெற்ற கட்டுக்கதைகளைப் புறந்தள்ளி உள்ள துணிச்சலைப் பாராட்ட வேண்டும். வள்ளுவர் வரலாறு மட்டுமின்றி அவர் வாழ்ந்த பகுதியின் வரலாற்றினைக் கணித்துள்ள சிறப்பு நூலில் மிளிர்கிறது.

வள்ளுவர் பற்றி அமைந்த இந்த நூலில் குமரிக் கண்டம் கடல்கோள் பட்டது என்ற செய்தியைத் துல்லியமான வரைபடங்களுடன் விவரித்துள்ளமை சிறப்பாக உள்ளது. 'குமரிக் கண்டம் பற்றிய ஆய்வுகளும்', 'மறு ஆய்வுகளும்' நிகழ்ந்த வண்ணம் உள்ளன். குமரிக்கண்டத்தைப் பற்றிய பல செய்திகளைத் திரட்டித் தந்த பெருமை இவரையே சாரும். மறைந்துபோன பல்நாடுகளின் பெயர்களைத் தொகுத்துத் தந்துள்ளார். மூவேந்தர் நாட்டு எல்லைகளை முன்னோர் நூல்களின் வழிநின்று எடுத்துக் காட்டியுள்ளமை போற்றுதற்குரியது. திருவள்ளுவர் பற்றித் தமிழ்நாடன் தொகுத்த செய்திகளை அவர் பெயரிலேயே தந்துள்ள நேர்மையைப் பாராட்ட வேண்டும். இதைப்போலவே வி.ஆர்.ஆர்.தீட்சிதர், கே.நீலகண்ட சாஸ்திரியார் போன்ற பல அறிஞர்களின் கருத்துக்களைப் போற்றியுள்ளார்.

திருவள்ளுவர் பற்றிய அனைத்துச் செய்திகளையும் தொகுத்தும், வகுத்தும் எழுதியுள்ள குறிப்புகள் நூலை வாசிப்பவர்களுக்கு விருந்தாக அமைந்துள்ளது. தமிழ்நாட்டுச் சமணர்கள் திருவள்ளுவரைச் சமணர் என்று வலியுறுத்தி எழுதியுள்ளனர். திருவள்ளுவரைக் குந்த குந்த ஆச்சாரியார் என்று பெயரிட்டு அழைக்கின்றனர். அவர் வாழ்ந்த இடம் பொன்னூர் மலை என்று கருதுகின்றனர். அந்த நூலின் கருத்துகளை உரசிப் பார்ப்பதற்கு அந்தப் பகுதிக்கே சென்று ஆய்வு செய்துள்ளார். பல ஆய்வாளர்கள் கள ஆய்விற்குச் செல்லாமல் நாற்காலியில் அமர்ந்து கொண்டே தங்கள் ஆய்வுகளை நடத்துவதுதான் வாடிக்கையாக உள்ள இந்தத் தமிழ்நாட்டில், எண்பது அகவையைக் கடந்த நிலையில் கள ஆய்வு செய்து தன் முடிவுகளைக் கூறியுள்ளமை அவர் நேர்மைக்கு எடுத்துக் காட்டு.

குமரி மாவட்டத்தில் நாஞ்சில் நாட்டில் தோவாளை வட்டத்தில் அழகிய பாண்டியபுரம், கடுக்கரை ஊர்களுக்கிடையில் உள்ள திருமடவிளாகம் குறத்தியறையே வள்ளுவர் பிறந்த ஊர் என்பதே இவ்வாராய்ச்சியாளரின் முடிவாகும். குழப்பமற்ற நிலையில் முடிவு கட்டிய பெருமை இவரையே சேரும்.

திருநயினார் குறிச்சி வள்ளுவர் பிறந்த இடமல்ல என்பதும் தெளிவாகிவிட்டது.

இது போன்ற நூல்களைத் தமிழுக்கு அளித்துப் பெருமை அடைய என் வாழ்த்துக்கள்.

சென்னை. அன்புடன்,

(ர.பூங்குன்றன்)

தமிழ்நாடு தொல்லியல்துறை உதவி இயக்குநர் (பணி நிறைவு)

# அணிந்துரை




விஜிபி உலகத் தமிழ்ச் சங்கம்
VGP ULAGA TAMIL SANGAM
Regd.No. : 102/93

Founder & President Chevaliar Dr.V.G.Santhosam Chancellor of Peace & Friendship | Vice President V.G.P Ravidas | General Secretary Siromani V.G.Selvaraj | Joint Secretary V.G.P. Rajadas | Treasurer V.G.S.Rajesh



அய்யன் திருவள்ளுவரைப் பற்றி ஆயிரமாயிரம் நூல்கள் வருகின்றன. இதோ ஓர் இனிய ஆய்வுநூல் இங்கே நமக்குக் கிடைத்திருக்கிறது. வான்புகழ் கொண்ட வள்ளுவர், "இங்கே பிறந்தார், அங்கே பிறந்தார்", "என சொல்லிக்" கொண்டிருப்போருக்கு நிலையான உண்மையாக, திருவள்ளுவர் பிறந்த ஊர், கன்னியாகுமரி மாவட்டத்தில், நாஞ்சில் நாட்டில் தோவாளை வட்டத்தில், அழகிய பாண்டியபுரம் கடுக்கரை **ஊர்களுக்கிடையில் உள்ள திருமடவிளாகம் குறத்தியறையே வள்ளுவர் பிறந்த ஊர்** என்பதை இந்நூல் வழியாக உறுதிபட, ஆய்வு செய்து அதன் வழி மெய்ப்பித்துள்ளார்.

"**தென்பாண்டி தந்த திருவள்ளுவர்**" என்னும் இந்நூல் வள்ளுவர் பெருமானின் '**வாழ்க்கைக் குறிப்புக் கையேடு**' எனக் கொள்ளலாம். உலகத் தமிழர்களின் கரங்களில் கட்டாயம் இருக்க வேண்டிய நூலாகும். **திருக்குறள் கேசவ சுப்பையா** அவர்கள் குறள்போல புகழோங்கி வளர்க! வாழ்க!

திருக்குறள் தொண்டென்பது ஓர் தவமாகும். அது தெய்வ சங்கல்பம் உள்ளவர்களுக்கே உரியது! அவ்வகையில், யானும் **விஜிபி உலகத் தமிழ்ச் சங்கத்தின்** சார்பாக, உலகைத் தமிழால் உயர்த்துவோம் என்னும் குறிக்கோளுடன் இந்தியாவிலும், வெளிநாடுகளிலும் திருக்குறள் மாநாடுகள் நடத்தி, **திருவள்ளுவரின் திருவுருவச் சிலைகளை** அமைத்து வருகின்றோம் என்பதைப் பெரு

மகிழ்ச்சியோடு அறிவிக்கின்றேன். அச்சிற்பங்கள் குமரியில் மயிலாடியில் நற்றவசிற்பியாம் நல்லதாணு அவர்களால் உருவாக்கப்பட்டு வருகிறது என்பது குமரி மண்ணுக்குக் கிடைத்த பெருமையாகும்.

இந்நூல் வெளியிடப்படவிருக்கும் தேசிய திருக்குறள் மாநாடு மிக சீரும் சிறப்பும் பெற்று நடந்தேற எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கின்றேன்.

குறள் வாழ்க! குறள் தந்த வள்ளுவன் வாழ்க! வாழ்க!

தமிழ்ப்பணியில் உங்கள்

17/5/04

டாக்டர் **வி.ஜி.சந்தோசம்**



# அணிந்துரை

**டாக்டர் திருக்குறள் கேசவ சுப்பையா** எழுதியுள்ள **தென்பாண்டி தந்த திருவள்ளுவர்** என்ற நூல், ஒரு நல்ல ஆய்வு நூலாக அமைந்துள்ளது.

குமரிக்கண்டம் ஒரு காலத்தில், சேர, சோழ, பாண்டிய நாடுகளை உள்ளடக்கி இருந்தாலும், கடலில் மூழ்கியபின், தமிழ் நாடு சிறு பகுதியாக மாறிவிட்டதை, புறநானூறு, சிலப்பதிகாரம் ஆகியவற்றில் உள்ள சான்றுகளோடு, சுருக்கமாவும் விளக்கமாகவும் தெளிவுபடுத்திடத் தொடங்கிய நூலாசிரியர், திருவள்ளுவர் காலத்தை குமரிக் கண்டம் முழுமையாக இருந்த காலத்தோடு இணைத்து, அதற்கான ஆதாரங்களை, சீவகசிந்தாமணியிலிருந்தும், பெருங்கதையிலிருந்தும், பிங்கல நிகண்டிலிருந்தும் எடுத்தியம்புகிறார்.

குமரிக்கண்டம் அழிவுற்றபோது, ஏழ்தெங்க நாட்டின் ஒரு பகுதியான நக்கவாரத் தீவு மட்டுமே எஞ்சியது என்றும், ஏழ்குறும்பனை நாட்டின் ஒரு பகுதி, திருநெல்வேலி, இராமநாதபுரம், தூத்துக்குடி மாவட்டங்களில் காணப்படுகிறது என்றும், கடைச்சங்க காலத்தில் இருந்த கடைசி மன்னன் பாண்டியன் முதலாம் கடுங்கோன் காலத்தில்தான், தமிழினமும், தமிழிலக்கியங்களும் பெருமளவில் அழிந்தன என்றும் தன் ஆய்வினைத் தொடர்கிற நூலாசிரியர், **நாஞ்சில் நாடு என்பது அகஸ்தீஸ்வரம், தோவாளைத் தாலுகாப்** பகுதிகளென்றும் உறுதிபடக் கூறும் ஆசிரியர், மலைநாட்டின் திருநந்திக்கரையிலிருந்து தோவாளைத் தாலுகா வரையிலான பகுதி வள்ளுவ நாடு என்று அழைக்கப்பட்டது எனும் சுவையான தகவலையும் தருகிறார். அதற்குரிய கல்வெட்டுச் சான்றுகளையும் மிக விளக்கமாக எடுத்துரைக்கிறார்.

வள்ளுவர் பிறப்பு, அவரது குலம் பற்றி, கவிமணி அவர்களின் பாடல்களையும், ஜி.யு.போப் அவர்களின் கருத்தினையும் எடுத்துக்காட்டியுள்ள ஆசிரியர், அபிதான சிந்தாமணி, வள்ளுவரை எப்படி இனம் காட்டுகிறது என்பதையும் விளக்குகிறார்.

மேலை நாட்டு அறிஞர்கள் பலர் திருக்குறளின் ஆழத்தை உணர்ந்து போற்றிய செய்திகளையெல்லாம் அழகுறத் திரட்டிக் கொடுத்திருக்கும் நூலாசிரியர் தமிழர் வாழ்வு, தமிழகத்தின் பெருமை, இவற்றிற்குச் சிறப்புச் சேர்க்கும் திருவள்ளுவர் பற்றியும், அவரை இந்த அவனிக்கு அளித்த தென்பாண்டி நாட்டின் பல்வேறு சிறப்புகளையும் பல்வேறு சான்றுகளுடனும், காலக் கணக்குடனும் விளக்கியிருக்கும் பாங்கு, அவர் எவ்வளவு கடுமையாக உழைத்து, ஆதாரங்களைத் திரட்டி, திருவள்ளுவரை ஆய்ந்து விளக்கியதன் வாயிலாக, தமிழ் மற்றும் தமிழரின் பெருமைக்கு மேலும் ஒரு அணிகலனாக இந்நூலைப் படைத்திருக்கிறார் என்பதை உணரச் செய்கிறது.

தமிழறிஞர்களும், தமிழ் ஆர்வலர்களும் இந்நூலினை, தமிழர்தம் பண்டையப் பெருமையையும் சிறப்பையும் உணர்ந்து, வெளியுலகுக்கு உணர்த்திடும் கருவியாகப் பயன்படுத்த வேண்டுமென எண்ணுகிறேன்.

நூலாசிரியர் திரு கேசவ சுப்பையா அவர்களது தமிழ்ப்பணி செவ்வனே தொடர அன்பு வாழ்த்துக்கள்.

சக்தி நிலையம்
சென்னை

நா.மகாலிங்கம்



# அணிந்துரை

'தென்பாண்டி தந்த திருவள்ளுவர்' என்ற நூலை ஆசிய நட்சத்திரம் "திருக்குறள் ஞாயிறு" கேசவ சுப்பையா எழுதி நிறைவேற்றியுள்ளார். தற்காலத் தமிழகம் பண்பாட்டுச் சிதைவிலிருப்பதை உணர்ந்து பல்வேறு சமூக இயக்கங்களுடன் இணைந்தும், நிறுவியும் சமுதாய நலப்பணியில் அர்ப்பணித்து வாழ்ந்து கொண்டிருக்கிறார். 1963 முதல் திருக்குறள் மூலம் தொண்டு செய்து வரும் சிறப்புக்குரியவராவர். திருக்குறள் மூலமும் திருவள்ளுவர் தந்த திருவள்ளுவம் மூலமும், திருமூலரின் திருமந்திரம் மூலமும் பொருள் வளம் பெருக, பண்பாடு சிதைவதை திருவள்ளுவம் மூலம் தவிர்க்கலாம் என்று செயல்பட்டு வரும் அவர் தனது 83-ஆவது வயதிலும் உறுதியான நம்பிக்கையில் 'தென்பாண்டி தந்த திருவள்ளுவர்' என்ற ஓர் அரிய நூலை எழுதி நிறைவு செய்துள்ளார்.

அந்த நூலில் உள்ளுரை 38 தலைப்புக்களைக் கொண்டதாக உள்ளது; வள்ளுவர் காலத்துத் தமிழகத்தையும் வள்ளுவர் தொடர்பான பன்முக ஆய்வுக்கும் இன்றைய குமரி மாவட்டத்தின் பண்டைய நிலை, வள்ளுவர் பெயர் தொடர்பான இடவிளக்கங்கள் திருவள்ளுவரின் காலமும் இடமும் போன்ற பல்முனைக் களங்களுக்குத் தொடக்க உரையாக அமைகின்ற நூலில் தமிழினத்தின் - மானுடத்தின் பிறப்பிடமாகிய் குமரிக் கண்டத்துக்கு விளக்கமளித்துள்ளார்.

ஏழு நாகரிகங்களில் ஐந்து நாகரிகக்களங்களைத் தொல்லியலார் ஆய்வுக்களங்களின் நாகரிகக்களங்களாக்கினர் - இதுவரை அடைந்திருக்கின்ற அகழாய்வு வரலாற்றில் தொல் இந்தியப் பண்பாடு தலையாய தமிழர்ப் பண்பாடு என்ற முடிவு உறுதியாகியுள்ளது. அதன் ஊற்றுக்கால் குமரிக்கண்டம் என்பதை இந்திய பாகத புராணமும், சுமேரியர்களின் கில்சுமான் காவியமும்,

பைபிள் பழைய ஏற்பாட்டில் உலக மற்றும் மானுடத் தோற்றமும் விளக்குகின்றன. சிலம்பிலும் சங்க இலக்கியத்திலும் விட்டுணுபுராணம் பாரத தேசவர்ணனையில் இறுதிப்பகுதி குமரிக் கண்டத்தினுள் நுழைவதைக் காணலாம். மாந்தரின் பிறப்பிடத்தை மறந்துவிடாதீர்கள் அது பல்முனைத் தாக்குதல் களத்திலிருக்கின்றது என்பதை நினைவுபடுத்தும் வண்ணம் **கடல்கொண்ட குமரிக்கண்டம்** என்ற தலைப்பில் மூன்று பக்கங்களில் தமிழர் தொடர்பை அடையாளம் காட்டியுள்ளார்.

குமரிக்கண்ட கோட்பாட்டினை உடைக்கும் வண்ணம் ஆங்கிலத்தில் சில நூற்கள் வந்துள்ளன. பண்டைய கிரேக்க நகரங்களைக்காண 'இவான்சு' அர்ப்பணித்தது மாதிரி **கபாடபுரம், தென்மதுரை**, குமரிமாவட்டத்தின் கடலோரத்தின் (இராசாக்கமங்கலம்) தென்மேற்கிலுள்ள அப்பால் **ஆயிரம் கால் பொழிமுகம்** நினைவுகள் ஆழ்கடலாய்வுக்கு அழைத்த வண்ணமுள்ளன. **முக்கடல்களின் மர்மம்** என்று ருசிய நாட்டு கோந்திரத்தோவ் முகப்புரை எழுதிய பின்னரும் இந்திய தொல்லியல்துறை அசையவில்லை. இப்பிரச்சனையை மூடி மறைக்கும் வண்ணம் கடற்கரை சார்ந்த ஒரு **போலிக் கடலாய்வு தமிழ்** அறிவுலகை மனமாற்றம் செய்து கொண்டிருக்கிறது. நூலாசிரியரின் உள்ளடக்கத்தில் மூன்றாவது தலைப்பில் தோய்ந்து போனதும் நவீன சவால்களால் மடக்கப்படுவதுமான குமரிக்கண்ட வரலாற்று மீட்புக்கு கடலடி ஆய்வின் அவசரத்தேவையை நினைவுபடுத்துவதாக உள்ளது.

இயல் நான்கில் **வள்ளுவர்பற்றித் தோற்றுவிக்கப்பட்ட கதைகளின் விமர்சனங்களும் சீர்தூக்குதலும்** நிகழ்ந்துள்ளன. வள்ளுவநாடு என்பதில் **சோழர்கால நிர்வாகப் பிரிவிலுள்ள வள்ளுவநாடு கேரளத்திலுள்ள வள்ளுவ நாட்டுக்கும் பொருத்தமான விளக்கங்கள் தந்துள்ளார்**. இன்றைய கேரள மாநிலத்தில் வடக்கில் தீயர்களும், வில்லவர்களும், வேதியர்கள் நாடோடி நிலையில்

நுழையும் முன்னரே பண்பாடுடையவர்களாக வாழ்ந்திருந்தனர். வில்லவர்களின் ஆட்சி மத்திய காலத்தில் முற்பகுதியில் சில நூற்றாண்டுகள் அரச பரம்பரையினர் வழி ஆண்டு வந்தனர். வில்லவர்களை வேதியர்களின் மொழி வழக்கத்தின்படி பல்லவர்கள் என்று அழைக்கலாயினர். அதனால் **வில்லவநாடு வல்லபநாடாகி இப்பொழுது வரலாற்று நூற்களில் வள்ளுவநாடு என இடம் பெற்றுள்ளது** என்று அறிக.

**திருவள்ளுவரின் காலக்கணிப்பு** 1921-ல் நிகழ்ந்தது; இறுதி முடிவு தமிழ் வளர்த்த **பச்சையப்பன் கல்லூரியில்** வைத்து எடுக்கப்பட்டது. தமிழ்மொழியின் மீட்புப் பணியை 1900த்துக்குப்பின் துவக்கி 1916 முதல் தீவிரப்படுத்திய பேரறிவாளரும் சாதனையாளருமான **மறைமலையடிகளாரின் தலைமையில்** கூடிய தமிழறிஞர்கள் **திருவள்ளுவர் பிறந்தது கி.மு. 31**-ஆம் ஆண்டு என அறிவித்தனர். அதைத் தமிழ் உலகு ஏற்று அதன் அடிப்படையில் திருவள்ளுவராண்டு துவக்கப்பட்டு புதிய ஆண்டுக்கணிப்பு நடைமுறையில் இருந்து வருகிறது; தமிழர்களுக்கும் தமிழகத்துக்கும் அஃது பெருமை சேர்த்துக் கொண்டிருக்கின்றது.

திருவள்ளுவரின் பிறந்த நாள் கி.மு. 31 என நிலைநாட்டப் பெற்றது. ஆனால் அவருடைய பிறப்பிடம் பற்றித் தேடியவர்கள் வடக்கில் **திருவள்ளூர்** முதல் தெற்கில் கன்னியாகுமரி மாவட்டத்தில் கல்குளம் தாலுகாவில் முட்டம் கடற்கரைக்கு அருகில் **திருநயினார்க்குறிச்சி** வரை தேடியுள்ளனர்.

திருவள்ளுவரின் பிறப்பிடம் பற்றிய கூட்டு முயற்சி ஆய்வு நிகழவில்லை. கேசவசுப்பையாவின் மேலே குறிப்பிட்ட நூலில் அடி நீரோட்டமாக திருவள்ளுவரின் பிறப்பிடம் பற்றிய சிந்தனையோட்டம்

இயக்கம் பெறுவதைக் காணலாம். திருவள்ளுவரின் பிறப்பிடம் பற்றிக் குறிப்பிடப்படும் எல்லா இடங்களையும் ஆய்வுக்களத்தில் ஏற்றியுள்ளார்.

சென்னை மயிலாப்பூர் வரையுள்ள இடங்களை ஆய்வு செய்ய களத்திலேற்றியுள்ளார். கி.பி 2000த்துக்கு முன்னும் பின்னரும் **திருவள்ளுவர் பிறந்த இடம்** என்று அதிகமாகப் பேசப்பட்ட இடம் ***திருநயினார்குறிச்சி*** என்றதை முன்னர்க்கண்டோம். திருக்குறள் சுப்பையா அவர்கள் கல்வெட்டாதாரங்களைப் பயன்படுத்தி **திருநாயனார்குறிச்சி சிவவழிபாடுடைய** இடம் எனக் கண்டறிந்து கள ஆய்வால் அக்கோட்பாட்டினை நிராகரித்துள்ளார்.

முனைவர் **கேசவசுப்பையாவின் ஆய்வின்படி** தென்பாண்டி நாட்டில் மலை சார்ந்த வேளாணமைப் பகுதியிலிருக்கும் **திருமடவிளாகம்** என்ற குறத்தியறையில் விரிவான கள ஆய்வு நடத்தியுள்ளார். அப்பகுதியில் **சமண சமயத்தின் தொடர்புக்கும் ஔவையார் தொடர்புக்கும்** தொல்லியல் சான்றுகள் உள்ளன. அப்பகுதி சேரர்களுக்குட்பட்ட ஆய் மன்னர்களுடைய ஆட்சிப்பகுதியிலிருந்து பாண்டியர்களின் **தென்பாண்டி நாட்டின் ஓரத்தில் மலைகள் சார்ந்த இடமாகவும் வேளாண் பகுதியாகவும்** விளங்கியது.

கி.பி. முதல் நூற்றாண்டின் நடுப்பகுதியில் திருவள்ளுவரின் சமகாலத்தவரான மலபாரின் வடக்கற்றத்தில், முதல் வேதியர் குடியிருப்பாகவிருந்த பெரும் செல்லூருடனும் பாண்டியர் தலைநகருடனும் தொடர்புடைய **மருதன் இளநாகரின்** பின்வரும் பாடலில் "**உயர் சிமைய நாஞ்சில் பொருந**" என்ற பாடலையும் அதுபோன்று ஔவையார் பாடும் பாடலையும் ஒரு **சிறைப் பெரியனார்** பாடும் பாடலையும் **கருவூர் கந்தப்பிள்ளை** ஆகியோரின் பாடலில்

"**நாஞ்சில் பொருந**" என்று வருவதை அடிப்படையாக வைத்து பொருநர்கள் வீரமரபுடைய போர்கள் தொடர்புடையவர்களாவார்கள்; மன்னவர்களுக்கு நிமித்திகம் சொன்னவர்களும் **மக்களுக்குச் சோதிடம் பார்த்தவர்களும் வள்ளுவர்கள்** என அறியப்பட்டவர்கள் ஆவார்கள். தெய்வப்புலவராக கோபுரமேறிய திருவள்ளுவருடைய பிறப்பிடம் குறத்தியறையே என நிறுவியுள்ளார். **இதைத் துருப்புச்சீட்டாக** எடுத்து திருவள்ளுவரின் காலத்துக்கு **தமிழறிஞர்கள் கூடி இறுதி முடிவை அறிவித்தால் திருவள்ளுவரின் பிறப்பிடம்** பற்றிய தீர்வுக்கு நிறைவுரையாக அமையும்.

வரலாற்று ஞாயிறு **வேதி.செல்லம்**
தலைவர் தொல்தமிழர் பண்பாட்டு
வரலாற்று அதிநுட்ப ஆய்வு மையம், சென்னை

# அணிந்துரை



உயர்திரு **திருக்குறள் டாக்டர் கேசவ சுப்பையா** அவர்களின் படைப்பான "**தென் பாண்டி தந்த திருவள்ளுவர்**" நூலைப் படித்தேன். திருவள்ளுவர் திருநயினார் குறிச்சியில் பிறந்தார். குறுநில மன்னராக நாடாண்டார் என்று **திரு.சிவ. பத்மனாபன்** நூல் வாயிலாகவும், கட்டுரைகள் வாயிலாகவும் எழுதி, ஒரு சில ஆண்டுகளாகவே இந்தக் கருத்தை வலியுறுத்தி வருகிறார். இதற்கு ஆதாரமாக வரலாற்றுச் சான்றுகளும், கல்வெட்டுகளும், போதிய அளவு இல்லாமல் குறளில் வருகின்ற பல சொற்கள், தற்போது குமரி மாவட்டத்தில வழக்கிலிருப்பதாகச் சுட்டிக் காட்டி இதன் அடிப்படையில் திருவள்ளுவர் கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள **திருநயினார் குறிச்சியில்** பிறந்தார். அவர் இங்கு ஓர் **குறுநில மன்னராக** வாழ்ந்தார் எனக் கூறுகிறார்."

டாக்டர் கேசவ சுப்பையா இக்கருத்தினை வரலாற்றுச் சான்றுகளுடனும், கள ஆய்வின் மூலமும் மறுப்பது மட்டுமின்றி, திரு. சிவ பத்மனாபனின் கருத்தை எந்த அடிப்படையிலும் ஏற்றுக் கொள்ள இயலாது என்பதை தீவிர ஆய்வின் மூலம் மறுக்கிறார். முதன் முதலாக சேர, சோழ, பாண்டிய மன்னாகள் வரலாறுகளை அடிப்படை வரலாற்றுச் சான்றுகளோடு சேர நாட்டிலும் சரி, பாண்டிய நாட்டிலும் சரி, சோழ நாட்டிலும் சரி, தமிழ்நாட்டிலும் எங்கும் வள்ளுவநாடு என்ற ஒரு நாட்டில் **திருவள்ளுவர் குறுநில மன்னராக** ஆட்சி செய்து வாழ்ந்ததாகச் சான்றுகள் இல்லை என்பதைத் தொடக்க கால பண்டைத் தமிழகத்திலிருந்து சேர, சோழ, பாண்டிய நாடுகளின் வரலாற்றுப் பரம்பரைகள், திருவள்ளுவர் காலம், சங்க காலப் பாண்டியர்கள், சோழ மன்னர்கள் பரம்பரை, சேரமன்னர்கள் பரம்பரை முதற்கொண்டு, திருக்குறள் அச்சிட்ட வரலாறு வரையிலும், மிக ஆழமாக கற்பனை வரலாறாக இல்லாமல், வரலாற்றுச் சான்றுகள், கள ஆய்வு,

வள்ளுவரைப் பற்றிய அறிஞா பெருமக்கள் பலருடைய கருத்துக்களையும் அழகாக எடுத்துரைக்கிறார்.

வரலாற்றை எழுதும் போது, வரலாற்றுச் சான்றுகள், கல்வெட்டுகள், நாணயங்கள், சிற்பங்கள் இவைகளை விஞ்ஞான ரீதியில் ஆய்ந்து, விருப்பு, வெறுப்பின்றி எழுத வேண்டும். **சிவ.பத்மநாபன் கற்பனை ரீதியில் அப்படியும் இருக்கலாம். இப்படியும் இருக்கலாம். இவ்வாறு ஊகிக்க இடமிருக்கிறது என்று கூறுகிறார். இவ்வாறாக வரலாறு எழுதப்படுவது வரலாற்றைக் குழப்புவதாகும்.** இந்நூலாசிரியர் திருவள்ளுவர் திருநயினார் குறிச்சியில் பிறக்கவில்லை. வள்ளுவநாடு என்ற குறுநிலத்திற்கு மன்னராக இருந்ததில்லை என்று ஆணித்தரமாக அடித்துக் கூறுகிறார். வரலாற்றுச் சான்றுகளையும் தருகிறார்.

திருவள்ளுவர் எங்கே பிறந்தார் என்பதை இதுவரையிலும் யாரும் உறுதியாகக் கூறியதில்லை. வள்ளுவரைப் பற்றிய கட்டுக் கதைகளும், கற்பனைச் செய்திகளும் தான் கூறப்பட்டு வருகின்றன. டாக்டர் கேசவசுப்பையா, வள்ளுவரைப் பற்றிய கட்டுக் கதைகளையும், கற்பனைச் செய்திகளையும் அறவே நீக்கி விட்டு, வரலாற்று ரீதியாக ஒரு வரலாற்று ஆசிரியரின் வரலாறு எப்படி எழுதப்படவேண்டுமோ, எப்படி முறைப்படி வரலாறு ஆய்வு செய்யப்பட வேண்டுமோ அப்படி "தென்பாண்டி தந்த திருவள்ளுவர்" என்ற நூலைப் படைத்துள்ளார்.

அன்னார் முயற்சி பாராட்டுக்குரியது, கற்பனைச் செய்திகளுக்கு இடங்கொடுக்காமல் வரலாற்றை வரலாற்றுக் கண் கொண்டு ஆய்வு செய்திருக்கிறார். இந்நூல் திருவள்ளுவரைப் பற்றித் தெரிந்து கொள்ள விரும்பும் ஒவ்வொருவரும் படிக்க வேண்டிய நூல். அன்னாருக்கு எனது மனமார்ந்த பாராட்டுக்கள்.

நாகர்கோவில்

பேரா. **அ. கோவிந்தப் பிள்ளை**, எம்.ஏ.,
முன்னாள் முதலவர், மாட்சிமை தங்கிய மாமன்னர் கல்லூரி,
புதுக்கோட்டை
முன்னாள் கல்லூரிக் கல்வி இணை இயக்குநர்,
திருநெல்வேலி மண்டலம்.
கன்னியாகுமரி மாவட்ட வரலாற்றுப் பண்பாட்டு ஆய்வு மைய நிறுவனத் தலைவர்

# அணிந்துரை



உயர்திரு. முனைவர் **கேசவசுப்பையா** அவர்களின் படைப்பான, '**தென்பாண்டி தந்த திருவள்ளுவர்**' என்னும் ஆய்வு நூலைப் படித்து அகமகிழ்ந்தேன். இந்நூலானது படிப்பவர்களைப் பல்லிடங்களுக்கும் அழைத்துச் சென்று உண்மை வரலாற்றை உணரச் செய்யும் ஓர் உயரிய கருத்துக் கருவூலமாக விளங்குகிறது. உலகப் பொதுமறையாம் திருக்குறளில் அளவற்ற ஆர்வம் கொண்டிருக்கும் இவ்வறிஞர்ப் பெருமகனார், திருக்குறள் ஆசிரியரான திருவள்ளுவரைப் பற்றிய உண்மை வரலாற்றினை உணர்த்தவென எடுத்துக்கொண்ட முயற்சி பாராட்டுவதற்குரியதாகும்.

*நயினாரை நாயனாராக்கித் திருவள்ளுவரின் பிறப்பிடம்* திருநயினார்குறிச்சி என்று காரணம் காட்டிய டாக்டர் **பத்மநாபன்** அவர்களின் **கூற்றைப் பொருளற்றதாக்கிய ஐயா அவர்களின் ஆய்வுத் திறன் வியத்தற்குரியது.** திருவள்ளுவர் மீது தீராத பற்றுக் கொண்டிருக்கும் அறிஞர் பெருமகனார், வள்ளுவர் பற்றிப் பரப்பிவரும் கட்டுக் கதைகளைக் காரணகாரியங்களுடன் களைந்தெறிந்துள்ளார்.

*திருவள்ளுவரின் சிறப்பினைப பற்றிச் சீரிய* பாங்கில் அறிவுறுத்தும் இந்நூலில், **குமரிக் கண்டம்** கடல்கோளால் அழிந்தது என்னும் கருத்தினை வரைபடங்களுடன் விளக்கிக் காட்டியுள்ளது சிந்தனைக்குரியதாகும். அன்றியும் **திருவள்ளுவரின் பிறப்பிடம் பற்றிக் கூறப்பட்டுள்ள கட்டுக்கதைகளையும்** கற்பனைச் செய்திகளையும் அறவே **அகற்றி** வரலாற்று அடிப்படையில் உண்மை நிலையை உணர வைத்துள்ள **ஆசிரியரின் அறிவுத்திறன் பாராட்டுவதற்குரியது**. ஆசிரியர் இது போன்று இன்னும் ஆய்வு நூற்கள் பல எழுதிக் கற்பவர் மனத்தைக் களிப்புறச் செய்ய எல்லாம் வல்ல இறைவன் திருவருள் புரிவாராக.

மணவாளக்குறிச்சி, அன்புடன்,

முதுபெரும் புலவர் வெள்ளிமலை **சிவா**. எம்.ஏ.,
மணக்காட்டுவிளை, பறப்பற்று,
மணவாளகுறிச்சி, கன்னியாகுமரி மாவட்டம்

# அணிந்துரை



திருக்குறளை எழுத்து எண்ணிப்படித்து, ஆழமாக ஆய்வு செய்து, ஐம்பது ஆண்டுகளுக்கு மேல் திருக்குறள் பணியில் ஈடுபட்டு, அதனைப் படைத்த திருவள்ளுவரைப் பற்றிய உண்மையை நிலைநாட்ட முனைப்போடு பாடுபட்டு இன்றும் நம்மோடு பீடு நடைபோடும் **ஆசிய நட்சத்திரம், மதிப்புறு முனைவர் கேசவ சுப்பையா** அவாகள் உருவாக்கிய **தென்பாண்டி தந்த திருவள்ளுவர்** என்ற அற்புதமான படைப்பைப் படிக்கும் வாய்ப்பினைப் பெற்றதை வாழ்வில் பெரும் வாய்ப்பாகக் கருதுகின்றேன். அவர்கள் 1963-இல் இருந்து சமய வகுப்புகள், குறள் விளக்கச் சொற்பொழிவுகள், திருக்குறள் ஆய்வரங்குகள், மாநாடுகள், கருத்தரங்குகள் நடத்தி, **திருக்குறள் பணி** செய்து வருகிறார்கள். 1996இல் **"குமரி மாவட்டத்திருக்குறள் ஆய்வு மையம்"** தொடங்கி தொடர்ந்து திருக்குறள் போட்டிகள், பரிசுகள் சான்றிதழ்கள், விருதுகள் வழங்கி வருகிறார்கள். திருக்குறள் என்ற விருதையும், திருக்குறள் திலகம் என்ற விருதையும் பெற்றுள்ளார்கள்.

**தென்பாண்டி தந்த திருவள்ளுவர்** என்ற நூலில் உள்ளுரையாக 38 தலைப்புகள் உள்ளன. கடல் கொண்ட குமரிக்கண்டம் முதல் சேர, சோழ, பாண்டிய நில வரைபடங்களோடு, நாஞ்சில் நாட்டு வரைபடமும், கன்னியாகுமரி வரைபடமும், சங்க காலம் முதல் மூவேந்தர்களின் வரலாறும், கல்வெட்டுச் சான்றுகள் யாவையும் சிறப்பாக ஆய்வு செய்து புத்தகத்தை நிறைகுடமாகத் தந்துள்ளார்கள். குறிப்பாக, திருவள்ளுவரையும், திருக்குறளையும் பற்றி வெளிவந்துள்ள முக்கியமான கருத்துக்கள் இந்த நூலில் இடம் பெற்றுள்ளதால் இந்நூல் ஓர் அற்புதமான சிறந்த ஆய்வுநூல் என்றும், ஆராய்ச்சியாளர்களுக்கும் அறிஞா பெருமக்களுக்கும் ஒரு வழிகாட்டியாகவும், பெரும்பயனுள்ள நூலாகவும் அமையும் என்பதனை மகிழ்வோடு பதிவு செய்ய விரும்புகிறேன்.

திருவள்ளுவர் தமிழ்ப்பழங்குடிகளில், வள்ளுவர் குடியில் தோன்றினார் என்று உறுதிப்படுத்தியுள்ளார். மேலும் கி.மு. 50 முதல் கி.பி. 30 வரை அரசாண்ட **பாண்டிய மன்னன் உக்கிரப்பெருவழுதி** நாஞ்சில் நாட்டைக் கைப்பற்றினார் என்றும், அவரது காலத்தில்தான் திருக்குறள் அரங்கேற்றப்பட்டது என்பதற்கு ஆதாரமாக "**கூர்வேல் வழுதி மனமகிழ் தெய்வத் திருவள்ளுவர்**" எனும் கீரந்தையார் பாடலை மேற்கோள் காட்டியுள்ளார்கள்.

ஆய்வின் நோக்கம் உண்மையைக் கண்டறிதல், அதன் அடிப்படையில் ஆய்வு செய்து உண்மைகளை நிலைநாட்டியுள்ளார்கள். தற்கால எழுத்தாளர்களில் சிலர் கட்டுக்கதைகளையும் கற்பனைச் செய்திகளையும் சுய விளம்பரத்துக்காகக் கூறுவதில் தயக்கம் காட்டுவதில்லை. ஒரு பொய்யைப் பலமுறை தொடர்ந்து சொன்னால் மெய்யாகிவிடும் என்ற தவறான எண்ணத்தில் திருவள்ளுவர் பிறந்தது 18-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் உருவான **திருநயினார்குறிச்சி** என்று புனைந்துரையாகச் சொல்லித் திரிபவர்களுக்கு, உண்மையை உணர்த்தியுள்ளார். குமரி மாவட்டத்தில் தோவாளை வட்டத்தில் அழகியபாண்டியபுரம், கடுக்கரை ஊர்களுக்கிடையில் உள்ள **திருமடவிளாகம் குறத்தியறையே திருவள்ளுவரின் சொந்த ஊராகும்** என்ற உண்மையை அகச்சான்றுகளுடனும் புறச்சான்றுகளுடனும் கள ஆய்வுகளுடனும் கல்வெட்டுச் சான்றுகளுடனும் உறுதி செய்துள்ளார்கள். **திருவள்ளுவர் பிறந்தது குறத்தியறையே என்பது நிலைநாட்டப்பட்டதால் இதுவே இறுதியான முடிவு என நம்புகிறேன். இந்த முடிவினை, தமிழ்ச்சமூகமும்** அறிஞர் பெருமக்களும் ஏற்று, **திருக்குறள்** கேசவ சுப்பையா அவர்களைப் பெரிதும் பாராட்டுவார்கள். **இதைப்** போல் தொடர்ந்து பல சீரிய பணிகளைத் தொடர எல்லாம் வல்ல இறைவனை வணங்கி வாழ்த்துகிறேன். வாழ்க பல்லூழி!

சொத்தவிளை
16.07.2014.

**Dr.P.சர்வேஸ்வரன்** M.A., Ph.D., D.L.H.,
பேராசிரியர், வரலாற்றுப்புலம் (பணிநிறைவு)
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

"எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்கும் மனத்தானாம்
மாணா செய்யாமை தலை" (திருக்குறள் 317)

"அருண்மொழிச் செல்வர்" "தமிழ்மாமணி"
"திருக்குறள் ஞாயிறு"
**முனைவர் பா.வளன் அரசு**
3, நெல்லை நயினார் தெரு,
பாளையங்கோட்டை - 627 002.

தலைவர்
உலகத்திருக்குறள் தகவல் மையம்
திருக்குறள் அரசுக் கழகம்
வீரமாமுனிவர் ஆய்வுப் பேரவை

மேனாள் தமிழ்த்துறைத்தலைவர்
தூய யோவான் கல்லூரி,
பாளையங்கோட்டை - 627 002.
தொலைப்பேசி 0462 - 2579967
கைப்பேசி 7598399967

# அணிந்துரை



**திருக்குறள் கேசவ சுப்பையா** அவர்கள் எழுதியுள்ள **தென்பாண்டி தந்த திருவள்ளுவர்** என்னும் நூல் பல புதிய தரவுகளைக் கொண்டுள்ளது. முப்பத்தெட்டு இயல்கள் பெற்றுள்ளது.

கடல் கொண்ட குமரிக்கண்டம் "பஃறுளி ஆற்றுடன் பன்மலை அடுக்கத்துக் குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள" என்னும் சிலப்பதிகார அடிகளால் (11:20-2) புலனாகிறது. இன்று நாம் காணும் குமரி முனையின் தெற்கே முந்நூறு காவதம் தொலைவில் குமரியாறும் எழுநூறு காவதம் தொலைவில் பஃறுளியாறும் இருந்தன என்று கூறுவர்.

கற்றாழை என்னும் இலை மூலிகையின் பெயரே **குமரிக்கண்டம்** என்று அழைப்பதற்கு அடிப்படை ஆகும். கடல்கோளுக்குத் தப்பிய பழந்தமிழ் மக்கள் பழந்தமிழ் நாடாகிய தென்பாண்டி நாட்டில் குடியேறிய செய்தியை **மறைமலை அடிகள்** மொழிந்துள்ளார்.

**உக்கிரப் பெருவழுதி** வென்ற சேரநாட்டுப் பகுதி நாஞ்சில் நாடு ஆயிற்று, அகத்தீசுவரமும் தோவாளையும் அந்நாட்டுப் பகுதிகளாகும். சோழநாட்டுத் தமிழ்வீரன் எலாரா இலங்கையை வென்று அரசு புரிந்துள்ளான் (கி.மு. 205-கி.மு. 161) நாற்பத்தைந்து ஆண்டுகள் ஆட்சி நடத்திய அவன் மரபில் வந்த **ஏலேலசிங்கன் வள்ளலாகவும் திருவள்ளுவரின் மாணவனாகவும்** விளங்கிய செய்தி குறிப்பிடத்தக்கது.

திருக்குறள் 1812 ஆம் ஆண்டு தஞ்சாவூரைச் சார்ந்த **ஞானப்பிரகாசம்** முயற்சியால் மாச தினசரி அச்சுக் கூடத்தில் அம்பலவாணர் மேற்பார்வையுடன் வெளிவந்துள்ளது. சென்னை மாவட்ட ஆட்சியர் **எல்லீசர்** நிறுவிய தமிழ்க் கல்லூரி வழியாக 1825ஆம் ஆண்டு மீண்டும் அச்சிடப்பட்டது. 1831ஆம் ஆண்டு விசாகப் பெருமாள், சரவணப்பெருமாள், வேதகிரியார் போன்றோர் புனைகதைகளைப் பெருக்கியதாக அயோத்திதாசர் விளக்கியுள்ளார்.

பதினைந்தாம் நூற்றாண்டில் தோன்றிய "கபிலர் அகவல்" திருவள்ளுவர் மயிலாப்பூரில் பிறந்ததாகக் குறித்துள்ளது. ஞானாமிர்தம், புலவர் புராணம் ஆகியவை நம்பகத்தன்மையில்லாத பல செய்திகளைப் புகுத்தியுள்ளன.

திருவள்ளுவரின் **திருக்குறள் மாமதுரையில் அரங்கேற்றம்** செய்யப்பட்டது என்பது தெளிவுறுத்தப்பட்டுள்ளது.

நாஞ்சில் பொருநன் பற்றிய செய்தியை ஒரு சிறைப் பெரியனார், மருதன் இளநாகனார், ஔவையார், கருவூர் கந்தனார் ஆகிய நால்வர் தெரிவித்துள்ளனர்.

நாஞ்சில் நாட்டுத் தோவாளை வட்டத்தில் அழகிய பாண்டியபுரம், கடுக்கரை ஆகிய ஊர்களுக்கு இடையே அமைந்த **குறத்தியறை** என்னும் இடமே திருவள்ளுவர் தோன்றிய இடம் என்று திருக்குறள் கேசவ சுப்பையா நிறுவியுள்ளார். கள ஆய்வு மேற்கொண்டும், இலக்கியம் மற்றும் கல்வெட்டுச் சான்றுகள் கொண்டும் நிறுவப்பட்ட இச்செய்தி ஆழ்ந்து சிந்திக்க வைக்கிறது. குமரிக் கண்டத்தில் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தோன்றிய திருவள்ளுவரைப் பற்றிய செய்திக்கூறுகள் பலவற்றுடன் **இந்நூல் வீறுடன்** விளங்குகிறது. ஆசிரியரின் உழைப்பும் விடாமுயற்சியும் வரலாற்று ஆய்வாளர்க்குப் பல புதிய உண்மைகளைப் புலப்படுத்துகின்றன.

12/7/14



## பாராட்டுரை

தமிழ், தமிழ்நாடு, தமிழ்ப்பண்பாடு, திருக்குறள்வழி வாழ்வு என்ற கேட்பாட்டுக்குள் தன்னை அடக்கிக் கொண்டு உலா வருகிறவர் கேசவசுப்பையா. சாதாரண சுப்பையாவாக வாழ்ந்த இப்பெரியாரை இன்று தமிழுலகம் ஆசிய நட்சத்திரம், திருக்குறள் ஞாயிறு, டாக்டர். கேசவ சுப்பையா என்று போற்றும் அளவிற்கு வளர்ந்துள்ளார் என்றால் இவர் பெருமையைப் பாராட்டாமல் இருக்க முடியாது.

நான் அவரிடம் கண்ட உயரிய பண்பு தன் எண்ணத்திற்கேற்ப வரலாறு எழுதாமை அவர்கண்ட முடிவின் தவற்றைச் சுட்டிக்காட்டின் அதனைத் திருத்திக் கொள்ளும் பண்பு. இவ்வரிய பண்புகளால் என் உள்ளத்திலும் பிற அறிஞர்களின் உள்ளங்களிலும் நீங்கா இடம் பிடித்துள்ளார்.

"**தென்பாண்டி தந்த திருவள்ளுவர்**" என்ற இவருடைய நூலின் முதல் கட்டுரை "கடல்கொண்ட குமரிக்கண்டம்" இந்தக் கட்டுரையில் தமிழனின் கண்ணீர்க்காவியம் பதிவு செய்யப்பட்டுள்ளது. ஆதிமனிதன் தோன்றிய இடமாகவும், உலக நாகரிகத்தின் தொட்டிலாகவும் விளங்கிய குமரிக்கண்டம் ஆழிப்பேரலையால் அழிவுற்றது. இதனால் புதிதாகத் தோன்றிய இமயமலையைத் தமதாக்கிக் கொண்டான் தமிழன். இதனை,

"தென்குமரி வட பெருங்கல்
குண குட கடலா எல்லை"

(மதுரைக் காஞ்சி வரிகள் 70, 71 புறம் 17 வரிகள் 1,2)

"வடதிசை எல்லை இமயமாகத்
தென்னாங் குமரியொ(டு) ஆயிடை"

(பத்துப்பாட்டு 43 வரிகள் 7,8)

"வாடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்
தெனாஅது உருகெழு குமரியின் தெற்கும்
குணாஅது கரைபொரு தொடுகடல் குணக்கும்
குடாஅது தொன்றுமுதிர் பெளவத்தின் குடக்கும்"

(புறநானூறு பாட்டு 6 வரிகள் 1-4)

என்று சங்கப் பாடல்கள் தமிழக எல்லையைக் கூறுகின்றன. இவை போன்ற செய்திகளைத்தந்து இறுதியில் எந்தச் சாதியென்றுகூற அடிப்படைச் சான்றுகள் இல்லையென்று ஆசிரியர்கள் கூறுவது பாராட்டத்தக்கது. அவரை ஏதாவது ஒரு இனத்தில் சேர்க்க வேண்டுமென்று சொன்னால் வள்ளுவ இனத்தில் சேர்க்கலாம். அந்த இனம் பறையர் இனத்தின் ஒரு பிரிவாக இன்று காணப்படுகிறது. சங்க காலத்தில் உழவுத்தொழிலும், நிலமும் அவர்களிடமே இருந்தது. இன்று நிலமில்லா உழவர்களாகக் காணப்படுகிறார்கள்.

திருக்குறளை எல்லா மதத்தவர்களும் தங்கள் மதம்சார்ந்த நூல் என்று கூறுகிறார்கள். அக்கருத்துக்களையெல்லாம் நூலாசிரியர் தொகுத்துத் தந்துள்ளது நூலுக்குப் பெருமை சேர்ப்பதாக உள்ளது.

வள்ளுவநாடு, வள்ளுவநாட்டு முட்டம் எது, "திருவள்ளுவர் காலமும் வள்ளுவநாடும்", மேல்நாட்டு அறிஞர்கள் உள்ளங்களில் திருவள்ளுவர், போன்ற செய்திகள் வள்ளுவரைப்பற்றி அறிந்து கொள்வதற்கு வரலாற்று உலகுக்கு இது ஒரு கையேடாக உதவும் என்பதில் ஐயமில்லை.

வள்ளுவர் பிறந்தகம் திருநயினார்குறிச்சி என்று சிலர் சுட்டுகின்றனர். இது தவறுதலான கூற்று. திருநயினார்குறிச்சியின் பழைய பெயர் கடிகைப்பட்டினம். அங்குப் பிற்காலச் சோழர்களால்

ஒரு கோயில் கட்டப்பட்டுள்ளது. அந்தக் கோயிலுக்குக் கடிகைப்பட்டின கறைகண்டேஸ்வரர் கோயில் என்று பெயர். ஏறத்தாழ 18-ஆம் நூற்றாண்டுக்குப்பின் அக்கோயில் இருந்த இடம் திருநயினார் குறிச்சி என்று பெயர் பெற்றது. திருநயினார்குறிச்சி திருவள்ளுவர் பிறந்த இடம் என்றால் திருவள்ளுவர் காலம் 18-ஆம் நூற்றாண்டு என்று ஆகிவிடும். கி.மு. -இல் பிறந்த திருவள்ளுவரை கி.பி.இல் சேர்ப்பது உலக மகா பிழையாகும். அந்தப் பிழையிலிருந்து திருவள்ளுவர் காலத்தினைக் காப்பாற்றிய பெருமை அறிஞர் கேசவசுப்பையா ஐயாவையே சாரும்.

நல்லூர் ஓலைச்சுவடியை ஆய்வு செய்து உண்மை நிலையை உலகுக்கு உணர்த்திய நூலாசிரியரை எப்படிப் பாராட்டினாலும் தகும்.

திருக்குறள் ஓலைச்சுவடியைக் கண்டுபிடித்தேன் என்று உரைத்தவர்கள் உரைத்தவை அனைத்தும் பொய்யுரை என்பதை இந்த நூல் கலங்கரை விளக்கமாக நின்று தெளிவுபடுத்துகிறது.

மொத்தத்தில் இந்த நூல் திருவள்ளுவரைப் பற்றிய பிழையான ஆய்வுகளைத் திருத்தி அமைக்கும் ஒரு வரலாற்றுக் களஞ்சியமாகக் காட்சி தருகிறது. இந்நூல் தமிழ் உலகுக்குக் கிடைத்த அரிய பொக்கிஷமாகக் காட்சி தருகிறது. தமிழ்கூறும் நல்லுலகம் இந்நூலை வரவேற்கும் என்பதில் ஐயமில்லை. உண்மையை உலகுக்கு உணர்த்தும் ஐயா அவர்களை நெஞ்சாரப் பாராட்டுகிறேன்.

இவண்,

பேரா. **Dr. மு.ஆல்பென்ஸ் நத்தானியேல்**, M.A., B.O.L., Ph.D.,
அமைப்பாளர்,
திருவள்ளுவர் அறக்கட்டளை,
திருக்குறள், இலீபுரம்,
கன்னியாகுமரி.



# அணிந்துரை

**ஆசிய ஒளி மீனின் அளப்பரும் புலமை**
**அறிஞர் ஔவை நடராசன்**
**(முன்னாள் துணைவேந்தர்)**

யாமறிந்த புலவரிலே கம்பரைப்போல் வள்ளுவர்போல் இளங்கோவைப்போல் பூமிதனில் கண்டதில்லை என்ற தொடரமைப்பால் சோழ, பாண்டிய, சேர நாடுகளைக் குறிப்பால் அறியலாம் என்பர். அவ்வகையில் தென்பாண்டி நாட்டுத் தென்கோடியில் திருவள்ளுவர் வாழ்ந்து வழங்கிய திருக்குறளைத் தலைமேற்கொண்டு தனிப்பெரும் தொண்டாற்றி வரும் அறிஞர் கேசவ சுப்பையா அவர்களைப் பாராட்டி மகிழ்கிறேன். எங்கும் எதிலும் திருக்குறள் நலம் காணும் திருக்குறள் ஞாயிறாகத் திகழும் கேசவ சுப்பையா அவர்கள் தம் தளர்ந்த நிலையிலும் இவ்வாய்வு நூலை வழங்குவது போற்றத் தக்கதாகும். நாஞ்சில் நாடு தொன்மையும் பெருமிதமும் வாய்ந்ததாகும். உயர்சிமைய நாஞ்சில் என சங்க இலக்கியப் பாடல் குறிக்கிறது. முனைவர் கேசவ சுப்பையா தென்பாண்டி நாட்டில் மலை சார்ந்த வேளாண்மைப் பகுதி விளங்கும் திருமட வளாகத்தில் கள ஆய்வு நடத்தியுள்ளார். திருவள்ளுவர் காலத்தைப் பற்றிய தெளிவான வரையறைத் திகழ்வது போலத் திருவள்ளுவர் பிறந்து வளர்ந்த பேரூரை அரிதின்முயன்று ஆய்வது சிறப்பீனும் செம்மையுடையதாகும். கடல் கொண்ட தென்குமரி நாட்டு அமைப்பும் சேர சோழ பாண்டிய நில வரைபடங்களும் கல்வெட்டுச் சான்றுகளும் இந்நூலில் மல்கிக் கிடக்கின்றன. உண்மையைக் கண்டறிய ஓயாது உழைக்கும் உயர்பெரும் புலமையின் விளக்கமாகத் தென்பாண்டி தந்த திருவள்ளுவர் என்ற இந்நூல் அமைகின்றது.

வாழ்க புலவர் கேசவ சுப்பையா என வாழ்த்துவதோடு நுண்மாண் நுழைபுலம் கொண்ட பன்மாண் ஆய்வின் பெட்டகமாகத் திகழும் இந்நூல் சாலச் சிறந்ததாகும்.

'காலத்திற் கேற்ற வாறே கருதுவர் நூல்கள் செய்யக்
காலத்திற் கேற்ற வாறே கருத்தெலாம் அமையும் நூலில்
காலத்திற் கொப்பி லா நூல் கனவிலும் தோன்றல் இல்லை
காலத்தின் கோல மெல்லாம் காணலாம் நூலில் என்பர்'

என்பதுபோல ஆய்வின் ஆழத்தை யாவரே அளவிட்டுரைப்பார்.

**DIOCESE OF KOTTAR**



Most Rev. Peter Remigius D.D.
Bishop of Kottar

Bishop's House,
P.B. No:17, Nagercoil - 629 001.
Kanyakumari District, Tamil Nadu, India.
Off : +91 - 4652-278343, 279152, 279933
Per : +91 - 4652-278868
E-mail : peterremigius@gmail.com



# அணிந்துரை

"தென்பாண்டி தந்த திருவள்ளுவர்" என்ற நூலை வடிவமைத்து தந்துள்ள ஆசிய நட்சத்திரம் டாக்டர் திருக்குறள் கேசவ சுப்பையா அவர்களை வாழ்த்துவது எமக்கு மட்டற்ற மகிழ்ச்சியைத் தருகிறது. திருவள்ளுவர் பற்றிய அனைத்துச் செய்திகளையும் தொகுத்தும், வகுத்தும் எழுதியுள்ளது வாசிப்பவர்களுக்குத் தேனாக அமைந்துள்ளது. இதில் வள்ளுவரின் வரலாறு மட்டுமின்றி அவர் வாழ்ந்த பகுதியின் வரலாற்றினைக் கணித்துள்ள சிறப்பு மிக அருமையானது. அதோடு மறைந்துபோன பல நாடுகளையும் தொகுத்து வழங்கியுள்ளார். ஆசிரியர் பல நூல்களை, பாருக்கு வழங்கியுள்ளதால் தமிழ் எழுத்துலகம் இவரை நன்கு அறியும். இந்நூலினை வாங்கிப் பயன்பெறும் அனைவரும் தமிழர் தம் பண்டையப் பெருமையையும் சிறப்பையும் உணர்ந்து வெளியுலகுக்கு உணர்த்திடும் கருவியாகத் திகழ வேண்டுமென்று கேட்டு, ஆசிரியரின் பணி சிறக்க வாழ்த்தி ஆசி வழங்குகிறேன்.

† ஆயர் பீட்டர் ரெமிஜியுஸ்
கோட்டாறு ஆயர்



# அணிந்துரை



கீழப்பாவூர் **ஆ.சண்முகையா,** M.A., M.Phil., D.J.,
நிகழ்ச்சிப் பொறுப்பாளர்
அகில இந்திய வானொலி
நாகர்கோவில். 16.08.2014

'உலகின் மூத்தமொழி தமிழ்மொழி
இவள் என்று பிறந்தவள் என்று
இயம்ப இயலாதவளாம் எங்கள் தாய்!'

என்று வியக்கின்றான் மகாகவி சுப்பிரமணிய பாரதி.

பல்வேறு மாற்றங்களைக் கண்டபோதும், என்றும் குன்றாத இளமையோடு வளரும் மொழி நம் தாய்மொழி.

ஆகவே, தான் மனோன்மணியம் சுந்தரனார்,
'ஆரியம் போல் உலக வழக்கழிந்து ஒழிந்து
சிதையா உன் சீரிளமைத் திறம்வியந்து
செயல் மறந்து வாழ்த்துதுமே!' என்று வாழ்த்துகிறார்.

மூத்த இலக்கண நூலாகிய தொல்காப்பியம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க் கணக்கு நூல்கள், இறையனார் களவியலுரை, பெருங்கதை போன்ற இலக்கியங்கள் தமிழ்மொழியின் தொன்மைக்குச் சான்றாகத் திகழ்கின்றன.

தமிழ்மொழியின் பழைய நிலப்பரப்பு முழுதும் கடலில் மூழ்கிவிட்டது.

கன்னியாகுமரிக்குத் தெற்கே ஆப்பிரிக்கா கண்டம் வரை நீண்டிருந்த நிலப்பரப்பில் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழ்மொழி ஓங்கி உலகளந்த உயர்தனிச் செம்மொழியாகக் கோலோச்சிய செய்திகளை இலக்கியங்களிலிருந்து நாம் அறிய முடிகிறது.

பஃறுளி ஆறும், பன்மலை அடுக்கமும், குமரிக்கோடும் ஆழிப்பேரலையின் ஊழித் தாண்டவத்தில் கடலுக்கடியில் அமிழ்ந்து விட்டன.

அதன் எச்சமாகத் திகழும் நிலப்பரப்பாக இருப்பதே இன்றைய கன்னியாகுமரி மாவட்டம் . . . .

தென்னாடுடைய சிவனே போற்றி . . . .

எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி . . . . என்று தென்னாடு தந்த சிவனைப் பாடுகிறார் மாணிக்க வாசகர் .

திருவள்ளுவர், தனது திருக்குறளில் இல்வாழ்க்கை அதிகாரத்தில்,

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்
ஐம்புலத்தா றோம்பல் தலை . .

என்கிறார்.

இதில், 'தென்புலத்தார்' என்ற சொல் நம்மைச் சிந்திக்க வைக்கும் சொல்லாக அமைகிறது.

கடல்கோளால் சிக்கிய தமிழர்களிலிருந்து மீண்டு, புலம் பெயர்ந்த நம் முன்னோர்களையே அவர் 'தென்புலத்தார்' என்கிறார்.

இந்தத்தென்புலத்தாரால் மீண்டும் எழுந்த, கடல்கொண்ட தென்னாட்டின், எச்சமான பகுதியே கன்னியாகுமரி மாவட்டம்.

தொல்காப்பியர், அதங்கோட்டாசான், திருவள்ளுவர் ஆகியோர் கன்னியாகுமரி மாவட்டத்தில்தான் பிறந்தவர்கள் என்பதை அறிஞர்கள் பலரும் தங்களுக்குத் தெரிந்த இலக்கியச் சான்றுகள், செவி வழிச் செய்திகள், கல்வெட்டுக்கள், ஓலைச்சுவடிகள் இவற்றை ஆதாரங்களாகக் கொண்டு உரைத்து வருகின்றனர்.

மிக நீண்ட காலமாக, திருவள்ளுவர் மைலாப்பூரில்தான் பிறந்தார் என்று அறிஞர்கள் பலர் சொல்லி வந்தபோது, அதை மறுத்து, திருவள்ளுவர் கன்னியாகுமரி மாவட்டத்தில்தான் பிறந்தார்

என்பதை இங்குள்ள வரலாற்று ஆய்வாளர்கள் தங்களின் ஆய்வுகளின் மூலம் உறுதிப்படுத்தியுள்ளனர்.

அதில் ஓர் ஆய்வு, திருவள்ளுவர் திருநயினார்குறிச்சியில் பிறந்தார் என்று குறிப்பிடுகிறது. அதற்கு ஆதாரங்களாகத் திருக்குறளிலுள்ள நூற்றுக்கும் மேற்பட்ட சொற்களை இன்றும் இங்குள்ள மக்கள் பேசி வருவதைக் குறிப்பிடுகிறது. திருவள்ளுவரை 'நாயனார்' என்று அழைப்பதால் திருநாயனார் குறிச்சியே, திருநயினார்குறிச்சி என்று மருவியிருக்க வேண்டும் என்றும் கூறுகிறது.

இந்த ஆய்வினை மையமாகக் கொண்டு பல்வேறு அறிஞர்கள் திருவள்ளுவரின் பிறப்பிடம் பற்றி மேலும் பல தகவல்களைத் திரட்டி ஒட்டியும், வெட்டியும் கருத்துக்களை எடுத்து வைக்கின்றனர்.

பல்வேறு கருத்துக்கள் வெளிப்பட்டாலும்கூட, எல்லாரும் ஒன்று சேர்ந்து திருவள்ளுவர் கன்னியாகுமரி மாவட்டத்தில்தான் பிறந்தவர் என்பதை ஒட்டுமொத்தமாக ஏற்றுக் கொள்கின்றனர்.

திருவள்ளுவர் பிறந்தது கன்னியாகுமரி மாவட்டமே என்பதில் பிரச்சனை இல்லை. கன்னியாகுமரி மாவட்டத்தில் எந்த ஊர் என்பதில்தான் கருத்து வேறுபாடுகள் உள்ளன.

இச்சூழலில், கற்றுத்துறைபோகிய தமிழ்வித்தகர், அறிஞர், ஆசிய நட்சத்திரம் திருக்குறள் கேசவ சுப்பையா அவர்கள் தமிழ்கூறும் நல்லுலகிற்கு, "தென்பாண்டி தந்த திருவள்ளுவர்" என்ற ஆய்வு நூலைப் படைத்தளித்துள்ளார்.

பல்வேறு இலக்கிய அமைப்புக்கள் உருவாகவும், கலை, இலக்கியப் பற்றுப் பெருகவும் கன்னியாகுமரி மாவட்டத்தில் கடந்த அறுபது ஆண்டுகளுக்கும் மேலாகத் தொடர்ந்து பணியாற்றிவரும் ஆன்றவிந்த கொள்கைச் சான்றோர் அவர்.

அவரது ஒவ்வொரு படைப்பும் ஆழமாகவும், அகலமாகவும், தெளிவாகவும், விரிவாகவும், அழகாகவும் அமைந்தவை.

'தென்பாண்டி தந்த திருவள்ளுவர்' என்ற இந்நூலின் மூலம் தோவாளை, அகத்தீஸ்வரம் வட்டங்களை உள்ளடக்கிய நாஞ்சில் நாட்டிலுள்ள 'குறத்தியறை' என்ற ஊரில்தான் திருவள்ளுவர் பிறந்திருக்க முடியும் என்பதைப் பல்வேறு மேற்கோள்கள், கல்வெட்டுச் செய்திகள், ஆதாரங்களுடன் விளக்கியுள்ளார்.

இந்த ஆய்வு நூலில் 38 தலைப்புக்கள் இடம் பெறுகின்றன. இந்த ஆய்வின் மூலம் வள்ளுவநாடு என்பது எது? புறநானூற்றில் பாடப்படும் நாஞ்சில் வள்ளுவன் யார்? இவற்றிற்கும் திருவள்ளுவருக்கும் என்ன தொடர்பு என்பதை விளக்கும் ஆசிரியர், 'நாஞ்சில் நாடு' பற்றி சங்க இலக்கியங்களில் குறிப்பாக, புறநானூற்றில் குறிப்புகள் இருப்பதால், இன்றைய கன்னியாகுமரி மாவட்டத்தின் தோவாளை, அகத்தீஸ்வரம் வட்டாரப் பகுதிகளே அன்றைய நாஞ்சில் நாடு என்றும். அங்குத்தான் வள்ளுவக்குடி இருந்தது.. அதையொட்டியே குறத்தியறை ஊரும் இருந்தது என்பதை விளக்கியுள்ளார்...

திருக்குறளில் எந்த இடத்திலும் திருவள்ளுவர் தன்னைப் பற்றிக் கூறவில்லை. திருக்குறள் எல்லாருக்கும் பொதுவான உலக இலக்கியம்.

எனவே, காலம் தோறும் திருக்குறளை மையமாகக் கொண்டு பல்வேறு ஆய்வுகள் வர முடிகிறது. அதனால் தமிழ் வளர முடிகிறது...

அந்த வகையில், பேரறிஞர். கேசவ சுப்பையா அவர்கள் படைத்துள்ள இந்நூல் தமிழ் ஆய்வாளர்களைச் சிந்திக்க வைக்கின்ற நூலாகத் திகழ்கிறது.

ஆய்வு என்பது, 'அறிதொறும் அறியாமை கண்டற்றால்' என்று வளர்ந்து விரியக்கூடியது. அப்படிப்பட்ட வளர்ச்சியை, விரிவை இந்நூல் தருகிறது.

ஓர் ஆய்வின் மூலம் ஒரு உண்மையை நிலை நாட்டும் போது எவ்வளவு தரவுகள் தேவைப்படுகின்றன என்பதையும், ஆசிரியரின் கடின உழைப்பையும் வெளிக் கொணர்வதாக இந்நூல் அமைகிறது.

புதிய ஆய்வாளர்களுக்கு வழிகாட்டும் நூல் . . . !

ஒரு முடிவை அப்படியே ஏற்றுக் கொள்ளாமல் விவாதிக்கும் நூல்!

உலகம் ஏற்றுக் கொள்ளும் வகையில் ஓர் உண்மையை நிலைநாட்டும் போது மறு கருத்துக்கு வாய்ப்பில்லாமல் அந்த உண்மை உரைக்கப்பட வேண்டும் என்பதை உறுதி செய்யும் நூல்.

சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லுஞ்சொல் இன்மை அறிந்து!

என்ற வள்ளுவத்திற்கேற்ப ஆய்வு அமைய வேண்டும் என்பதைச் சொல்லும் நூல்.

எல்லாத் தமிழ் அறிஞர்களும்
படிக்க வேண்டிய நல்ல நூல்!

என்றென்றும் அன்புடன்,
**ஆ.சண்முகையா**

# அணிந்துரை



**க.வெங்கடபதி**

மேனாள் இணை அமைச்சர்,

இந்திய அரசு,

ஏ-171, டவர் பிளாக்,

டெய்லர்ஸ் சாலை,

கீழ்ப்பாக்கம், சென்னை - 600 010.

'தென்பாண்டி தந்த திருவள்ளுவர்' என்ற நூலை எழுதிய ஆசிரியர் எனக்கு நன்கு அறிமுகமானவர். அவருடைய பவள விழா நிகழ்ச்சியில் கலந்து கொண்டு உரையாற்றுகின்ற நல்வாய்ப்பினை நான் பெருமையுடன் நினைவு கூர்கிறேன்.1963இல் தொடங்கிய அவருடைய திருக்குறள் பணி, இன்று வரை பல்வேறு முறைகளில் தொடர்ந்து நடைபெற்று வருகிறது என்பது பாராட்டத் தக்கது. அவர் பன்முகத் தோற்றங் கொண்டவர். தமிழாசிரியர்; தொழிற் சங்கத் தலைவர்; சமூகச் சீர்திருத்தவாதி; பல குடும்பங்களுக்கு உதவியாக இருந்து வாழ வைத்தவர்; இசை பயின்றவர்; தேவை கருதி களரி போன்ற சண்டைப் பயிற்சிகளையும் கற்றவர். காட்சிக்கு எளியவர்; கடுஞ்சொல் அற்றவர். அந்தப் பகுதி மக்கள் அனைவராலும் பெருமையாகப் பேசப்படுபவர். எல்லாப் பணிகளிலும் தமிழ்ப் பணியே முதன்மையானது என்று எண்ணிப் பயன் கருதாது உழைத்து வருபவர்.

திருவள்ளுவர் இயற்றிய திருக்குறள் உலகத்தில் தமிழின் பெருமையைப் பறைசாற்றி வருகிறது. சிந்தைக்கினிய, செவிக்கினிய, வாய்க்கினிய திருக்குறளில் இல்லாததில்லை என்று எல்லா அறிஞர்களும் ஒப்புக் கொண்டார்கள். வாழ்க்கையின் விளக்கமாக விளங்குவது திருக்குறளேயாகும். 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' என்ற உயர்ந்த தத்துவத்தை வழங்கியவர் திருவள்ளுவர். 'எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு', என்ற உயர்ந்த பகுத்தறிவுக் கொள்கையைப் பகன்ற பெருமை வள்ளுவனுக்கு உண்டு.

வான்புகழ் வள்ளுவருக்கு, வானுயர 133 அடி உயரச் சிலையை முத்தமிழறிஞர் கலைஞர் அவர்கள் குமரியிலே நிறுவிப் பெருமைப்படுத்தினார். வள்ளுவர் கோட்டம் என்ற பெயரில் ஆசியாவிலேயே மிகப் பெரிய மண்டபமாக அமைத்துச் சிறப்புச் செய்தார். வள்ளுவனின் குறளுக்கு உரை எழுதினார். 'குறளோவியம்' எழுதியதன் மூலம், குவலயம் குறளின் பெருமையை உணரச் செய்தார். இவை வள்ளுவரின் பெருமையை, புகழை என்றும் பறை சாற்றும்.

வள்ளுவரின் திருக்குறளுக்கு உரையெழுதிய ஆசிரியர்களோ, அக்காலத்தில் வாழ்ந்த புலவர்களோ இவருடைய பிறந்த ஊர், வாழ்ந்த இடம் போன்ற குறிப்புகளை எழுதவில்லை. தெளிவான குறிப்புகள் இல்லாததால் அவரவர் கற்பனைக்கேற்ற வகையில் புனைந்துரைக்கத் தொடங்கினர்.

"திருவள்ளுவர் குமரியில் பிறந்தாரா? மயிலையில் பிறந்தாரா? இதனை ஆய்வு செய்ய வேண்டும்" என்ற கருத்தினை முன்னாள் குடியரசுத் தலைவர் மேதகு ஏ.பி.ஜே. அப்துல் கலாம் அவர்கள் 25.05.2009 தினமலர் நாளிதழில் குறிப்பிட்டிருந்தார் என்பதுதான் இவருடைய இந்த நூல் எழுதுவதற்கு உந்துதலாக இருந்தது என்று ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். நூலை எழுதத்தான் அஃது உந்துதலாக இருந்ததே தவிர அதற்கு முன்பே இதற்கான தரவுகளைத் தேடுகின்ற ஆர்வம் மிகுந்திருந்தது என்பதை நான் அவருடைய சந்திப்பின்போது உரையாடலின் மூலம் உணர்ந்திருந்தேன்.

ஆசிரியரின் இப்படைப்பு வள்ளுவரின் பிறந்த ஊர், ஆற்றிய பணி, நூல் இயற்றியது, அவர் மறைந்த இடம் என்பவை குறித்து ஆய்வு செய்வதோடு நில்லாமல், தமிழரின் தோற்றம், அவர்களின் வரலாற்றுச் சிறப்புகள் ஆகியவற்றைக் காலக் குறிப்புகளுடன் தெள்ளத் தெளிவாக எடுத்துக் காட்டியிருப்பது எண்ணி மகிழத் தக்கது.

கள ஆய்வுகள் நடத்துவதற்காக, விடாமுயற்சியோடு, தமிழகத்தின் பல பகுதிகளுக்கும் நேரடியாகச் சென்று, கல்வெட்டுக்களையும் ஆராய்ந்து, தமிழிலக்கியங்களில் பல இடங்களில் சொல்லப்பட்டுள்ள கவிதை வரிகளை எடுத்துக்காட்டி, அவற்றை இயற்றிய ஆசிரியர்களின் காலத்தை வைத்து வள்ளுவரின் பிறந்த ஊர், காலம் ஆகியவற்றைக் கணிக்கும் சிறப்பான உத்தியைக் கணக்காகக் கையாண்டுள்ளார் என்பது உணரப்படுகிறது.

வள்ளுவரைப் பற்றிய பல்வேறு அறிஞர்களின் கருத்துக்களையும், குறிப்புகளையும் வழங்கியதோடு, திருக்குறள் உரையாசிரியப் பெருமக்கள் 274 பேரின் பெயர்களையும் தெளிவாகத் தொகுத்து வழங்கியுள்ளதால் இந்நூல் மிகப் பெரும் தகவற் களஞ்சியமாகவும் பெருமை பெறுகிறது.

உக்கிரப் பெருவழுதி எனும் பாண்டிய மன்னன் காலத்தில் திருக்குறள் மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் அரங்கேறியது என்று கூறுவதோடு, நாஞ்சில் நாடு கி.மு. 3 முதல் கி.பி. 8 வரை பாண்டியரின் ஆளுகைக்கு உட்பட்டிருந்தது எனத் தெரிய வருகிறது என்ற வரலாற்றுக் குறிப்பையும் எடுத்து உரைக்கிறார்.

திருவள்ளுவரின் ஊர் பற்றிய ஆராய்ச்சிக் கண்ணோட்டத்தோடு எழுதப்பட்டிருக்கும் இந்நூல், தமிழர் வரலாற்றின் பெட்டகமாகவும், இலக்கியங்களின் குறிப்பாகவும், தமிழர்களின் தொன்மைச் சிறப்பைக் கூறும் பூங்காவாகவும் திகழ்கிறது எனலாம். செம்மொழித் தமிழுக்கு இது மேலும் பெருமை சேர்க்கும் நூலாக அமையும்.

ஆசிரியரின் அரும்பணி மெச்சத்தக்கது. அவருடைய தமிழ்ப் பணி தொடர்க! ஆன்றவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோனாகிய ஆசிரியரின் புகழ் மேலும் வளர்க!!

தி. வெங்கடபதி

20.07.2014

மேனாள் இணை அமைச்சர்,
இந்திய அரசு.

# வாழ்த்துரை



**சாத்தூர்சேகரன்** எம்.ஏ. (தமிழ்) எம்.ஏ (ஆங்) எம்.ஏ (வரலாறு) எம்.ஏ. (சமூகவியல்) எம்.ஏ (அரசியல்) எம்.பில் (வரலாறு) எம்.ஏ (பொருளா) எம்.ஏ (மொழியியல்) டி.லிட் (USA - Hon.)

தலைவர் பன்னாட்டு மொழி மையம்

தமிழர் தேசிய கட்சி

நெறியாளர் : தமிழர் வரலாற்றுப் பாதுகாப்பு மையம்

'தென்பாண்டி தந்த திருவள்ளுவர்' என்ற அரிய ஆய்வு நூலை தக்க ஆதாரங்களை அள்ளித்தந்த - ஆசிய நட்சத்திரம் டாக்டர் திருக்குறள் கேசவ சுப்பையா அவர்கள் என் நெடுநாள் நண்பர். திருக்குறளுக்காகத் தன் வாழ்வை அர்ப்பணித்துக் கொண்டவர். அவர் கள ஆய்வுடன் தந்த சான்றுகள் என்றும் நின்று பேசும். அவருடைய பல நூல்களில் இது தனித்துவம் நிறைந்தது.

பரபரப்பு அரசியல்வாதிகளைப் போல பரபரப்பு ஆய்வாளர்கள் பலர் இன்று "அவதரித்துள்ளனர்". அத்தகையோர் ஆய்வில் உண்மை இராது. சுயநலமே இருக்கும்.

சான்றாக, சமசுகிருத பண்டிதர்களுக்கு வரலாற்று அறிவோ உண்மையை நாடும் எண்ணமோ கிடையாது. அவ்வப்போது அண்டப் புழுகினையும் ஆகாசப் புழுகினையும் சரமாரியாகக் கொட்டுவர்.

1. ஒருநாள் ஒருபொழுது கூட இந்தியாவிற்குள்ளோ, இந்தியாவிற்கு வெளியிலோ பேசப்படாத 'பொம்மை' மொழியே சமசுகிருதம். இதனை உலக மொழிகளுக்குத் தாய் எனப் பிதற்றித்திரிந்தனர். இந்திய மொழிகளுக்குத் தாய் என்றனர். மொழி அறிஞர்கள் இதனைச் செத்தமொழி என்று ஆராய்ந்து கூறிய பின்னரே அடங்கினர்.

2. இந்த நிமிடம் வரை சமசுகிருதத்திற்கு எழுத்து கிடையாது. எனவே 'எழுதாக்கிளவி' என்றனர். பிற்கால சங்க இலக்கியத்தில் 'எழுதாக்கற்பு' என்றனர். ஆரியர் பேசிவந்த மொழி நாடோடி / ஜிப்சி மக்களுக்கான ரோமானி மொழியே ஆகும். வேத மொழியும் அன்று, சொல்லப்போனால் சமசுகிருதம் அவர்களுடைய மொழியல்ல.

3. உஞ்சவிருத்தியே - இரந்துண்ணும் வழக்கமுடைய தம் உயரிய வாழ்வாகக் கொண்டிருந்த ஆரிய அகதிமக்கள், இங்குள்ள இந்திய அரசர்கள், பெரும் பண்ணையர்களிடம் சேவகம் செய்தே நாளையும் பொழுதையும் நடத்தினர். இந்தியா முழுவதிலும் அக்காலத்தில் தமிழர்களே வாழ்ந்து வந்தனர். தமிழ் அரசர்களே இந்தியா முழுவதையும் ஆண்டு வந்தனர். சிந்து நதிக்கரையில் முதன் முதலாகக் குடியேறிய ஆரியர் - அவர்களுடைய கடவுளாக, அங்கு வாழ்ந்து வந்த தமிழர்களின் கடவுளாகிய பஞ்சபூத இயற்கை கடவுள்களை ஏற்றுக்கொண்டனர். இந்திரன், வருணன் போன்றோர் தமிழரின் கற்பனைக் கடவுள்களே. இவர்களை வேறு எந்த ஐரோப்பிய, ஆசிய மொழிகளிலும் காண முடியாது. ஆகவே தமிழர் கடவுள்களைத் தமதாக்கி வேதத்தை உருவாக்கினர். வேதம் என்ற சொல் கல்வி எனப் பொருள்படும். கல்லாத நாடோடி மக்களே ஆரியர். அவர்களுக்கான கல்வி நூலே வேதங்கள். இவை புனித நூல்கள் அன்று.

4. சாயனர் காலத்தில் (கி.பி. 1500) வடதமிழான பிராகிருத நூல்களை விஜயநகர முட்டாள் அரசுகளை ஏமாற்றி சமசுகிருதத்தில் மொழிமாற்றம் செய்தனர். எழுத்து - வட இந்திய தமிழர்கள் பயன்படுத்திய நகரி எழுத்துக்களைச் செய்து கொண்டனர்.

சமசுகிருதச் சொற்கள் 95% தமிழ்ச்சொற்களே. மீதி 5% சொற்கள் கிரேக்கச் சொற்களே.

இந்தியா முழுவதிலும் இருந்த தமிழர்களே சிவன், விண்ணவன், பார்வதி, இலட்சுமி போன்ற கற்பனைக் கடவுள்களை உருவாக்கி வழிபட்டு வந்தனர். எனவே, இந்து சமயத்திலும் ஆரியரின் பங்கோ அவர்வழிவந்த பிராமணர் பங்கோ எதுவுமே கிடையாது. உண்மைகள் இங்ஙனம் இருக்க, பிராமணப் பண்டிதர்கள் வானத்திற்கும் பூமிக்கும் குதிப்பது ஏன் என்பது அவர்கள் மந்தபுத்திக்கு எட்டாததுவே.

இவ்வாறே திருக்குறள் பற்றியும் திருவள்ளுவர் பற்றியும் அவ்வப்போது 'புஸ்வாணங்களை' விடுவது சில தமிழ்ப் போலி ஆய்வாளர்களின் பொழுதுபோக்கு. எனவே, உண்மை ஆய்வை மேற்கொண்டு தமது முதிர்ந்த அகவையையும் பொருட்படுத்தாது கடும் உழைப்பின் பயனாக அவர் வெளிக்கொண்டு வந்த நூல் தமிழர்களுக்குக் கிடைத்த அரிய கருவூலமாகும். இதற்கு அவரை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

கேசவ சுப்பையா மற்றும் என்போன்றோர்க்கு உண்மையே கடவுள் ஆகும்; உண்மையை ஆராதிப்பது கடவுளை வணங்குவது ஆகும்.

அவரையும் அவர் நூலையும மனதாரப் பாராட்டுகிறேன்.

'தமிழே உலக மொழிகளின் தாய்' என்பதில் அவருக்கு முழு உடன்பாடு. வாழ்க்கையில் அவா மென்மேலும் முன்னேற வாழ்த்துகிறேன்.

இவண்,

20.07.2014

தமிழ்த்தொண்டன்

**சாத்தூர் சேகரன்**

## உள்ளடக்கம்




## ஞாலத்தின் முந்திய நிலை

ஞால நிலப்பாகம் இன்று உள்ளவாறு 5 கண்டங்களாகவும், ஆயிரக்கணக்கான தீவுகளாகவும் தொன்றுதொட்டு இருந்ததில்லை. ஒரு காலத்தில் அது கோண்டவனம் (Gondwana) அங்காரம் (Angarh) பாலதிக்கம் (Baltica) அம்சோனியம் (Amazonia) என்ற நாற்பெரு நிலங்களாகவும், ஒரு சில தீவுகளாகவும் பரந்திருந்தன. காண்டவனம் - ஆப்பிரிக்காவையும், கடகத் திருப்பத்திற்கு (Tropic of cancer) தெற்கிலுள்ள இந்தியாவையும் ஆஸ்திரேலியாவையும்,

அங்காரம் (ஆசியா வடகீழ் பெரும்பகுதியையும்) பாலதிக்கம் வடஅமெரிக்காவையும், வடகீழ்ப்பகுதியையும் கிரீன்லாந்து எனும் பைந்தீவையும், ஐரோப்பாவின் தென்பகுதியையும், அம்சோனியம் - தென் அமெரிக்காவையும் தம்மிடம் கொண்டிருந்தன. அரபிக்கடல் என்றிருந்த இந்துமாக்கடலின் பெரும்பகுதியும் பெருநிலம் பனிமலைத்தொடர் இமயம் அன்று கடலுள் மூழ்கி இருந்தது.

## ஏழு தீவுகள் :

ஒரு காலத்தில் ஞாலம் ஏழு தீவுகளாக இருந்தன. அவை ஒன்றிலொன்று தீர்ந்திருந்தமையால் தீவுகள் எனப்பட்டன. (தீர்வு - தீவு) அவை பெரு நிலப்பகுதி ஆதலால் தீவம் எனப்பட்டது. தீவு - தீவம் என V.R. இராமசந்திர தீட்ஷிதர் வரலாற்று முன்னைத் தென்னிந்தியா (Pre Historic South India) என்ற நூலில் குறிப்பிடுகிறார்.

வடநூலார் இருபுறமும் நீரால் சூழப்பட்டதால் (தீவிபா) என்றனர். தீவு என்பது நாற்புறமும் நீரால் சூழப்பட்டது. தீவும் நிலத்திணையால் (தாவரத்தால்) நிறைந்தது ஒரு மாபெரும் சோலை போல் தோன்றியதால் பொழில் எனப்பட்டது.

நாவலந்தீவு, இறலித்தீவு, இலவந்தீவு, அன்றில்தீவு, குசைத்தீவு, தெங்கத்தீவு, தாமரைத்தீவு என 7 தீவுகள் இருந்தன.

> "நாவலந்தீவே இறலித்தீவே
> குசையின்தீவே; கிரௌஞ்சத்தீவே
> சான்மலித்தீவே; தெங்கின்தீவே
> புக்கரத்தீவே எனத்தீவேழே"

ஏழு தீவும் ஏழ்பொழில் எனப்படும் என்பது திவாகரம், கிரௌஞ்சம் சான்மலி, புட்கரம் என்பன முறையே அன்றில், இலவம், தாமரை என்பவற்றின் வடமொழிப் பெயர்கள். நாவல் என்பதை சம்பு என்று வடமொழியார் மொழி பெயர்த்தனர். அன்றில் என்பது ஒரு பறவையின் பெயர்.

**நாவலந்தீவின் முன் நிலை :**

பனிமலையும் வடஇந்தியாவும் இல்லாத இந்தியப் பகுதி தெற்கில் முழுகிப்போன குமரிக்கண்டத்தோடு அல்லது பழம் பாண்டிய நாட்டோடு தொடர்புடையது.

"பஃறுளியாற்றுடன் பன்மலை அடுக்கத்துக்
குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள"

வடதிசைக் கங்கையும், இமயமும் கொண்டு, தென்திசை ஆண்ட தென்னவன் வாழி" . (சிலம்பு 1-22)

**குமரிக்கண்டம் : (லெமூரியா)** (Lumuria)
மறைந்த குமரிக்கண்டம்

தெற்கே மூழ்கிய இக்கண்டம் ஏறத்தாழ 20500 கல் தென்வடலாக நீண்டிருந்த நிலப்பகுதி. அதன் மேற்குப்பகுதி நெடுங்கடலும் ஒரு மேருமலைத் தொடரும் தொடர்ந்திருந்தது.

"முன்னீர் விழவின் நெடியோன்
நன்னீர் பஃறுளி" (புறம் - 9) நெட்டிமையார்

மாந்தன் இருப்பிடம் :

மாந்தரின் முந்திய இருப்பிடம் இந்துமாக்கடலில் மூழ்கிய ஒரு கண்டம்.

முன்பு வாழ்ந்த பாலுண்ணிகளால் அது இலெமூரியா எனப் பெயர் பெற்றது. சாலித்தீவையும், தென் ஆப்பிரிக்காவையும் தன்னுடன் இணைத்துக் கொண்டிருந்த நாடே குமரிக்கண்டம் எனப்பட்டது. அத்தோற்றம் 50,000 ஆண்டுகளுக்கு முந்தியது. இங்கு வாழ்ந்த குரங்கொத்த உயிர்பற்றி இது இலெமூரியா எனப்பெயர் பெற்றது.

ஏதேன் (Eden) என்பது பலவகைக் கனி மரங்கள் நிறைந்த வளநாடு. (ஏதேன் - இன்பம்) என்ற எபிரேயச் சொல்.

இன்றைய தமிழ்நாட்டைப் போன்றே பண்டைய தமிழ்நாடு.

குமரிக்கண்டம் மேல்கோடி பெருமலை, மேற்கில் உயர்ந்தும், (குடதிசை மேல் (மேற்கு) குணதிசை கீழ் (கிழக்கு)) கிழக்கில் தாழ்ந்தும் இருந்தது.

தமிழன் பிறந்தகம் குமரிநாடே.

"பொய்யகல நாளும் புகழ்விளைந்த லென்வியப்பாம்
வையகம் போர்த்த வயங்கொலிநீர் - கையகலக்
கற்றோன்றி மண்டோன்றாக் காலத்தே வாளொடு
முற்றோன்றி மூத்த குடி" (புறப்பொருள் வெண்பாமாலை 35)

கற்காலம் : (Stoneage) (கி.மு. 500000 - 50000)

கல்லால் பல கருவிகள் செய்து கொண்ட காலம். இது பழங்கற்காலம், புதுக்கற்காலம் என இரு வகைப்படும்.

**பழங்கற்காலம் :** (Old Stoneage) கி.மு. 500,000 - 100,000

தமிழரின் முற்கால முன்னோர் குமரிநாட்டு மாந்தர், பொன், கண்டுபிடித்து, கில்லி, வெட்டி, குத்தி, கத்தி, உளி, சுத்தி, சுத்தியல், சம்மட்டி, குந்தம், கூந்தாலம், கோடரி, குத்துக் கோடரி, கல்லால் முரட்டு ஆயுதம் பயன்படுத்திய காலம். இது குமரிமலைத் தொடரின் அடிவாரமான குறிஞ்சி நிலம் எனப்பட்ட இடம்.

உறைக்காலம் : (Bronze Age) கி.மு. 15,000 - 10,000

உறை என்பது வெண்கலம், இது முறி எனவும் படும்.

'கஞ்சம் உறைவெண் கலமாகும்மே' (பிங்கலநிகண்டு 9-140)

"வெண்கலப் பெயரும் விழுமமும் பெருமையும்
ஓரிடைச் சொல்லும் வாழ்நாளும் உறையெனல்"

எட்டுப் பங்குச் செம்பும் ஒரு பங்குத் தகரமும் கலந்த கலப்பு மாழையே உறை. இது செம்பு போலத்தனி மாழையின்மையாலும் வெண்ணிறக் கலவடிவிலேயே மக்கள் இதைக் கண்டமையாலும், கருமிய (காரிய) வாகுபெயராக வெண்கலம் எனும் பெயர் பெற்றது.

குமரிக்கண்டம் முழுவதும் ஒருகாலத்தில் தமிழ்நாடாக இருந்தது எனத் தெரிகிறது. முழுகிப் போன குமரியாற்றை ஒரு

எல்லையாக வைத்துக்கொண்டால் அதற்குத் தெற்கிருந்த நிலமெல்லாம் பழம்பாண்டி நாடும், வடக்கிருந்த நிலமெல்லாம் கீழைப்பகுதி சோழ நாடும், மேலைப் பகுதி, சேரநாடும் ஆகும்.

இன்று பாண்டிநாடு என்று சொல்லப்படும் நிலப்பகுதி இறுதிக்கடல் - கோளுக்குத் தப்பியதே. **பாண்டியன் தன்போல் தப்பிய தன் குடிமக்களைச் சோழநாட்டினின்றும் சேரநாட்டினின்றும் கவர்ந்து கொண்டதே.**

"அங்ஙனமாகிய நிலக்குறைக்குச் சோழநாட்டு எல்லையில் முத்தூர்க்கூற்றமும் சேரமாநாட்டுக் குண்டூர்க் கூற்றமுமென்னுமிவற்றை இழந்த நாட்டிற்காக வாண்ட தென்னவன்" என அடியார்க்கு நல்லாரும்.

> "மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வௌவலின்
> மெலிவின்றி மேற்சென்று மேவார்நா டிடம்படப்
> புலியொடு விண்ணீக்கிப் புகழ் பொறித்த கிளர்கெண்டை
> வலியினான் வணங்கிய வாடாச்சீர்த் தென்னவன்" கலி-104

என்று நல்லுருத்திரனாரும், உரைத்தும் பாடியுமிருத்தல் காண்க. இனி,

> "முந்நீர் விழவின் நெடியோன்
> நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே" (புறம் 9)

என்று குமரி நாட்டுத் தென்கோடியிலிருந்த பஃறுளியாற்றை நெடியோன் என்னும் பாண்டியனுக்குரியதாக நெட்டிமையார் பாடியிருப்பதனாலும் பழம் பாண்டிநாடு முழுகிப் போன தென்கண்டத்துள் அடங்கியதென்பது பெறப்படும்.

> "வடிவேல் எறிந்த வான் பகை பொறாது
> பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
> குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள
> வடதிசைக் கங்கையு மிமையமுங் கொண்டு
> தென்திசை யாண்ட தென்னவன் வாழி" - சிலம்பு. 11-19,22

என்று கலியும், புறமும், சிலம்பும் இக்குமரிக் கண்டத்தின் அழிவைப் படம் பிடித்துக் காட்டுகின்றன.

மேலும் "மலிந்த ஏழ்தெங்கநாடும், ஏழ் மதுரைநாடும், ஏழ்முன்பாலை நாடும், ஏழ்பின்பாலை நாடும், ஏழ் குன்ற நாடும், ஏழ் குணகரை நாடும், ஏழ் குறும்பனை நாடும் என்னும் இந்த நாற்பத்தொன்பது நாடுகளும் குமரி, கொல்லம் முதலிய பன்மலை நாடும் காடும், நதியும், புதிய தடநீர் குமரி வடபெருங்கோட்டின் காறும் கடல்கொண்டாதலாற்குமரியாகிய பௌவமென்றா ரென்றுளர்க" இஃது என்னை பெறுமா றெனின், "வடிவேலெறிந்த வான்பகை பொறாது பஃறுளியாற்றுடன் பன்மலையடுக்கத்துக் குமரிக் கோடுங்கொடுங்கடல் கொள்ள" என்பதாலும், கணக்காயனார் மகனார் நக்கீரனாருரைத்த இறையனார் பொருளுரையானும், உரையாசிரியராகிய இளம்பூரணவடிகள் முகவுரையாலும், பிறவற்றாலும் பெறுதும் என்று அடியார்க்கு நல்லார் கூறுகிறார்.

மாங்காட்டு மறையோன் பாண்டிய மன்னனை வாழ்த்தும் போது பஃறுளியாறு கடல்கொண்ட செய்தியைத் புலமை வேங்கடாசலம் தரும் உரை.

"கடலைப் பாண்டியன் காலால் மிதித்து அளவுகாட்டியதால் கடல் கோபங்கொண்டு பொங்கி எழுந்தபோது அதனை வணங்காது தனது வேலினை வீசி எறிந்து அதனைப் பின்னிடச் செய்ததற்காகக் கடல் சினந்தெழுந்து பாண்டிய நாட்டில் பஃறுளியாற்றுடன் பல பக்க மலைகளை யுடைய குமரி மலையையும், அழித்ததனால் வடக்கிலுள்ள கங்கை ஆற்றினையும் இமய மலையையும் கைக்கொண்டு தென்திசையை ஆண்ட பாண்டியமன்னன் நீடூழி வாழ்வாயாக! என வாழ்த்தியதில் பஃறுளியாறும் மேருமலையும் அழிந்தது"

பாண்டியருள் மிகப் பழைமை வாய்ந்தவனாக அறியப்படுபவன் புறம் 4ஆம் பாட்டில் ஒரு பழம் பாண்டியனின் முன்னோனாகக் குறிக்கப்படும் நெடியோன் ஆவன். அவன் முந்நீர்

விழாவின் நெடியோன் என்றும் நன்னீர்ப் பஃறுளி ஆற்றுக்கு உரியவன் என்றும் குறிக்கப்படுகிறான். முச்சங்க மரபின்படி இவன் தலைச்சங்க காலப் பாண்டியன் ஆவன். தொல்காப்பியம் அரங்கேற்றுவித்த நிலந்தரு திருவிற்பாண்டியன் அல்லது சமயகீர்த்தி இவனே. இவன் கி.மு. 5ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டவன். இவன் முந்நீர் விழா ஆற்றினான். இதனால், இவன் வடிம்பலம்ப நின்ற பாண்டியன் என்று புகழப் பெற்றான். இவனே மேருமலையினின்று பஃறுளி ஆற்றைப் பாசனத்துக்காக வெட்டியவன் என, 'தென்னாடு' என்ற நூலில் கா. அப்பாத்துரையார் கூறுகிறார்.

இன்றைய குமரிமுனையின் தெற்கே 300 காவத தூரம் குமரியாறும் குமரி முனையினின்று 700 காவத தூரத்தில் பஃறுளி ஆறும் இருந்தமைக்குச் சான்றுகள் உள்ளன. மேருமலை இலங்கையினின்று தெற்கே 1400 காவத தூரம் மட்டும் தெற்கே மலையடுக்குகளாகக் கிடந்தன. நெடியோன் பாசனத்து வெட்டிய ஆறே பஃறுளி ஆறு. அவையாவும் கொடுங்கடல் கொண்டது. தென்மதுரையும், கபாடபுரமும், பெருவளநாடும் முத்தூர்க்கூற்றமும், கன்னியாறும், குமரியாறும் பெருஆறும் ஒளிநாடும் முழுமையும் கொடுங்கடலுக்கு இரையாயின.

**குமரிநாட்டுத் தமிழர் (தோரா 50,000 - 10,000 வரை)** பெரும்பாலும் ஐந்திணைப்பட்ட நாட்டுப்புறத்தாரும் சிறுபான்மை திணை மயக்குற்ற நகர வாணவருமாக இருவகை வாழ்ச்சியராய் இருந்து வந்தனர்.

குறிஞ்சி மாந்தர் கொல்லியும், பறம்பும் போன்ற மலைகளையடுத்துக் கூட்டம் கூட்டமாய்க் குடிசைகளில் தங்கி வேட்டையாடியும், கிழங்ககழ்ந்தும் தேனெடுத்தும் தினை விதைத்தும் முருகனை வழிபட்டும் வாழ்ந்தனர்.

குறிஞ்சி நில மக்களைச் சொல்வது குறம் எனப்பட்டது. அதனால் குறவர் என்றும் வேட்டையாடுதலால் வேட்டுவர் என்றும் குறிஞ்சி நில மாந்தர்க்கு இரு பெயர்கள் உண்டாயின.

குமரிநாடே பழம்பாண்டியநாடு. இன்று பாண்டிநாடு என்று சொல்லப்படும் பகுதி இறுதிக் கடல்கோளுக்குத் தப்பியது. பாண்டியன் சோழ, சேர நாட்டு மக்களைக் குடியேறச்செய்த நாடு (மறைமலையடிகள் - தமிழ் இலக்கியவரலாறு)

தொன்மையான காலத்தில் உலகின் தெற்குப்பகுதியில் நிலப்பரப்பு அதிகமாகவும், வடக்கில் நீர்ப்பரப்பு அதிகமாகவுமிருந்ததை நிலவியலார் விளக்கினர். மேற்கில் தென் அமெரிக்கா வரைப் பரவிய நிலப்பகுதி '**கொண்ட வனம்**' என்ற பெயரைப் பெற்றிருந்தது. அதன் சிதைவில் எஞ்சிநின்றதே இந்துமாக் கடலின் எஞ்சிய பகுதி. கிழக்கில் அது ஆஸ்த்திரேலியாவையும், மேற்கில் சிறிதளவு தொட்டு நின்றதை நிலவியலார் விளக்கியுள்ளனர்.

1) இந்துமாக்கடலின் ஓரத்திலுள்ள ஆஸ்த்திரேலியாவின் பழங்குடியினர் ஆப்ரிக்க, இந்திய, தென்கிழக்கு ஆசியப் பகுதிகளின் மொழிகளின் அடித்தள ஒற்றுமையும் தாவரங்களின் ஒற்றுமையும் சான்றாக உள்ளன.

2) ஆஸ்த்திரேலியப் பழங்குடியினரும், தெற்கு ஆப்ரிக்கரும், குமரி மாவட்டத்தவரும், தென்கிழக்காசியரும் குருதி அடிப்படை (DNA) ஒற்றுமையிலுள்ளனர்.

3) இந்தியாவின் பாகதபுராணமும், சுமேரியர்களின் கில்கமான் தொன்மமும் விளக்கும் மானுட இடப்பெயர்வு தவிர்க்க முடியாத ஆதாரமாக நிலைத்து நிற்கின்றது. இவற்றுக்குமேல் தமிழ் இலக்கியச்சான்றுகள் குமரிக்கண்டத் தொடர்பை விளக்குகின்றன. அவை பின்னால் விளக்கப்படும்.

4) தென்னிந்திய குமரிக்கண்டத்துடன் இணைந்தது. அதன் பாறைகள் மிகமூத்த பாறைகளின் தன்மைகளில் உள்ளன.

5) இந்துமாக்கடலைத் தொட்ட நாடுகளில் மனிதர்களின் மூதாதையர் வன்-குரங்குக் குடும்பத்தில் இரு கால்களில் நடக்குமினம் வாழ்ந்தமைக்குத் தடையங்கள் உள்ளன.

6) தென்னிந்தியாவில் தமிழகத்தில் கொற்கைத்தலையாற்றுப் படுகையில் மானுட நாகரிகத் தொடக்கம் பல்லாயிரக்கணக்கான காலப்பழமையுடையது என அண்மைக்கால ஆய்வுகள் நிரூபிக்கின்றன.

குமரிக்கண்டத் தொடர்புடைய தமிழ் இலக்கியச் சான்றுகள் பின்வருமாறு,

சங்க காலம்

**இறையனார் களவியல் உரையில்** முச்சங்க வரலாறு விளக்கம் பெறுகின்றது. அவ்விளக்கப்படி,

**முதற்சங்கம் 4440 ஆண்டுகள்**

**இரண்டாம் சங்கம் 3700 ஆண்டுகள்**

**கடைச்சங்கம் 1850 ஆண்டுகள்** செயல்பட்ட 9950 ஆண்டு வாழ்வுடையது.

அதைக் கற்பனை என்று நகைத்தோரும் நகைப்போருமுளர்.

இந்தியத் தொல்லியல் ஆய்வின்படி தெற்காசியா முழுவதும் தமிழர்கள் வாழ்ந்து தமிழில் எழுதிய அடையாளங்கள் எண்ணிலடங்கா. அவற்றின் காலப்பழமை, **ஐராவதம்** கி.மு. ஆறாயிரம் வரை என்று விளக்கி முச்சங்க வரலாறு கற்பனையல்ல என்று 2009-ல் **திருச்சியில்** நடைபெற்ற **தமிழ்நாட்டு** வரலாற்றுப் **பேரவையில்** படித்த ஆய்வுக்கட்டுரையில் நிரூபித்துள்ளார்.

மேலும் அவர் புறநானூறு பாடல் இரண்டு

ஐவரோடு சினைஇ ........

என்ற பாடலையும் இறுங்கோவேளின் மூதாதை துவரையில் 49 தலைமுறைக்குமுன் அரசாண்டதைக் குறிப்பிட்டு அத்தகைய முடிவுக்கு வந்துள்ளார்.

கபிலர் பாடியது (பாடல் 801) கி.மு. 200 அளவில்
தலைமுறைக்கு 33 வயது 49 = 1617
கி.மு 200 சேர்த்தல் 200
1817

கி.மு. 1850ல் கடுமையான சுனாமி வந்து துறை அழித்ததைத் தொல்லியல் விளக்குகின்றது என்று முனைவர் பேராசிரியர் வே.தி. செல்லம் தனது "**தொன்மைத் தமிழ் மொழியின் மற்றும் பண்டைத்தமிழும் தமிழக வரலாறும் மறுஆய்வு**" என 2012-ல் நிறைவு செய்த ஆய்வேட்டின் காலக்கணிப்பு இயலில் விளக்கியுள்ளார்.

அவ்வாய்வின்படி தொல்காப்பியம் பண்டைய தொல் இந்திய நாகரிகத்தின் இரண்டாம்கட்டமாகிய கி.மு. 2000 முதல் 800 வரை என்ற காலப் பகுதியில் கி.மு. 800க்கும் 1000க்கும் இடையில் கி.மு.1400 அளவில் தொடங்கிய (**தாமிரபரணி ஆற்றுப் பகுதி** முதல் **சிந்துவெளி** வரை கற்குவை காலத்து வேளாண்மற்று இரண்டாம் கட்ட கடல் வாணிப காலத்து பொருளாதார காலம் உறுதியான காலகட்டத்து) எழுதப்பட்டிருக்கும் என்று கணித்துள்ளார்.

கிடைக்கப்பெற்ற தொகைப்பாடல்களில் காலத்தால் முந்தியது மகாவீரரின் அடுத்த தலைமுறையினரான **பக்குடுக்கை நன்கணியாரின் பாடல்** (கி.மு. 400 அளவில் யாத்தது-கி.பி.100 அளவில் **ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் பாடிய கல்வி சார்ந்த பாடலைக்** கீழ் எல்லையாக வைத்து கிடைக்கப்பெற்ற பாட்டும் தொகையின் காலம் கி.மு. 400 முதல் கி.பி. 100 வரை என முடிவாக்கலாம். முதல் **இரண்டு சங்கங்களின் காலம்** வரையறை செய்ய மேலும் ஆய்வு தொடர வேண்டும் அவை புறக்கணிக்கலாகாது.

"தமிழகத்தின் தொடர்பான இந்துமாக்கடலுக்குள் அகன்று கிடந்த நிலப்பரப்பைக் கடல் விழுங்கிய வரலாறு மறைந்துபோன நிலம், பஃறுளி ஆறு, குமரிமலை, கன்னியாறு, மேருமலை, மேருமலையின் பல சிகரங்கள் முதலியன. அவற்றின் எஞ்சிய பகுதியே இன்றைய குமரியும், ஈழமும். இப்பெருநிலப்பரப்பு குமரிக்கண்டம் எனப்பட்டது. 700 காவத தூரம் பரந்து விரிந்து கிடந்தது. மக்கள் நெருக்கமாக வாழ்ந்த பகுதி. (மனுவின்) வெள்ளப்பெருக்குக்கு முற்பட்ட நாகரிக வளமுடையதாகவும் திகழ்ந்தது. நிலநூல், தொல்லுயிர் நூல் ஆய்வாளர்களின் தலையெடுப்பதற்கு முன்னரே இவ்வரலாறுகள் தமிழ் நூல்களில் இடம்பெற்றுள்ளன. வெள்ளப் பெருக்கிற்கு முன் மேற்குத்தொடர்ச்சி மலை வடமலை எனப்பட்டது. இப்பெயர் தெற்கிலிருந்து மூழ்கிப்போன தென் கண்டம் தொடர்பானது" என, 'பழந்தமிழர்' நூல் குறிப்பிடுகின்றது என ந.சி.கந்தையா குறிப்பிடுகிறார்.

# தென்பாண்டி தந்த திருவள்ளுவர்

தமிழ்மொழி நீண்ட நெடும் வரலாறும் பெருமையும் உடையது. மூன்று சங்கங்கள் வைத்து மொழி வளர்த்த பெருமைக்குரியவர் நம் தமிழ்மக்கள். எண்ணற்ற இலக்கியங்கள் யாத்து இலக்கியம் கண்டதற்கு இலக்கணங்களும் யாத்துக் காத்து வந்தனர். ஆனால் அந்தோ! காலவெள்ளத்துக்கும் கரையான் வாய்க்கும் உணவாகிப் போனவை போக எஞ்சியவை மிகக் குறைவான நூல்களே. பாழான மண்ணுக்கும், படையான சிதலுக்கும், படியாதார் நெருப்புக்கும் பதினெட்டாம் பெருக்கிற்கும் பற்பல பூச்சிக்கும் பகைவர்கள் சூழ்ச்சிக்கும் இரையான நூல்கள் எத்துணை எத்துணையோ? நமக்கு நல்வாய்ப்பாகக் கிடைத்துள்ள நூல்களுள் தொல்காப்பிய இலக்கணமும் பத்துப்பாட்டு, எட்டுத்தொகையும், பதினெண்கீழ்க்கணக்கும் நமது பண்டைய பெருமையைப் பறைசாற்றப் பயன்பட்டு வருகின்றன. ஆனால் நமது போகூழாக அந்நூற்களை எழுதிய பெருமக்களுடைய வரலாறுகள் எவையும் முறைப்படி நமக்குக் கிடைத்தில. ஆனால், நூலாசிரியர்களின் வரலாறு பற்றிய கட்டுக்கதைகள் பல வழங்கப்பட்டு வருகின்றன. அந்த வகையில் தமிழ்மறையாம் திருக்குறள் எழுதிய வள்ளுவப் பேராசான் பற்றிய உண்மை வாழ்க்கை வரலாறு எதுவும் கிடைக்கவில்லை எனினும் கட்டுக்கதைகள் மட்டுமே உள்ளன. ஆயினும், அக்கட்டுக்கதைகளுக்கு உள்ளும் சில வரலாற்று உண்மைகள் தடயங்கள் இல்லாமலில்லை.

மேலும், எத்தனையோ அறிஞர்கள் திருக்குறளுக்கு உரைகண்டுள்ளனர். இவர்கள் எவருமே திருவள்ளுவர் பிறப்பு, தாய் தந்தை, வளர்ப்பு, மறைவு பற்றிக்குறிபபிடவில்லை.

ஓர் ஆசிரியரின் நூலுக்கு உரை எழுதுபவர் அந்நூலாசிரியர் தாய் தந்தை பிறந்தகம், காலம் போன்ற பல செய்திகளைத் தருவது மரபு. ஆனால், திருவள்ளுவர் குறிதது அவரைப் பற்றிய எந்த அகச்சான்றும் அவர்தம் நூலில் இல்லை.

ஆனால், திருவள்ளுவரைக் குறித்து அறிந்து கொள்ளுவதற்குச் சில பல புறச்சான்றுகளும், வரலாறும் வழிகாட்டியுள்ளன. இவற்றை ஆய்வதே இந்நூலின் நோக்கம்.

விந்திய மலைக்கு வடக்கிருந்த தமிழ்நாடு சிந்துநாடு, கங்கைநாடு, இமயநாடு, என்ற முப்பெரும் பிரிவுகளாகவும், விந்தியமலைக்கும் குமரி ஆற்றிற்கும் இடையிலுள்ள தமிழ்நாடு - துண்டீர நாடு, எருமை நாடு, தும்பர் நாடு, கொங்கர் நாடு, மழவர் நாடு, சோழநாடு, பாண்டிநாடு, சேரநாடு, என எட்டுப் பிரிவுகளாகவும், குமரி ஆற்றிற்கும், கன்னி ஆற்றிற்கும் இடையிலிருந்த தமிழ்நாடு - குமரிநாடு, பெருவளநாடு, தென்பாலிநாடு, என முப்பெரும் பிரிவுகளாகவும், இப்பதினான்கு நாடுகளிலும் சேர, சோழ, பாண்டியர்கள் ஆட்சி செய்து வந்தார்கள் எனவும் அறியக் கிடக்கின்றது. இக்காலம் கி.மு. 30,000.

அப்போது அங்கு வாழ்ந்தவர்கள் தமிழர்களே அன்றி வேறு இனத்தார் இல்லை.

சேரர், இமய நாட்டையும், கொங்கர் நாட்டையும், சேர நாட்டையும் ஆண்டதாகவும், சோழர் சிந்து நாட்டையும், எருமை நாட்டையும், தும்பர் நாட்டையும், துண்டீர நாட்டையும், மழவர் நாட்டையும், சோழ நாட்டையும் ஆட்சி புரிந்ததாகவும், பாண்டியர், கங்கை நாட்டையும், தென்பாலி நாட்டையும் ஆண்டார்கள் எனவும் அறிகிறோம். இவர்கள் ஆண்ட காலம் கி.மு.30,000 முதல் கி.மு. 6,500 வரை.

1800 ஆண்டுகளுக்கு முன்பே நாஞ்சில் நாடும் அதன் தென்பகுதியாகிய குமரியும் தமிழ் கூறும் நல்லுலகத்தின் ஒரு பகுதியாக இருந்தது எனத் தொல்காபபியப்பாயிரத்தில்,

"வடவேங்கடம் தென்குமரி

ஆயிடைத்

தமிழ்கூறம் நல்லுலகத்து என வருவதைக் கொண்டு தெளியலாம். பாண்டியனுக்குரியதாகக் "குமரிச்சேர்ப்பன்" என்று ஒரு பெயர் திவாகரத்தில் காணப்படுகிறது. இப்பெயரால், இந்நாடு தொன்று தொட்டுப் பாண்டியனுக்குரியதாயிருந்தமை புலனாகும். பல்யாகசாலைமுதுகுடுமிப் பெருவழுதியைக் குறித்த அச்சமும் புகழும் தெக்கின்கண் உள்ள கன்னியாகுமரிக்குத் தெற்கும் பரவுகவென அப்பாண்டியனைக் காரிகிழார் என்ற புலவர்,

"வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்

தெனாஅது உருகெழு குமரியின் தெற்கும்" (புறம் 6) எனப் பாடுகிறார். பாண்டியனுக்கு உரியதாகவே குமரியை அடுத்துள்ள பஃறுளியாறும் கூறப்பட்டுள்ளது. (புறம் 9)

"செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க்கு ஈந்த

முந்நீர் விழவின் நெடியோன்

நன்னீர் பஃறுளி மணலினும் பலவே" என நெட்டிமையார் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடும் போது குறிப்பிடுகிறார்.

தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைக் குறித்து,

"தென்குமரி வடபெருங்கல்

குணகுட கடலா வெல்லைத்

தொன்று மொழிந்து தொழில் கேட்ப" என மதுரைக் காஞ்சி என்ற நூல் கூறுகிறது. இங்கே "தொன்று மொழிந்து" என்பது மிகவும் பழங்காலந் தொட்டுத் தொடர்புடையராயுள்ளமையைப் பாராட்டிச் சொல்ல எனப் பொருள் படுதலாலே, பாண்டியர்களுக்கு

அநாதியாகவே தென்குமரியைச சார்ந்த நாடு உடைமையாயிருந்ததென்பது விளங்கும.

## சேர, சோழ, பண்டியநாடு



சேர நாட்டை **உக்கிரப்பெருவழுதி வென்றான்**. அவன் வென்ற பகுதி இன்று குமரிமாவட்டத்தில் உள்ள **அகஸ்தீஸ்வரம் தோவாளை** தாலுகா உள்ளிட்ட நாஞ்சில் நாட்டுப் பகுதியாகும். எனவே, இப்பகுதி பாண்டி நாட்டிற்கு உட்பட்டது. நாஞ்சில் நாட்டில் அவன் ஓர் அணையைக் கட்டி அதற்குப் பாண்டியன் அணை என்று பெயரிட்டான். அந்த அணையும், பாண்டியன் பெயரைத் தாங்கி

நிற்கின்ற ஊர்கள் அழகியபாண்டியபுரம், பூதப்பாண்டி ஆகியவை இன்றும் தோவாளைத் தாலுகாவில உள்ளன. இதை **மலைநாடு** என்பர். இப்பகுதியும் வள்ளுவநாடு. என விளங்கியதோடு திருநந்திக்கரைக் கல்வெட்டின்படி. தோவாளை மலைப்பகுதியும் **வள்ளுவ நாடேயாம்.**

சோழ வேந்தன் இராசராசசோழன் பாண்டியனோடு போர் செய்து நாஞ்சில் நாட்டை வென்றான். அங்குள்ள சின்னமுட்டம் என்று இன்று கூறப்படும் நாஞ்சில் முட்டதத்திற்குச் சோழநல்லூர் என்று பெயரிட்டான். அதனின்று 2 கல் தொலைவில் அமைந்துள்ள ஊர் நல்லூர் என்ற பெயரால் அழைக்கப்படுகிறது. இவ்வூர் (நாஞ்சில் நாட்டில்) காணப்படுகிறது. திருநந்திக்கரைக் கோயில் கல்வெட்டில் காணப்படும் செய்தி இதுவே ஆகும். இந்தச் சோழ மன்னன் பெயரில் தோவாளைத் தாலுகாவில் சோழபுரம் என்ற ஊர் இன்று உள்ளது. இந்தச் சோழபுரத்திற்கும், பூதப்பாண்டிக்கும் அருகே ஶ்ரீபத்மநாபநல்லூர் என்ற ஊர் உள்ளது. நாஞ்சில் நாட்டில் அகஸ்தீஸ்வரம் தாலுகாவில் நாகர்கோவில் - வடசேரிப் பகுதியில சோழ ராஜா நிறுவிய சிவன் கோவில் உள்ளது. அது இன்று சோழராஜாகோயில் என்று அழைக்கப்படுகிறது.

இந்த நாஞ்சில் பகுதியைச் சோழமன்னரிடமிருந்து போரிட்டு - சேர மன்னன் பின்னர்க் கைப்பற்றித தன்னாட்டோடு இணைத்துக் கொண்டான். அந்நாட்டின் தென்பகுதி **திருவிதாங்கோடு** என்ற பெயரைத் தாங்கி இருந்தது. பின்னா இது மருவி திருவிதாங்கூர் என்ற பெயராயிற்று. அதன்பிறகு 1.11.1956ல் விளவங்கோடு, கல்குளம், தோவாளை, அகஸ்தீஸ்வரம் ஆகிய நான்கு தாலுகாக்களும் குமரிமாவட்டம் என்ற பெயரோடு தாய்த் தமிழகத்தோடு இணைந்தன.

## இன்றைய குமரி மாவட்டம்

## KANNIYAKUMARI DISTRICT MAP




'எலாரா' என்ற சோழநாட்டுத் தமிழ்வீரன் இலங்கையை வென்று கி.மு. 205 முதல் 161 வரை யாவரும் புகழ ஆண்டதாக அறிகிறோம். தமிழ் மரபில் இவன் ஏலேலசிங்கள் என்று குறிக்கப்படுகிறான். இவன் திருவள்ளுவரின் மாணவனும் வள்ளலும் ஆவான் என்று தமிழ மரபுரை ஒன்று கூறுகிறது.

தமிழரின் ஆட்சி பழங்காலந் தொட்டே நடைபெற்றது என்பது பழைய வரலாற்றுக் குறிப்புகள் வழி அறியலாம். பக்கஸ் முதல் மகாஅலக்சாந்தரின் படையெடுப்பு வரை 154 பாண்டிய மன்னர்கள் அரசாண்டிருந்தனர். அவர்களின் ஆட்சிகாலம் 6451 ஆண்டுகள் என்றும் பிளினி குறிப்பிடுகிறார். தயோனிசங் முதல் சந்திரகுப்தன் வரை 6,042 ஆண்டுகள் கழிந்தன என ஹீரன் (Heeren) என்ற

செர்மன் வரலாற்றாசிரியர் குறிப்பிடுகிறார். **மெகஸ்தனீசும்** இதனை ஒப்புக் கொள்கிறார். கிரேக்க, உரோமானிய ஆசிரியர்கள் இந்திய அரசர்களின் பெயர்களை **பக்கஸ், தயோனிசஸ்** என்ற தமது மொழிப் பெயர்களால் குறிப்பிட்டுள்ளனர்.

எகிப்தியர், சுமேரியர், பாபிலோனியர், அசீரியர், பினீசியர், மினோவர் முதலிய பண்டைய மக்கள் பழைய நாகரிகம் பெற்ற தமிழர்களே.

கடைச்சங்கமிருந்த முடத்திருமாறன் முதல் உக்கிரப் பெருவழுதியீறாக 49-அரசர்களும் கவி அரங்கேற்றினர். **முதற்சங்கம்** 89 பாண்டியர் ஆட்சியாக 4440 ஆண்டுகள் நடைபெற்றன. அச்சங்கத்தில் 549 புலவர்கள் அங்கத்தினர். நூல்களை அரங்கேற்றினோர் 4449 பேர். இச்சங்கம் குமரிமுனைக்குத் தெற்கே இருந்து கடல்கோட்பட்ட தென்மதுரை.

**இரண்டாவது** சங்கம் 59 பாண்டியர் ஆட்சியில் 3700 ஆண்டுகள் நடைபெற்றது. இக்கழகம் பொருணை (தம்பிரபரணி) முகத்துவாரத்தில் உள்ள **கபாடபுரம்**.

**மூன்றாம் சங்கம்** 49 பாண்டியர். இவர்கள் 1850 ஆண்டுகள் ஆண்டனர். சங்க உறுப்பினர். 49 நூல்கள் அரங்கேற்றிய புலவர்கள் 449. இக்கழகம் **கூடல்** என்று வழங்கிய **மதுரையில்** நடைபெற்றது.

இறையனார் களவியல்படி முச்சங்கங்களும் 197 பாண்டிய அரசர் காலங்களில் 9990 ஆண்டுகள் நடைபெற்றன.

மதுரைத்தலபுராணம் **குலசேகர பாண்டியன்** முதல் **மதுரேஸ்வர பாண்டியன்** ஈறாக 74 பாண்டியர்களைப் பற்றிக் கூறுகிறது. மதுரேஸ்வர பாண்டியன் கூன் பாண்டியனின் மகனாவான். **கூன் பாண்டியன்** அல்லது **நெடுமாறன்** இவன் காலம் கி.பி. 7. இவன் காலத்தில் சங்கம் இருந்ததற்கான தடயங்கள் கூறப்படவில்லை. மணிமேகலையும், சிலம்பும் சங்கம் பற்றிக் குறிப்பிடவில்லை. ஆக சங்ககாலம் கி.பி.இரண்டாம் நூற்றாண்டிற்கு முன் ஆதல் வேண்டும்.

சங்கத்தை ஆதரித்த கடைசிப் பாண்டியன் **உக்கிரப்பெருவழுதி இவன் காலத்தே திருக்குறள் அரங்கேற்றப்பட்டது.** உக்கிரப்பெருவழுதி கரிகாலனின் தந்தையாகிய இளஞ்சேடசென்னியின் காலத்தவன் எனப்படுகிறான். கரிகாலன் காலம் கி.பி. 50க்கும் 90க்கும் இடைப்பட்ட காலம். எனவே சங்ககாலம் கி.மு. முதல் நூற்றாண்டில் இருத்தல் வேண்டும். அதன்பின் சங்கம் பற்றிய செய்திகள் இல்லை.

கி.மு. 2060ம் ஆண்டில் **இம்மதுரையும் கடல்கொண்டது.** கி.மு.2105 இல் பெரிய கடல்கோள் ஏற்பட்டது. என **யூதரின் காலஏடு** கூறுகிறது. எனவே கி.மு. 3940இல் தலைச்சங்கம் தொடங்கிற்று எனலாம்.

**தென்மதுரை** கடலுள் மூழ்க, **கபாடபுரம்** பாண்டியனின் தலைநகராயிற்று. இங்கு **இரண்டாவது** சங்கம் தொடங்கியது. இதனை 59 பாண்டியர் ஆதரித்தனர். இவர்களின் ஆட்சி காலம் 1180 ஆண்டுகள். இச்சங்கத்தின் இறுதிக்காலம் கி.மு. 9803-ஆம் சங்கத்தை **உக்கிரப்** பெருவழுதியே அமைத்தான். இவன் மகாபாரதத்தில் **பப்புவவாகனன்** எனப்படுவான். இவன் **மலயுத்துவச பாண்டியனின் பேரன்.** மதுரை நகரை அமைத்த பாண்டியன் **மணலூரிலிருந்து** வந்தான் என **திருவிளையாடல் புராணம்** கூறுகிறது. மூன்றாவது சங்கம் 49 பாண்டியரால் ஆதரிக்கப்பட்டது. கி.மு. 30க்கும் கி.பி. 50க்கும் கடைச் சங்கத்தின் இறுதி.

உரோமர் காலத்து கன்னியாகுமரியில் இருந்த கன்னித் தெய்வத்தின் கோவில் மறைந்துவிட்டது. '**செங்கோன் தலைச்செலவு**' எனும் நூல் **தென்மதுரையைக் கடல்கொண்டது** எனக்கூறுகிறது.

> "செங்கோன் றரைச்செலவைச் சேந்தன் றனியூரான்
> றுங்கன் றமிழ்த்தாப் புலித்தொடரால் - அங்கிசைத்தான்
> சக்கரக்கோ முன்னின்று சாற்றும் பெருவூழி
> யக்கரக்கோ நாமஞ்சுவாம்"

என்னும் **பஃறுளியாற்றுத் தலைப்பாய்ச்சல் ஏழ் தெங்கநாட்டு முத்தூர் அகத்தியன்** கூற்றால் அறியலாம்.

"தமிழ் தலைமை தலைக் கொண்டான
சக்கரன்றொக்கார் குழுவில்"
"..... மணிக்கோடு
தங்குபெரு வளநாட்டில்
தமிழிருந்து புறங்காக்குந் தமிழ் நாடியாங்கே"

எனவரும் **செங்கோன் தரைச் செலவாலும்** அதன் உரைப் பகுதிகளாலும் **குமரிக்குத் தெற்கே தமிழ் வழங்கும்** பெருநாடு இருந்ததெனப் புலப்படும்.

சங்கத்தில் அரங்கேற்றப்பட்ட நூல்களுக்குச் சாற்றுக்கவிகள் சிறப்புப்பாயிரமான பாக்கள் ஐம்பத்து நான்கு. இவையெல்லாம் திரட்டிச் சேர்த்து **திருவள்ளுவமாலை** எனப்பட்டது. சங்கத் தலைவனான **உக்கிரப் பெருவழுதி சாற்றியவெண்பா**

"நான்மறையின் மெய்ப்பொருளை முபபொருளா நான்முகத்தோன்
தான்மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த - நூன்முறையை
வந்திக்க சென்னி, வாய் வாழ்த்துக, நன் னெஞ்சஞ்
சிந்திக்க, கேட்க செவி"

கூலவாணிகன் சாத்தனாருக்கு முற்பட்டவரும், உக்கிரப் பெருவழுதி காலத்தில் வாழ்ந்தவருமாகிய சீத்தலைச் சாத்தனார் பாடிய சாற்றுக்கவி.

"மும்மலையு முந்நாடு முந்நதியு முப்பதியு
மும்முரசு முத்தமிழு முக்கொடியு - மும்மாவுந்
தாமுடைய மன்னர் தடமுடிமேற் றாரன்றோ
பாமுறை தேர் வள்ளுவர்முப் பால்"

**சிவஞானமுனிவர் இயற்றிய சோமேசர் முதுமொழிவெண்பா**

"மெய்த் திருவள்ளுவனார் வென்று உயர்ந்தார், கல்விநலம்
துய்த்த சங்கத்தார் தாழ்ந்தார். சோமேசா - உய்த்ததியின்
மேற்பிறந்தா ராயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்
கற்றா ரனைத்திலர் பாடு" என்று கூறியுள்ளார்.

**சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, கம்பராமாயணம்** ஆகிய **நூல்கள் வள்ளுவன் என்போன் யானை மீதேறி அரசன் ஆணையைப் பறையறைந்து சாற்றுபவன்** எனக்குறிக்கும். திருவள்ளுவர் தமது குறட்பாக்களைக் கடைச்சங்கத்தில் அரங்கேற்றும் போது உடனிருந்த புலவர்களுள், சங்கத் தலைவனான **உக்கிரப்பெருவழுதி** எனும் பாண்டிய மன்னனும், **கல்லாடனார், சீத்தலைச் சாத்தனார். மருத்துவன் தாமோதரனார், நாகர்தேவனார், கோதமன்னர், உருத்திர சன்மர், களத்தூர்க்கிழார், தேனீக்குடிக்கீரனார், ஆலங்குடிவங்கனார்** என்னும் சங்கப்புலவர்கள். திருக்குறள் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என முப்பிரிவுகளாகப பிரிக்கப்பட்டிருக்கின்றது என்றனர்.

மேலும், அறத்துப்பாலில் பாயிரம், இல்லறம் துறவறம் ஊழ் என நான்கு பிரிவுகள் உள என்றும், பாயிரத்தில்அதிகாரம் நான்கும், இல்லறவியலில் இருபதும், துறவறவியலில் பதின்மூன்றும், ஊழியலில் ஒன்றும் உள எனக்கடைச்சங்கப் புலவருள் ஒருவரான மலாடனார் கூறினார்.

பொருட்பாலில் அரசியல், அமைச்சியல், அரணியல், பொருளியல், படையியல், நட்பியல், குடியியல் என ஏழு பிரிவுகள் உள்ளனவென்றும், அவற்றுள் அரணியலுக்கு இரண்டும், படையியலுக்கு இரண்டும், நட்பியலுக்கு பதினேழும், குடியியலுக்குப் பதின்மூன்றும் உள்ளன எனப் போக்கியார் கூறினார்.

காமத்துப்பாலில் ஆண்பாற் கூற்றியல், பெண்பால் கூற்றியல், இருபாற் கூற்றியல் என முப்பிரிவுகள் உள்ளன என்றும் ஆண்பாற் கூற்றிற்கு அதிகாரம் ஏழும், பெற்பாற் கூற்றிற்குப் பன்னிரண்டும், இருபாற் கூற்றியலுக்கு ஆறும் உள்ளன என்றும் பேராசிரியர் கூறினார்.

இவையனைத்தையும் திருவள்ளுவ மாலையில் காணலம்.

பொருட்பாலில் குறிப்பிடும அங்கவியல் ஒழியியல் பிரிவுகளும், காமத்துப் பாலில் காணப்படும் களவியல் கற்பியல் என்ற பிரிவுகளும் பிற்காலத்து ஏற்பட்டன என **1919இல் யாழ்ப்பாணம் பொன்னம்பலம் இராமநாதன்** குறிப்பிடுகிறார்.

## திருவள்ளுவரைப் பற்றிய சுவடுகள் :

### கதைகள்

திருக்குறள் ஏறத்தாழ ஈராயிரம் ஆண்டுகட்கு முன் எழுதப்பட்டது. ஓராயிரம் ஆண்டுகளுக்குப் பின் (கி.பி.) பத்தாம் நூற்றாண்டு முதல் பதின்மூன்றாம் நூற்றாண்டுவரை, தருமர், தர்மதத்தர், நச்சர், திருமலையர், மல்லர், காலிங்கர், மணக்குடவர், பரிப்பெருமாள், பரிதியார், பரிமேலழகர் ஆகிய பதின்மர் உரைகண்ட பெருமைக்குரியோராவர். அதன்பின் அண்மைக் காலங்களில் தொடர்ந்து 450க்கும் மேற்பட்ட அறிஞர்ப் பெருமக்கள் உரை வரைந்துள்ளனர். இன்னும் உரைகள் எழுதிக் கொண்டேயிருக்கின்றனர்.

ஆனால் பண்டைய உரையாசிரியர்கள் எவரும் திருவள்ளுவரின் பிறப்பு, வாழ்க்கை வரலாறு மறைவு பற்றிய எந்தக் குறிப்பையும் எழுதினார்களல்லர். அண்மையில் ஈரோட்டில் கண்டெடுக்கப்பட்ட திருக்குறள் பரிமேலழகர் உரையுடன் கூடிய ஏட்டுச்சுவடியிலும் பிறப்புக் குறிப்புகள் எதுவுமில்லை.

கபிலைச் செப்பேடு, பல்லடம் செப்பேடு, காரையூர், செப்பேடு போன்றவற்றிலும் வள்ளுவம் பற்றிய செய்திகள் காணப்படுகின்றனவே ஒழிய வள்ளுவரின் வாழ்க்கைக்குறிப்புகள் இடம் பெறவில்லை.

அறிஞர் **எல்லிசு தோற்றுவித்த தமிழ்ச்சங்கத்தில்** 1825-இல் வெளியிடப் பெற்ற திருக்குறளில் திருவளளுவமாலைப் பகுதியில்

ஆதிபகவன், ஏழுகுழந்தைகள் போன்ற கட்டுக்கதைகள் ஏதுமில்லை. பின்னர் **விசாகப்பெருமாள், சரவணப்பெருமாள், வேதகிரியார் அச்சிட்ட** பதிப்புகளில்தான் பல புனைகதைகள் இணைக்கப்பட்டுள்ளதாக அறிஞர் அயோத்திதாச பண்டிதர் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

பண்டைத் தமிழ்நூல் ஆசிரியர்களின் வரலாறுகள் ஒன்றுமே வரையறைப்படுத்தி அறியக் கூடியதாயில்லை. திருவள்ளுவர் வரலாறும் அப்படியே. செவிவழிச் செய்திகளும், இட்டுக்கட்டிய கட்டுக்கதைகளும், பொயமிகுந்த புனைகதைகளும் வள்ளுவர் வரலாறாக வலம் வருகின்றன.

**வள்ளுவர் பற்றிய கதைகள்**

கி.பி.பதினெட்டாம் நூற்றண்டில் தோன்றிய கபிலரகவலில்,

"தொண்டைமண்டலத்தில் **வண்டமிழ் மயிலையில்**

"நீளாண்மைகொளும் **வேளாண் மரபுயர்**

துள்ளுவரிடத்தில் வள்ளுவர் வளர்ந்தனர்" எனக் கபிலர் கூறுவார்.

மேலும், **கருவூர் புலையனால்** வளர்க்கப்பட்ட ஆதி எனும் தாய்க்கும், **திருவாரூர் பார்ப்பனன்** பகவன் எனும் தந்தைக்கும் பிறந்தவர் வள்ளுவர் என்றும் **கபிலரகவல் கூறும்**

'**ஞானாமிர்தம்** எனும் நூல், **ஆதி** புலையர் குலம் என்றும் யாளிதத்தன் பார்ப்பான் என்றும் கூறுகிறது.

**புலவர் புராணத்தில்,**

"ஊரிலுள்ளவரோடு வாழாமல் ஊர்ப் புறஞ்சேரி சேர்ந்து

தெள்ளுசொற் புலமை வாய்ந்து சேலை **நெய்திருந்தவாற்றால்"**

**வள்ளுவர் என்றார் பல்லோர் வளமையோ னெனலோரராறே"** என்று கூறப்பட்டுள்ளது.

சிவபெருமான் பாடலைத் தவறென்ற நக்கீரனின் வரலாற்றை நாமறிவோம். தருமி தோற்றுப் போன போது சிவன்

சினங்கொண்டு கடைச்சங்கத்தை அழிக்க எண்ணியபோது பூவன் (பிரம்மா) வள்ளுவராகவும் கலைமகள் ஔவையாராகவும், திருமால் இடைக்காடராகவும் இவ்வுலகில் தோற்றரவு (அவதாரம்) செய்தனர் எனவும், ஆதி தாழ்த்தப்பட்ட இனத்தைச் சார்ந்தவர்; பகவன் மேற்குடியில் பிறந்தவர். இவர்களுக்குப் பிறந்த (1) உப்பை (ஊற்றுக்காடு) (2) உறுவை (பூம்புகார்) (3) ஔவை (4) வள்ளியம்மை (5) வள்ளுவர் (6) அதிகமான் (7) கபிலர் என ஏழு பிள்ளைகளையும் பிறந்த ஊரிலேயே விட்டுவிட்டுச் சென்றனர்.

1. உப்பை (ஊற்றுக்காடு) சலவைத் தொழிலாளி
2. உறுவை (பூம்புகார்) கள் வினைஞர்
3. ஔவை (பூம்புகார்) யாழ்ப்பாணர்
4. வள்ளியம்மை (மலைச்சாரல்) குறவர்
5. வள்ளுவர் (மயிலை) வேளாளர்
6. அதியமான் (வஞ்சி) அதிகமான் (அரசன்)
7. கபிலர் (திருவாரூர்) அந்தணர்

பிறந்த ஊரும் வளர்த்த பெருமக்களும் மேலே காட்டப்பட்டுள்ளன.

வள்ளுவர் பிறந்த தாய் தந்தை ஆதி கவலைப்பட்டபோது
"எவ்வுயிரும் காக்கலொரு ஈகறுண்டோ இல்லையோ
அவ்வுயிரில் யானொருவன் அல்லனோ - லவ்வி
அருகுவது கொண்டிங்கு அலைவது ஏனோ?
வருவது தானே வரும்"

என்று பாடி மகிழ்வித்தாராம் என ஒரு கதை புனையப்பட்டுள்ளது.

குலப்பெருமை ஆதி பிரமவமிசத்தில் பிறந்த தவ முனிவனுக்கும், பார்ப்பனக் குலத்தில பிறந்த அருள் மங்கைக்கும் பிறந்தவள். பகவனோ பெருஞ்சாகரன் என்ற அந்தணனுக்கும், திருவாரூர்ப் புலைச்சிக்கும் பிறந்தவர். ஆதி உயர்குலம்; பகவன் தாழ்குலம். - திருக்குறள் உரைப்பாயிரக் கதை.

யாளிதத்தன் குலம் தெரியவில்லை. **ஆதி புலையர் குலம்** - வளர்த்த ஆதியை. யாளி என்ற பார்ப்பானே கிணற்றில் தள்ள ஒரு பிராமணன் எடுத்து வளர்த்துப் பின்னர் மணந்தான்.

முன் பகுதியில் யாளிதத்தன் குலம் தெரியவில்லை என்றும் பின்பகுதியில் பார்ப்பனன் என்றும் குறிப்பிடுகிறது **ஞானாமிர்தம்** என்னும் நூல்.

## வள்ளுவரின் மனைவி வாசுகியின் பெருமை

**காவேரிப்பாக்க மார்க்கசகாயர்** என்னும் வேளாளர் மகள் வாசுகி. இவரது வயலில் வேதாளம் புகுந்து அழிக்க, பேயை **அழிப்பவர்க்கே தன்மகள்** என மார்க்கசகாயம் அறிவித்தார். வள்ளுவர் பேயை அடக்கி வாசுகியை மணந்தார்.

வாசுகி ஒரு வாளியால் கிணற்றில் நீர் இறைக்க வள்ளுவர் "வாசுகி" என்றதும் விட்டுவிட்டுச் சென்றபோது வாளி விழாமல் அந்தரத்திலேயே நின்று கொண்டிருந்ததாம்.

பழைய சோற்றைச் "சுடுகிறது விசிறு" என்றார் வள்ளுவர். வாசுகி விசிறியால் விசிறிய போது சோற்றில் ஆவி பறந்ததாம்.

நெசவு செய்து கொண்டிருந்த வள்ளுவர், தவர் பயன்படுத்திய ஊசி கீழே விழ, விளக்கேற்றி வா என்றாராம். வாசுகி பகலென்றும் பாராமல் விளக்கேற்றி வந்தாராம். சற்றுநேரம் சூரியன் அந்த அம்மையாருக்காக மறைந்து, இருண்டு காட்சியளித்தானாம்.

சோறுண்ணும்போது ஒரு கிண்ணத்தில் நீரும், ஊசியும் வைக்கச் சொல்வாராம் வள்ளுவர். எதற்கென்றே வினவாமல் வாசுகி அவ்வாறே செய்தாராம். சோற்றுப் பருக்கை சிந்தினால் ஊசியால் குத்தி நீரில் தூய்மை செய்து உண்ணத்தானாம். ஆனால், அந்நிலை ஒருநாளும் ஏற்படவே இல்லையாம்.

## வாசுகியின் கற்பின் திறம்

தலையில் எச்சமிட்ட கொக்கினைச் சினத்தால் நோக்கிச் சாபமிட்டு எரித்த கொங்கணச்சித்தா பிச்சையிட, சுணக்கமான வாசுகியையும் அதுபோலவே சினத்துடன் பார்த்தாராம்.

வாசுகி, '**கொக்கென்று நினைத்தாயோ கொங்கணவா**' என்றாராம். காட்டில் கொக்கை எரித்த செய்தி வீட்டிலிருந்த வாசுகிக்கு எப்படித் தெரிந்தது என்று கொங்கணவா வியந்தாராம்.

"இவன் கொங்கணப்பய" இக்கூற்று இன்றும் நெல்லை வழக்கு. வள்ளுவர் வாசுகி மறைந்தபோது, நொந்து

"அடிசிற்கினியாளை அன்புடையாளைப்
படிசொற் பழிநாணுவாளை அடிவருடிப்
பின்தூங்கி முன்னுணரும் பேதையை யான்பிரிந்தால்
என்தூங்கும் என்கண் எனக்கு"

இவ்வாறு பாடிப் புலம்பினாராம்.

சீத்தலைச் சாத்தனார் குறையுற்ற பாடல்களைக் கேட்டபோது எழுத்தாணியால் தலையைக் குத்திக்குத்திக் சீழ்த்தலை கொண்ட சீத்தலைச் சாத்தனார் வள்ளுவர் பாடிய திருக்குறளால் தலைநோய் தீர்ந்து மகிழ்ந்தாராம்.

"சிந்துநீர்க் கண்டம் தெரிசுக்கு தேனளாய
மோந்தபின் யார்க்கும் தலைக்குத்தில் - காந்தி
மலைக்குத்து பால் யானை **வள்ளுவர் முப்பாலால்**
**தலைக்குத்து தீர்வு சாத்தற்கு**"

இது மணிமேகலை ஆசிரியர் சீத்தலைச் சாத்தனார் பாடல் என்பர்.

## வள்ளுவர் நெசவுத் தொழிலாளர்

மதுரையில் சங்கப் பலகை திருக்குறள் அளவாகச் சுருங்கி ஏற்றுக்கொண்டதால் மதுரைப் புலவர்கள் இவர் நூலை ஏற்று

அரங்கேற்றி மகிழ்ந்தனர். சிவனின் நடனத்திற்கு விளக்கங்கேட்ட சங்கப் புலவர்களிடம்

"இழைநக்கி நூல் நெருடும் ஏழை அறிவானோ
குழை நக்கும் பிஞ்சகன் கூத்து"

**நெசவுத்தொழில் புரிகிற எனக்குச் சிவன் ஆற்றல் தெரியுமா?** என்றாராம்.

ஏலேலே... ஏலே... லே...

கப்பல் தரை தட்டிய போது ஏலேல சிங்கன் வேண்டுகோளுக்கிணங்க, கப்பலைத் தொட்டு, வடத்தை இழுத்து, ஏலேலே சொல்லச் சொன்னார். கப்பல் நகர்ந்ததாம்.

இவரைச் சந்தித்த சிலர் எந்தவூர்? யார் நீர்? என்றெல்லாம் வினவியபோது

"எந்தவூர் என்றீர் இருந்தவூர் நீர்கேளீர்
அந்தவூர் செய்தி அறியீரோ - வந்தவூர்
முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியமாய்
அப்பாலும் பாழென்று அறி"

- என விடை பகர்ந்தார். அவர்களிடம்.

"குறுமுனிவன் முத்தமிழும் என்குறளும் நங்கை
சிறுமுனிவன் வாய்மொழியின் சேய்"

- என்றும் பாடினாராம் திருவள்ளுவர்.

### சிந்தனைக்கு

இக்கதைகள்

1. **சாதிக்கு முதன்மை வழங்குபவை**
2. இறும்பூது தரும் செய்திகளாவே நினைப்பூட்டுபவை
3. **மிகைப்படக் கூறுபவை**
4. **நம்பகத் தன்மையில்லாதவை**
5. காந்தியடிகளுக்கு முழங்காலுக்குக் கீழ் கை தொங்குவதாகவும், நேருவுக்குப் பாரிசிலிருந்து துணிவெளுத்து வருவதாகவும் செய்தித்தாள்கள் மூலம் அறிந்த அவவிருவரும் சிரித்துக்

கொண்டே மறுத்தனர். இந்த ஊழியிலே இப்படியென்றால் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன (செய்தித்தாள், வானொலி, தொலைக்காட்சி போன்ற ஊடகங்கள் இல்லாத காலத்தில்) எப்படியிருந்திருக்குமென்று உணரலாம்.

6. இந்தக் கதைகளில் எந்தக கதைக்கும் அடிப்படை சான்றுகளில்லை என்பதோடு செவி வழியாகச் சேர்த்த கதைகள் மக்களுக்குத் தெரிய வேண்டுமென்பதற்கு இவை இதில் சேர்க்கப்பட்டுள்ளன.

## வள்ளுவர் பற்றிய இலக்கியக் குறிப்புக்கள் :

"உள்ளத்தால் உமிழ வேண்டா உறுபடை வந்துகூட
**வள்ளுவர் முரச மூதூரறைகென வருளினானே"**

(சீவகசிந்தாமணி 2149)

1. 'செல்வச்சேனை வள்ளுவமுதுமகன்' - பெருங்கதை

"இறையியல் யானை யெருத்தததேற்றி
அறை பறை எழுந்ததால் அணிநகர் மருங்கென்" - சிலம்பு
வஞ்சிக்காண்டம் காட்சிக்காதை 194, 195

"செவ்வியிற் கணியன் கணியெழுநதுரைப்போன்" - சிலம்பு -
நீர்ப்படைகாதை - வ.48, 148

"பெரும்பனைக் கொட்டிலுளரும் பலி யோச்சி
முற்றலை காட்டிக் கொற்றலை பழிச்சித்
திருநாட் கல்லது பிறநாட் கறையா
செல்வச் சேனை வள்ளுவ முதுமகன்" - பெருங்கதை

"கோத்த நித்திலக் கேதை மார்பினான்
வாய்த்த அந்நிரை வள்ளுவன் முதுமகன்" - சீவகசிந்தாமணி 419

"வள்ளுவன் சாக்கையெனும் பெயர்
**மன்னர்க்குட்படு கருமத் தலைவர்க் கொன்றும்"**.

- பிங்கலநிகண்டு

"நாஞ்சில் வள்ளுவன் சுமார் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட சங்க காலத்துப் பாடற்றொகையுள் ஒன்றான **புறநானூற்றால் அறியப்படுபவன்**. இவன் நிலக்கிழமையும் கொடைக்குணமும் உடையவனாயிருந்தான் என்பது இவனைப் புலவர்கள் பாடிய பாடற்பொருளால் அறியக்கிடக்கின்றன புறப்பாடல்களில் (137). ஒரு சிறைப் பெரியனார், மருதன் இளநாகனார் (139), ஔவையார் (140), கருவூர்க்கந்தப்பிள்ளை (380). ஆகிய புலவர்கள் இவனைப் பாடியிருக்கின்றனர்.

ஒரு சிறைப் பெரியனார் (நாஞ்சில் வள்ளுவனைப் பாடியது,
"செல்வரைப் படம்பைநாஞ்சில் பொருந (புறம் - 137)
(நாஞ்சில் மலைப் பகுதிக்குத் தலைவன்)
மருதன் இளநாகனார் (நாஞ்சில் வள்ளுவனைப் பாடியது)
"உயர்சிமைய உழாஅ நாஞ்சில் பொருந" (புறம் - 139)
(களப்பையால் உழப்படாத மலைநாட்டுககுத் தலைவன்) ஔவையர்
(நாஞ்சில் வள்ளுவனைப் பாடியது)
"தடவுநிலைப் பலவின் நாஞ்சில் பொருந" (புறம் - 140)
கருவூர் கந்தப்பிள்ளை (நாஞ்சில் வள்ளுவனைப் பாடியது)
"தீஞ்சுனைப்-பயவின் நாஞ்சில் பொருந" - (புறம் -380)
(பாண்டியனின் படைத்தலைவன் மறவனாகத் திகழ்ந்தவன்)
நாஞ்சில் அல்லது படையும் அறியார் - (புறம் - 20)

ஒரு பாடலில் இவன் "நாஞ்சில் பொருநன்" என்று அழைக்கப்படுகிறான். "உயர்சிமய உழாஅ நாஞ்சிற் பொருந" என வருவதால் இங்கே நாஞ்சில் என்ற சொல் அப்பெயரையுடைய மலையைக் குறிப்பதெனத் தெரிகிறது.

"இவன் கொடைத்தன்மையைப் பற்றி ஔவையார் குறிப்பிடும்போது 'நாங்கள் தோட்டங்களில் பறித்துச் சமைத்த கீரையில் மேல் தூற்றுவதற்குக் கொஞ்சம் அரிசி கேட்டோம்: அவனோ வரிசை

அறிந்து கொடுக்கும் வண்மையாளன் ஆதலால் குன்றமன்ன யானையைக் கொடுத்துக் கொடைமடப் பட்டான்' என்று கூறுகின்றனர். ஒரு சிறைப் பெரியனார் இவனை, "மூவேந்தரையும் நினைக்க வேண்டாதவாறு கொடுப்போன்" என்று குறிப்பிடுகின்றார்.

"ஈதல் ஆனாய் வேந்தே; வேந்தர்க்குச் சாதல் அஞ்சாய் நீயே" எனவரும் தொடரில் 'வேந்தன் என்றது சேரனை' எனப் புறநானூற்று உரைகாரர் கொள்கின்றார். பதிப்பாசிரியரும் 'இவன் சேரனிடத்து அன்புற்றுப் படைத்துணையாய் நின்றோன்' என்கிறார். ஆனால் கருவூர்க் கந்தப்பிள்ளை பாடிய பாடலில் இவன் 'தென்னவன் வயமறன்' என்று கூறப்படுகின்றான். ஆதலால் பாண்டியனுக்கும் படைத் தலைவனாய் இருந்தான் என்று கொள்ள வேண்டியிருக்கிறது. இவன் பெயரால் இது நாஞ்சில் நாடு என்றும் பெயர் கொண்டது எனக் கொள்வது இதற்கு ஓர் ஏற்றம் தருவதாகவே அமையும்.

வள்ளுவர்கள் அரசர்க்கு அறிவுரைக்கும் ஐம்பேராயத்தில் முகாமையான பங்கு பெற்றிருந்தனர்.

வள்ளுவன் அரசன் ஆணையை முரசறைந் தறிவிப்பவன், சாக்கையன் அரசர்க்கே நாடகம் நடிப்பவன். இவர்கள் அரசர் தொடர்பு கொண்ட அரண்மனைப் பணியாளர்.

அன்றைய வாழ்வியலிலும், அரசியலிலும் ஆசான் பெருங்கனிகளாக இருந்து வந்த தனிப் பெரும் தகுதியை வள்ளுவர்கள் மட்டுமே பெற்றிருந்தனர்.

சேரநாட்டில் மட்டுமின்றிப் பிற சிற்றரசுகளிலும், பேரரசுகளிலும்கூட இவ் வள்ளுவர்களே ஆசான் பெருங்கணிகளாக இருந்தனர்.

புறநானூற்றில் வரும் நாஞ்சில் வள்ளுவனை நாஞ்சில் பொருநன் என்று குறிக்கின்றனர். போர்த் தலைவனையோ, மறவனையோ படைத்தலைவனையோதான் பொருநன் என்றனர்.

பண்டை நாளில் வள்ளுவர்களே பாடம் கற்பிக்கும் ஆசிரியர்களாக இருந்தமையால் அவர்கள் ஆசான் என்னும் பட்டத்திற்கு உரியவராக இருந்தனர்.

நிமித்திகன் என்னும் சொல்லே சாக்கை, வள்ளுவன், கணக்கன் வழியிலுள்ளார், காவிதியார் என்றெல்லாம் பொருள்படுமெனச் சூடாமணி பன்னிரண்டு நிகண்டு கூறும் இனி, அரசர்க்குக் கருமத்தலைவராய் உயர்பதவி வகித்தவர்க்கு வள்ளுவன், சாக்கை என்ற சிறப்புப் பெயர்கள் முன்பு வழங்கலாயின என்பது,

"வள்ளுவன் சாக்கையெனும் பெயர் மனர்க்கு
உள்படு கருமத் தலைவர்க் கென்றும்"
என்ற திவாகர நிகண்டு நூற்பாவால் அறியலாகும் என்று பேராசிரியர் மு.இராகவையங்கார் விளக்கமும் விரித்துரைக்கும்

"சிறி சோகிரத்துப் பருடையாரும் ......... இராய சேகரராயின வள்ளுவருங் கூடிச் செய்த கச்சமாவது" என்ற கல்வெட்டுக் குறிப்பும் வள்ளுவர்கள் உன்படு கருமத் தலைவராக இருந்ததைக் காட்டுவன. இத்தகைய அரசியல் பதவியால் வள்ளுவர்களுக்கு வழிவழியாய் வந்த ஆழமான அரசியல் பின்புலமின்றி திருக்குறள் போன்ற ஒரு நூல் பிறந்திருக்காது என மு.இராகவையங்கார் கூறுகிறார்.

வள்ளுவர்கள் கணியம் பார்ப்பதில் வல்லவர்கள் என்பதில் ஐயமில்லை. பிறப்பியல் எழுத வேண்டி இவ்வள்ளுவர்களையே எல்லோரும் நாடி வந்தனர். வள்ளுவர்கள் பழந்தமிழர்களில் ஒரு பிரிவினராயினும் பார்ப்பனரும் மதித்து வந்தனர். பார்ப்பன மகளிர் கணியம் கேட்பதற்கும் பிறப்பியம் எழுதுவதற்கும் வள்ளுவர்களையே நாடினராம்.

கணியருள் ஒரு பிரிவினர் வள்ளுவர் எனப்பட்டதாகத் தெரிகிறது.

அணுவியல் கோட்பாட்டை முதன் முதல் தந்தவர்கள் வள்ளுவக் கணியர்களே. வள்ளுவர்கள் ஆக்கித்தந்த கணிய-வாணியன் அறிவியல் துறைகளும் மருத்துவத் துறைகளும், மருத்துவமும், இசையும். பின் பார்ப்பனியம் தமதாக்கிக் கொண்டது.

194-ஆம் புறப்பாட்டைப் பாடிய பக்குடுக்கை நன் கணியனார் தான் அணுக்கோட்பாட்டை உலகுக்கு முதன் முதலில் படைத்தளித்தவர். இவர் வள்ளுவ இனத்தவரே, கணியரே.

வளளுவரும் கணியரும் - குணா

மொழி ஞாயிறு பேராசிரியர் ஞா.தேவநேயப்பாவாணர் திருக்குறள் தமிழ் மரபுரையில் கீழ்க்கண்டவாறு வள்ளுவனுக்கு விளக்கம் தருகிறார்.

இவர் பெயர் வள்ளுவன் என்பதே. வள்ளுவர் என்பது உயர்வுப்பன்மை. இவரது இறைப்பற்றோடு கூடிய ஒழுக்கத்தின் உயர்வும் இவர் நூலின் மறைத் தன்மையும், இவருக்குத் திருமை (தெய்வத்தன்மை) யுண்டாக்கியதினால், இவர் பெயருக்கு முன் திரு என்னும் அடைமொழி சேர்க்கப்பெற்றது.

வள்ளுவன் என்பது இயற்பெயராகவும் இருக்கலாம், தொழில் பற்றிய பெயராகவும் இருக்கலாம். இவற்றுட் பின்னதென்பதே பெரும்பான்மைப் பொருத்தம்.

வள்ளுவன் என்பான், அசன் கட்டளையைப் பறையறைந்து அறிவிப்பவன் என்று பெருங்கதையும், அரசர்க்கு உட்படுகருமத் தலைவன் என்று பிங்கலநிகண்டும், புள்ளுவன் (நிமித்திகன்) என்று சீவக சிந்தாமணியும் கூறுகின்றன.

வள்ளுவன் என்ற சொற்கு கூர்மதியன், வல்லவன், வள்ளியோன் என்று முப்பொருள் கொள்ளலாம்.

"ஏற்றூரி போர்த்த விடியுறழ் தழங்குகுரற்
கோற்றொழில் வேந்தன் கொற்றமுரசம்

பெரும்பணைக் கொட்டிறு எரும்பலி யோச்சி
முற்றலை : ாட்டிக் கொற்றவை பழிச்சித்
திருநாள் படைநாள் கடிநா ளென்றிப்
பெருநாட் கல்லது பிறநாட் கறையாச்
செல்லச் சேனை வள்ளுவ முதுமகன்"

என்று பெருங்கதை (2:28-33) கூறுவதால், வேத்தியல் விளம்பர அதிகாரியான வள்ளுவன் பெருமை விளங்கும் (முதுமகன் முப்பதாண்டிற்கு மேற்பட்டவன்) இவனையே பிங்கலநிகண்டு.

"வள்ளுவன் சாக்கை யெனும்பெயர் மன்னர்க்
குள்படு கருமத் தலைவர்க் கென்றும்" (5 - 118)

என்று உள்படு கருமத்தலைவருள் ஒருவனாகக் குறிக்கும். வள்ளுவன் அரசன் கட்டளையே முரசறைந்து அறிவிப்பவன், சாக்கையன் அரசர்க்கே நாடகம் நடிப்பவன். ஆதலால் இவ்விருவரும் அரசர் தொடர்பே கொண்ட அரண்மனைப் பணியாளராவர்.

பெருங்கணி குறித்த நன்னாளிலேயே வள்ளுவன் பறையறைய வேண்டியிருந்ததினாலும், வள்ளுவனைப் புள் (நிமித்தம்) அறிவிப்பவன் என்று சிந்தாமணி கூறுவதாலும் வள்ளுவர் என்பார் இன்றும் கணியராயிருந்து வருவதனாலும் பண்டை வள்ளுவனும் கணியம் அறிந்தவனே என்று கருத இடமுண்டு. நாள்கோள்களின் இயக்கத்தையறிந்து ஐந்திறம் (பஞ்சாங்கம்) வகுத்தற்கும் அரசர்க்கும் பிறப்பியம (சாதகம்) எழுதுதற்கும் நுண்மாண் நுழைமதி வேண்டியிருத்தலின் கணியருள் ஒரு பிரிவார் வள்ளுவர் எனப்பட்டதாகத் தெரிகின்றது.

நாஞ்சில் வள்ளுவனைப் பாடிய ஒருசிறைப் பெரியனார், மருதனிளநாகனார், ஔவையார், கருவூர்க் கந்தப்பிள்ளை ஆகிய நால்வரும் அவனை 'நாஞ்சில் பொருநன்' என்றே குறிக்கின்றனர். பொருநன் போர் மறவன் அல்லது படைத்தலைவன்.

''பொருந ரென்ப பெரும்போர்த் தலைவர்'' என்பது பிங்கலநிகண்டு (5:119)

"அறம்பொரு ளின்பம்வீ டென்றுமந் நான்கின்
திறந்தெரிந்து செப்பிய தேவை - மிறந்தேயும்
வள்ளுவன் என்பானோர் பேதை யவன்வாய்ச்சொற்
கொள்ளாக ரறிவுடை யார்''

என்று மாமூலனார் பெயரிலுள்ள திருவள்ளுவமாலைப்பாவும் திருவள்ளுவரைத் தெய்வப் பிறப்பினரென்றே கொள்ள வேண்டுமென்றும் மறந்தும் மக்கட் பிறப்பினராகக் கொள்ளக் கூடாதென்றும், கூறுகின்றதேயன்றி அவர் குடி எள்ளளவேனும் இழிவுள்ளதாகக் கருதுவதன்று.

## நூற்பெயர் :

உரையாசிரியப் பெருமக்கள் சிலர் "**திருவள்ளுவப்பயன்**'' என்றே திருக்குறளைக் குறிப்பிடுகின்றனர்.

**திருவள்ளுவ மாலை 55 பாடல்களிலும் "திருக்குறள்" என்ற பெயரே காணப்படவில்லை**. சில பாடல்கள் ''குறள்'' என்றும் "குறள்வெண்பா" என்றும் கூறுகின்றன.

திருக்குறளின் **இயல்பான பெயர்** ''முப்பால்'' என்றே தெரிய வருகிறது. ''பதினெண்கீழ்க்கணக்கு'' நூற்களைக் கூறும் வெண்பாவும் கூட முப்பால் என்றே கூறுகிறது.

பெருங்கதை நூல் ''வள்ளுவனார் வைப்பு'' என்றும் "வள்ளுவதேவன் வசனம்" என்றும் கூறும், கம்பர் "**எழுதுண்ட மறை**" என்பார், **அருணகிரி நாதர் "வாய்மை என்கிற பழமொழி** என்பார்.

எனினும் "திருக்குறள்'' எனும் பெயர் நிலைபெற்று வழங்கி வருவதுபோல் நூலாசிரியரின் பெயரும் திருவள்ளுவர் என்றே வழங்கி வருகின்றது.

"பொருந ரென்ப பெரும்போர்த்தலைவர்" - பிங்கல நிகண்டு

பழங்காலப் பாண்டிய நாடு, இக்காலத்துள்ள மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி, கன்னியாகுமரி மாவட்டங்களையும், புதுக்கோட்டையில் வெள்ளாற்றுக்குத் தெற்கிலுள்ள நிலப்பரப்பையும் கொண்டு விளங்கிற்று.

## கன்னியாகுமரி மாவட்டம்

கன்னியாகுமரி மாவட்டம் வடக்கும் கிழக்கும் நெல்லை மாவட்டமும், மேற்கிலும் தெற்கிலும் கடலும், வடமேற்கில் கேரளநாடும் எல்லையாகக் கொண்டது.

கன்னியாகுமரி மாவட்டத்தின் தென்பகுதியாகிய அகஸ்தீஸ்வரம், தோவாளை இருவட்டங்களும் இன்றும் நாஞ்சில் நாடு என்றே வழங்கப்படுகிறது.




அரசு வெளியிட்ட கன்னியாகுமரி மாவட்ட நிலவரைபடம்

# ANCIENT VALLUVANADU IN KANYAKUMARI DISTRICT

(Rough Map - Not to Scale)




குறிப்புரை :

மேற்கண்ட **நிலவரைபடம் ஆய்வுக் களஞ்சிய ஆசிரியரால் வரைந்து வெளியிடப்பட்டது**. இதில் **கல்குளம் தாலுகாவை வள்ளுவ நாடு** எனக் குறிப்பிட்டுள்ளார். கல்குளம் நிலப்பரப்பை மாற்றி, ***திருநாயனார்க்குறிச்சி* வள்ளுவன் கல்பொற்றை** என இரண்டு இடங்களைப் புதிதாகச் சேர்த்து குமரி மாவட்ட நிலவரைபடம் வரைந்துள்ளார். இவ்விரு **இடங்களும் சங்க காலத்து இல்லாத ஊர்கள்**. மேலும், அரசு வெளியிட்ட கல்குளம் வட்டமும் ஆய்வுக்களஞ்சிய இதழாசிரியர் வரைந்த கல்குளம் வட்டமும் வரைபட வேறுபாடு.

விளவங்கோடு எவ்வாறு வள்ளுவன் கோடாயிற்று?

மேலும் விளவங்கோடு (வட்டம்) என்னும் பெயர் வில்லவன் கோடு என்பதன் திரிபேயன்றி வள்ளுவன் கோடு என்பதன் திரிபன்று (சான்று Kerala Ottamthullal)

The Vilavancode (earlier Villavan Code - Capital of the Villava Kings) - by M.Immanuel in his book Anatomy of a Folkore (Ottan Kathai) - Page No. XIV & 1

# ANATOMY OF A FOLKLORE
## (Ottan Kathai)

[A Deified Spy and his King Viira Martanda Varma]

This is a true story that had happened between 1720 and 1729 AD, in the so uthern parts of India when the kingly rule w~s flourishing in this land. Kerala, otherwise called Venadu> 'the gods' own land' was a country that was ruled by many 'Just' kings for many hundreds of centuries. Although the history of this country and its great people have been lost, in manvwavs, for thousands of years , there 'had been smaller tales written in the form of folklore by its innocent men. Scattered lyrics and literature also give us the story of this land and its industrious folks. Many wars had been fought here. Many castles have become the sites of ruin, now haunted by ghosts. The rivers of this land still run silently carrying their secret stories to bury them into the ocean depths, or perhaps, to be retold in the next rains! This story had happened in the south most suburbs of Venadu, which forms the Kanniyakumari District of the present Tamilnadu.

Kanniyakumari District is a very picturesque place with all its undulating greeneries of the mountain terrains, its rivers, reservoirs and the vast paddy fields. The Nanjil paddy-field could feed its entire people and still keep) surplus to fill its great granaries for any period of bad seasons. **The Vilavancode (earlier Viliavan Code - Capita] of the Viilo-va kings)** can boast of its tall Palm-trees holding Various treatises of sciences written on their leaves and the beautiful little flowers that decorated the

Chera Crowns for a thousand years. Many wars have been fought here. This region had been the training ground of warfare for

## நாஞ்சில் மலை

நாஞ்சில் நாட்டின் முதல் தலைவனாகவிருந்தவன் நாஞ்சில் குறவன். இப்போதைய தோவாளைத் தாலுகாவில் அழகியபாண்டிபுரத்தின் பக்கத்தில் "குறத்தியறை" (குறத்தியை ஓர் அறையில் வைத்துப் பூட்டிய இடம்) என்ற ஊர் இருப்பதையும் "குறவன் தட்டுவிளை" என்ற நிலப்பகுதி இருப்பதையும், சோரை வயல் என்ற பெயருள்ள இருவயல்கள் இருப்பதையும் இன்றும் காணலாம். **சோரை வயல் (குருதி வயல்) அரசன் பாடு வயல்** - அரசனைக் கொன்ற இடம் (சூரன்பாடு என்பது போல் அரசன்பாடு). நாஞ்சில் குறவர்கள் அனைவரையும் ஓரிடத்தில் ஒரு பந்தலின் கீழ் அமரச் செய்து அத்தனைபேரையும் பந்தலின் கீழ் கொன்று அழித்த இடம் என்பது செவி வழிச் செய்தி.



நாஞ்சில் மலை தோவாளை பகுதி

**குமரி மாவட்டத்தில் வள்ளுவக் குடியில் பிறந்த நாஞ்சில் குறவன் பகுதியாகிய தோவாளைத் தாலுகாவில் திருமடவளாகம் (குறத்தியறை) யில் பாண்டியனால் கட்டப்பட்ட ஸ்ரீஜெயந்தீஸ்வர உடைய நயினார் கோவில் உள்ளது.** முத்திரட்டீசரமுடையார் கோவிலே என்றும் ஸ்ரீஜெயந்தீஸ்வரமுடையார் கோயில் என்றும்

அழைக்கப்படுகிறது. இப்பெயர் கோயிலின் முன் எழுதப்பட்டுள்ளதை இன்றும் காணலாம்.

## ஸ்ரீ ஜெயந்தீஸ்வர உடைய நயினார் கோவிலும் குறத்தியறை களஆய்வும்






குறத்தியறையில் (திருமடவளாகம்) உக்கிரப்பெருவழுதி (புதுப்பிக்கப்பட்டுள்ளது) கட்டிய ஸ்ரீ செயந்தீஸ்வர உடைய நயினார் திருக்கோவில்.

இக்கோயில் பாண்டியனால கட்டப்பட்டது என்பதற்கு இக்கோவிலில் காணப்படும் விநாயகர் *சன்னதியின்* முன் மண்டபத்தில் **மீன் *சின்னம்*** பொறிக்கப்பட்டிருக்கிறது.



விநாயகர் சந்நதியின் முன் விமானத்தில பாண்டியனின் கயல் சின்னம் பொறிக்கப்பட்டுள்ளது. (ஸ்ரீ செயந்தீஸ்வர உடைய நயினார் கோவில்)

**மேலும் சோழர்காலக் கோயில்களில் தட்சணாமூர்த்திக்குத் தனிக்கோயில் இல்லை. பாண்டியன் கட்டிய கோயில்களில் தட்சணாமூர்த்திக்குத் தனிக்கோவில் உண்டு. அது திருமடவளாகம் (குறத்தியறை) கோவிலில் தனிக்கோவில் இருப்பதைக் காணலாம்.**



தட்சணாமூர்த்தியின் தனிக்கோவில் (ஸ்ரீ செயந்தீஸ்வர உடைய நயினார் கோவில்)

நாஞ்சில் குறவன் மகனுக்கு அழகியபாண்டியபுரம் முதலியாரிடம் பெண் கேட்க, வஞ்சனையால் இவனைக் குலத்தோடு அழிக்கக் கருதி, பெண் கொடுக்க இசைந்து **பொய் மண்டபம்** அமைத்து குறவர்களை எல்லாம் வரவழைத்து மணச்சடங்கு நேரத்தில் மண்டபத்தின் பொறியைத் தட்ட அம்மண்டபத்துள் இருந்த குறவர்கள் அனைவரும் மடிந்தனர் என்று நாகமையா அவர்கள் எழுதிய **திருவிதாங்கூர் விவரச்சுவடியில்** காணபபடுகிறது. **இது மெக்கன்ஸி என்பவரது கையெழுத்துப் பிரதியிலிருந்து பெயர்த்தெடுக்கப்பட்டது** என, **சே.சதாசிவம்** எழுதியுள்ளார்கள்.



குறவன்தட்டுவிளை குறத்தியறையில் ஏறத்தாள 200 அடிகளுக்குமேல் காணப்படும் பாறையில் நீள்சதுர வடிவத்தில் பாறையை குடைந்து எடுத்த கோயிலில் காணப்படும் ஔவையார் சிலை. இங்கு ஔவையாருக்கு ஆண்டுதோறும் வழிபாடு செய்து வருகின்றனர்



குடைவரைக் கோயிலைப் பார்வை செய்துவிட்டு நூலாசிரியருடன் திருக்குறள் ஆய்வு மையச் செயலரும் பொறியாளர் இரா.சிவராமகிருஷ்ணன் வரும் காட்சி.

குகையினுள் காணப்படும் ஔவையார் சிலை.



குறவன்திட்டுவிளையில் சில விக்கிரகங்கள் இருப்பதோடு, வட்டெழுத்தில் பொறிக்கப்பட்ட கல்வெட்டு ஒன்றும் காணப்படுகிறது. இதன் வடபுறம் உள்ள பாதையில ஒரு கோயிலும் இருக்கக் காணலாம். பாறையைக் குடைந்து செய்யப்பட்ட சிறு கோயில் உள்ளிருக்கும் உருவம் ஔவையாரின் தோற்றமே. இப்பகுதி நன்செய் நாடு என்ற பெயர் நாளடைவில் நாஞ்சில்நாடு என்று மருவிற்று என்பர் ஆய்வாளர்கள். நாஞ்சில் என்பது கலப்பை என்றும் கொழு என்றும் பொருள்படும். நாஞ்சில் அல்லது படையும் அறியார்'' என்பது புறநானூறு. நாஞ்சில் குறவன் உட்படு கருமத்தலைவராய் இருந்ததால் நாஞ்சில் நாடு என்பர்.



குறவன்தட்டுவிளையில் காணப்படும் சிறு பாறையின் மீது கொத்தப்பட்ட வட்டெழுத்துக்களால் ஆன கல்வெட்டு அது சிதைந்து காணப்படுகிறது இதனை திருக்குறள் ஆய்வு மைய நிறுவனத்தலைவரும் இந்நூலாசிரியருமான டாக்டர் திருக்குறள் கேசவ சுப்பையாவும் திருக்குறள் ஆய்வு மையச் செயலர் திரு.மு.குமரிச்செல்வன் அவர்களும் பொறியாளர் இரா.சிவராமகிருஷ்ணன் அவர்களும் பார்வையிடுகின்றனர்

இவ்வூர்ப் பெயரைக் குறிப்பிடுகின்ற கொல்லம் 252 (கி.பி.1077)-ம் ஆண்டைய சாசனம் இருக்கிறது. அழகிய பாண்டிபுரத்தின் மேல்பால் இருக்கும் மேல்கரைக் கோயிலில் அமைந்த சாசனத்தில் "கொல்லம் தோன்றி இருநூற்றி ஐம்பத்திரண்டாம் ஆண்டு நாஞ்சில் நாட்டு அதியனூரான அழகிய பாண்டிபுரத்து கண்ண தேவனான உத்தம பாண்டியச் சிலை செட்டியென் இந்நகரத்......................." என்று காணப்படுகிறது.

கன்னியாகுமரிக் கோவிலில் பொறிக்கப்பட்டுள்ள பராந்தக

பாண்டியன் சாசனமும் மூவேந்தர் நாட்டு எல்லை முறையே குடபுலம், குணபுலம், தென்புலம் என வழங்கப்பெற்றது. செந்தமிழ் மொழி வழங்கிய பன்னிரு நாடுகளுள் குட்டம், குடம், பூழி, மலாடு என்ற நாடுகள் உள்ளடங்கிய நிலம். குடமாகிய சேரநாடு சேலம், கோவை, மாவட்டங்களைக்கொண்ட கொங்கு நாடுகளும், சேரநாட்டுள் அடங்கும். இவை உள்நாடுகள் திவாகரம், பன்னிரண்டாவது சூத்திரத்தில் சேர மன்னர்களின் பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

"பூழியனுதியன், கொங்கன் பொறையன்
வானவன் குட்டுவன் வான வரம்பன்
வில்லவன் சிலம்பன் கோதை கேரளன்
போந்தின் கன்னிக்கோன் பொருத்துறைனன்
சேரலன் மலயமான் கோச்சேரன் பெயரே"

**வில்லவன் ஆண்ட பகுதியே வில்லவன் கோடாயிற்று**". இன்று விளவங்கோடு என்று அழைக்கப்படுகிறது.

## திருநயினார்க்குறிச்சி – கள ஆய்வு

இச்சிற்றூர் இப்பெயர் தாங்கி ஏறத்தாழ 300 ஆண்டுகள்தான் ஆகின்றன என்றும், அதற்கு முன்பு **கழகைப்பட்டினம்** என்ற **பெயர்தான் என்றும்**, அங்கு இன்று காணப்படும் கோயில் **கழகைப்பட்டின கறைகண்டேஸ்வரர் கோவில்** என்றும், இக்கோவில் கி.பி. **11ஆம் நூற்றாண்டில் இராச ராசர்** கட்டியதாகவும், அக்கோவிலின் முதல் பூசாரி **சந்திரசேகரன் போற்றி** என்றும் அவருக்கும்பின் அவர் **மகன் லெட்சுமணன் போற்றி பூசைகள் செய்தார்** என்றும் அவர் மறைவுக்குப்பின் அவரது மகன் (இப்போதுள்ள) சக்கரபாணி போற்றி என்றும் நேர்முகப் பேட்டியில் கிடைத்த செய்திகள். அவ்வூர் மக்களை விசாரித்தபோது 200 ஆண்டுகளுக்கு முன்பு **இவ்வூர் சந்தையாக இருந்தது** என்றும் சந்தை என்று அழைக்காமல் **சூழக்கடை** என்று அழைக்கப்பட்டதாகவும் இப்போதும் இப்பெயர்

நிலவியுள்ளது என்றும் கள ஆய்வில் கிடைத்த செய்தி (பேட்டி நாள் 17.4.2011). சந்தை - கூலக்கடை

18-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றிய திருநயினார்க்குறிச்சியை இம்மாவட்டத்தினின்று வெளிவரும் ஆய்வுக் களஞ்சிய மாதஇதழ் ஆசிரியர் சங்ககாலத்து எடுத்துச்சென்று திருவள்ளுவர் பிறப்பிடமாகப் புனைத்துரைத்துள்ளார். மேலும் திருவள்ளுவர் மன்னராக இருந்து ஆட்சி செய்தவர் என்றும், நயினார் நாயனாராக மாற்றி திருநாயனார்க்குறிச்சி என்று இடப்பெயரையும் மாற்றியுள்ளார். இப்பகுதி கடிகைப்பட்டினத்தினின்று 4 கல் தொலைவில் உள்ளது. தொல்லியல் ஆய்வாளர்கள் சிலர் : இக்கோயிலையும் சுற்றுப்புறத்தையும் பார்வையிட்டுச் சென்றுள்ளனர். இப்பகுதி குமரி மாவட்டத்தில் கல்குளம் தாலுகாவில் உள்ளது. கடிகைப்பட்டினம் கிராமத்தின் கீழ் உள்ள சிற்றூர். இக்கோவில் வந்தபின் பூசாரியின் வீட்டோடு இரண்டே வீடுகள் தான் இருந்தன என்று கூறுகிறார்கள். இங்கு மன்னர் ஆட்சி செய்த அரண்மனையோ, அக்கசாலையோ, எதுவுமில்லை, பண்டைய சேர நாட்டுடன் இணைந்த பகுதி.

இம்மாவட்டத்தில் நான்கு தாலுகாக்கள் உள்ளன. விளவங்கோடு, கல்குளம், அகஸ்தீஸ்வரம், தோவாளை, இதில் தோவாளை அகஸ்தீஸ்வரம் நாஞ்சில் நாடு. இந்த நாஞ்சில் நாட்டைப் பாண்டியன் உக்கிரப்பெரு வழுதி கைப்பற்றி ஆண்டு வந்தான் கி.மு. முதல் நூற்றாண்டில், அப்போதுதான் அவன் அவையில் நாஞ்சில் குறவன் வள்ளுவனை உட்படு கருமத் தலைவனாகப் பாண்டியன் நியமனம் செய்தான். பின் பாண்டியனைச் சோழன் படையெடுத்து வென்று நாஞ்சில் நாட்டைக் கைப்பற்றினான். அதன்பின் சேரன் சோழனைத் தோற்கடித்துத் தன்னாட்டோடு சேர்த்துக்கொண்டான். அப்போது இப்பகுதி வேணாடு என்ற பெயர் தாங்கி இருந்தது. பிற்காலத்து இது வேணாடு திருவிதாங்கூர் சமஸ்தானமானது அப்போது சேர மன்னன் மார்த்தாண்டவர்மா கல்குளம் தாலுகாவில் பத்மனாபபுரத்து அரண்மனை அமைத்து ஆண்டு வந்தான்.

இப்போதுள்ள குமரி மாவட்ட ஆட்சியர் அலுவலகம், கொட்டாரம், கிருஷ்ணன்கோவில் போன்ற இடங்களில் அரண்மனைகள் கட்டினான். அவைகள் இன்றும் காணப்படுகின்றன. கொட்டாரத்தின் பெயரால் கொட்டாரம் எனும் ஊர் கன்னியாகுமரிக்குச் செல்லும் வழியில் உளது. கொட்டாரம் குடியிருப்பு வீடுகளாக மாறியுள்ளது. பத்மநாபபுரம் கொட்டாரம் இன்றும், அப்பெயராலே கொட்டாரம் இருக்கிறது. படுக்கும் 64 மூலிகைகளைக் கொண்ட கட்டிலும் அணையாவிளக்கும். வீரவாள், போர்க்கவசங்கள், சுரங்கப்பாதை இவைகள் இன்றும் உள்ளன. இன்றும் கேரள அரசாங்கத்தின் கீழ் இருக்கின்ற சுற்றுலாத்தலம். இரணியலில் உள்ள கொட்டாரம் அழிவுற்ற நிலையிலுள்ளது. அங்குக் கட்டிய கோட்டையின் பெயராலே இரணியல் கோட்டை எனப்படுகிறது. பத்மநாபபுரத்தைச் சுற்றிய கோட்டை உதயகிரிக் கோட்டை என்று பெயர். உதயகிரிக் கோட்டையில் திவான் டிலனாய் அடக்கம் செய்யப்பட்ட இடம் இன்றும் காணப்படுகிறது. கிருஷ்ணன்கோவில் கொட்டாரம் அரசு அலுவலகங்களாக மாறிவிட்டன. கொட்டாரம் அப்படியே இருக்கிறது. நாட்டியக் கணிகைகள் வாழ்ந்த மாடத்தெரு இப்போதும் இப்பெயராலே காணப்படுகிறது. இவை தவிர கொட்டாரம வேறு எங்குமே இல்லை. ஆனால் அம்மச்சிக் கொட்டாரம், தளபதிகள் வாழ்ந்த கொட்டாரங்களும் உள.

திருவள்ளுவர் குமரி மாவட்டத்தில் நாஞ்சில் நாட்டில் குறத்தியறைமில் (மலைநாட்டில்) பிறந்து வாழ்ந்தார். அவர் காலத்தில் வழக்காற்றிலிருந்த சொற்களைத் தான் தன் நூலில் பயன்படுத்தி இருக்க முடியும் என்பதோடு சங்க காலத்தில் தோன்றிய நூல்களையும் படித்திருக்க வாய்ப்புண்டு. எனவே, இன்று நமக்குக் கிடைத்துள்ள பாட்டும், தொகையும் ஆகிய நூல்களில் காணப்படும் சொற்களும் விரவிக் காணப்படும். ஆதலால் கி.மு.வில் தோன்றிய பாட்டும், தொகையிலும் இவர் கையாண்ட சொற்கள் மிகுதியும் அதே பொருளில் இருப்பதைப் பரவலாகக் காணக் கிடக்கின்றன.

இதழாசிரியர் தரும் எடுத்துக்காட்டுகள் 700 ஆண்டுகளுக்குள் தோன்றிய தமிழின் குழவியாகிய மலையாளத்தில் சமஸ்கிருதம் கலந்த மலையாள மொழியில் இன்று பேசப்படும் எடுத்துக்காட்டுக்களே. **எழுத்தச்சன்,** குஞ்சுன் நம்பியார் வள்ளத்தோள் போன்றவர்களின் முயற்சியால்தான் கி.பி.14ஆம் **நூற்றாண்டின் பிறகே மலையாளம்** தோன்றியது. கி.பி.12-ஆம் நூற்றாண்டின்பின் **மலையாளத் தமிழ்** மொழிதான் கேரளாவில். அதற்கு முந்தைய நூற்றாண்டுகளில் அப்பகுதி **வேணாடு, சேரநாடு** என்பதாகும். அப்போது தூய தமிழ் மொழியே. இதனை ஆய்ந்தறிந்த மனோன்மணிய நூலாசிரியர் பேரா.சுந்தரம் பிள்ளையவர்கள் "**கன்னடமும், களிதெலுங்கும், கவின் மலையளமும் துளுவும் உன்உதிரத்து உதித்தெழுந்து ஒன்று பலவாகிடினும்**" என்பதிலிருந்து மலையாளம் தமிழ்மொழியின்று தோற்றம் பெற்றதே என அறியலாகும்.

மேலும் எந்த இடங்களில் மக்கள் தொடர்ந்து தங்கி வருகிறார்களோ அங்குப் புழங்கிவரும் வழக்குச் சொற்கள்தான் அங்கும் தோன்றும், இலக்கியங்களிலும் இடம்பெறும். புலம் பெயர்ந்து சென்றவர்கள் தாங்கள் சென்றடையும் நாட்டின் வழக்கு மொழியைத் தான் பின்பற்றுவது மரபு. எனவே, சொற்கள் மாற்றம் பெறுவதும் திரிவடைதும் இயல்பே. மலையாள மொழியில் '**படிஞாறே**' என்ற சொல்லை ஆயின் ஞாயிறு படிதல் மேற்குத் திசையில் எனவே, தமிழ் கலந்த மலையாள வடிவம் பெற்றதாகும். இவ்வாறு எத்தனையோ எடுத்துக் காட்டுகள் கூறமுடியும்.

**நல்லூர் – பழைய ஓலைச் சுவடி கள ஆய்வு**

**25 மே 2013** வைகாசித் திங்கள் விசாக நட்சத்திரத்தன்று அமரர் **மகாராஜ பிள்ளை** அவர்கள் **எழுத்தாணியால் 58** வருடங்களுக்கு முன் பரிமேலழகர் எழுதிய திருக்குறள் நூலின் குறட்பாக்களை (1330) எழுதிய ஏடு முற்றோதல் நிகழ்ச்சிக்கு அவரது பேரன் திரு. **மாணிக்க வாசகம்** (சார்பதிவாளர் பணிநிறைவு) என்னை

58வது திருக்குறள் குருபூசைச் சிறப்பு விருந்தினராக அழைத்திருந்தார். நான் அங்குத் தென்குமரித் தமிழ்ச்சங்கத் தலைவர் திரு சி.காப்பீத்துரை, திருமந்திர ஆய்வுக் கழகத்தின் உறுப்பினர் திரு ஆபிரகாம் லிங்கன் இவர்களோடு சென்று பூசையில் கலந்து மகராஜபிள்ளை அவர்கள் குடும்பத்தினரோடு சேர்ந்து திருக்குறள் முற்றோதலில் அப்பழைய ஏட்டை வாங்கி ஒவ்வொருவராகப் படித்தோம். அது இன்றைய தமிழ் அழகாக எழுத்தாணியால் எழுதப்பட்டது. முற்றோதல் முடித்ததும் நான் சிறப்புரையாற்ற திருமாணிக்க வாசகம் அவர்கள் எனக்கும் பொன்னடை போர்த்தினார். தீப ஆராதனைக்குப்பின் பிரசாதம் வழங்கினர். பின் வருகை தந்தவர்களுக்கு அன்னதானம் வழங்கப்பட்டது.

அதன்பின் ஏடுபற்றி விசாரித்தேன். குமரிக்கடல் இதழாசிரியருக்குக் கொடுத்த பேட்டியையே. திரு எம்.முத்துக்குமாரசுவாமிப்பிள்ளை அவர்கள் என்னிடம் ஏடு பற்றிய கூறிய செய்தியாவது: "எங்களது தாத்தா 1937இல் ரூ 2 அணா 4 காசு கொடுத்து சென்னையிலிருந்து வாங்கியது. அவருக்கு எழுத்தாணியால் எழுதத் தெரியும். ரக்குறள் நூலிலுள்ள குறட்பாக்களை ஏட்டுச் சுவடியில் எழுதினார். அவ்வேடுதான் நீங்கள் முற்றோதல் செய்த ஏடு என்றும், இதனை வருடத்திற்கு ஒருமுறைதான் அவ்வேட்டை வைகாசித் திங்கள் விசாக நட்சத்திரத்து மட்டுமே ஒரு சிறு அறையில் பூட்டி வைத்திருக்கும் ஏட்டை அறையைத் திறந்து எடுத்து முற்றோதல் செய்வது வழக்கமாகக் கொண்ட மரபை ஆய்வுக்களஞ்சிய ஆசிரியர் சிவ பத்மநாபன் 80 வயது முதிர்ந்த திரு எம். முத்துக்குமாரசுவாமி பிள்ளை அவரிடம் குடியரசுத் தலைவர் மேதகு அப்துல் கலாம் இவ் ஏட்டைப் படம் பிடித்துக் கொண்டுவர ஏற்பாடு செய்ததாக கலாமும் இவரும் சேர்ந்திருந்த படத்தையும் காட்டி மரபுக்கு மாறாக அறையைத் திறக்க வைத்து ஏட்டை எடுக்க வைத்துப் படமும் எடுத்துச் சென்றார் என்றார். இவ்வேட்டைத்தான் திருவள்ளுவர் ஏட்டைக் கண்டுபிடித்தேன் என ஆய்வுக்களஞ்சியத்தில் இட்டு பத்திரிகைகளுக்கெல்லாம் எழுதிக் கொடுத்துச் சென்றவிடமெல்லாம்

இதைப்பேசி ஒரு பரபரப்பைச செய்துவிட்டார் என்று பத்திரிகைகளையும் காட்டினார் திருமாணிக்க வாசகம் அவர்கள்."



திருக்குறள் ஏடு நல்லூரில் பாதுகாபபாக வைக்கப்பட்ட இடம்



திருக்குறள் குருபூஜைவிழா



சிறப்புரை ஆற்றியமைக்கு திருக்குறள் ஆய்வு மையத்தலைவர் திருக்குறள் கேசவ சுப்பையாவுக்கு பொன்னாடை போர்த்துகிறார் முத்துக்குமாரசாமிப்பிள்ளை



59 ஆண்டுகளுக்கு முன் நல்லூர் மகராஜபிள்ளை அவர்கள் சென்னையிலிருந்து வாங்கி வந்த பரிமேலழகரின் திருக்குறள் புத்தகத்தைப பாாத்து எழுத்தாணியால் எழுதி வைத்த ஏடுகள்.



59 ஆண்டுகளுக்கு முன் 1330 அருங் குறட்பாக்களை எழுத்தாணியால் எழுதிய அமரர் நல்லூர் மகாராஜபிள்ளை

இவ்வேடுகளை நானும் படம் எடுத்தேன். மகாராஜபிள்ளை 59 வருடங்களுக்கு முன் எழுதிய ஏடுகள். இது மட்டுமல்ல அவ்வைக்குறள், திருவாசகம். இவற்றையும் எழுதிய ஏடுகளையும் காண்பித்தார்கள்.

திருவள்ளுவர்  குருபூஜை மன்றம்

ஸ்தாபகர்: அமரர் கு. மகராஜபிள்ளை

நல்லூர் - 629 704

ஸ்தாபிதம்: 11 - 06 - 1957

---

பொறுப்பாளர்

திரு. ம. அருணாசலம் பிள்ளை (Late) க்குபின் திரு. ம. முத்து குமாரசுவாமிபிள்ளை

நல்லூர்

சார்பதிவாளர்(ப/நி)

கொட்டாரம் - 629 703

பெறுநர்

திருக்குறள் முனைவர் கேசவ சுப்பைய்யா அவர்கள்,
நிறுவனத்தலைவர்,
குமரி மாவட்டத் திருக்குறள் ஆய்வு மையம்,
நாகர்கோவில்.

ஐயா,

பொருள் : திருக்குறள் - பனை ஓலைச்சுவடி - எங்கள் பாட்டனார் - சிவத்திரு. கு. மகராஜபிள்ளை, நல்லூர் - எழுதியதை - திருவள்ளுவருடைய அசல் ஏட்டின் பிரதி - எனத் தவறான செய்தி வெளியிட்ட ஆய்வுக் களஞ்சிய ஆசிரியர் - திரு. சிவ. பத்மநாபன் - கூற்றுக்கு மறுப்பு - தெரிவித்து.

அன்பான வணக்கம்,

எனது தந்தையின் தந்தையும் எனது தாத்தாவுமான

உயர்திரு. K.மகராஜபிள்ளை அவர்கள சுசீந்திரம் அருகே உள்ள நல்லூர் எனும் ஊரில் வாழ்ந்து இறைவனடி சேர்ந்தார்கள்.

அவர் வாழும் காலத்தில் 11/06/1957ல் (எனக்கு அப்போது ஏழு வயது) "திருவள்ளுவர் குருபூஜை மன்றம்" என்ற அமைப்பினை 24/04/1957ல் அறக்கட்டளையாக நிறுவினார்.

என் தாத்தாவின் செயல்பாடு தெய்வீகமானது. உலகப்பொதுமறை என அனைவராலும் ஏற்றுப் புகழப்படும் திருக்குறளை மனனம் செய்ததோடு 1330 பாடல்களையும் பனை ஓலையில் எழுத்தாணி கொண்டு எழுதி மருங்கூர் சுப்பிரமண்ய சுவாமி சன்னதியில் முக்கியஸ்தர்கள் முன்னிலையில் சமர்ப்பித்தார்கள். எந்தக்குறளைக் கேட்டாலும் சொல்லும் நினைவாற்றல் படைத்தவராகத் திகழ்ந்தார்.

என் தாத்தா திருவள்ளுவரை குலகுருவாக ஏற்று, வணங்கி வாழ்த்தி வாழ்ந்து வந்தார்கள். அவர்கள் எழுதி வைத்த டிரஸ்ட் அறக்கட்டளை ஆவணத்தில் "திருவள்ளுவ நாயனார் பூஜை" பிரதி வருடம் வைகாசி மாதத்தில் கடைசியாக வருகிற அனுஷம் நட்சத்திரத்தன்று கல் பேழைக்குள் பித்தளை கதவுடன் பாதுகாக்கப்பட்டு வரும் மேற்படி ஏட்டினை எடுத்துப் படித்து பூஜை அடியந்திரம் நடத்த அறிவுறுத்தப்பட்டுள்ளது.

மட்டுமன்றி மேற்படி ஏடு பாதுகாத்து வைக்க நல்லூரில் ஒரு மடமும், அடியந்திரம் நடத்த செலவு வகைக்காக நிதியாதாரத்திற்காக மருங்கூர் கிராமத்தில் 11(பதினொன்று) சென்று இருப்பூ நஞ்சை நிலத்தினைத் தர்ம சாசனமாக எழுதிப் பதிவு செய்து நாளதுவரை தாத்தா விருப்பப்படி நடைபெற்று வருகிறது.

மேற்படி எங்கள் தாத்தாவும் எங்கள் குலத்தலைவருமான கு.மகராஜ பிள்ளை முதுமையின் காரணமாக 65 வயதில் 1959ம் ஆண்டில் இறைவனடி சேர்ந்தார்கள்.

எங்கள் தாத்தா தர்மசாசன விதிப்படி ஆண்வாரிசுகளில் மூத்தவர், அதன்பின் இருப்பவர்களில ஆணில் மூத்தவர் இந்தத் தர்ம அடியந்திரம் நடத்த வேண்டும்.

அதன்படி என் தாத்தாவின் மூத்த புதல்வர் எனது தந்தை உயர்திரு. ம.அருணாசலம்பிள்ளை பணிநிறைவு பெற்ற சார்பதிவாளராகும். என் தந்தை குடும்பத்துடன் கொட்டாரம் ஊரில் வசித்து வந்தார்கள்.

எனது தந்தை அவருடைய 87-வது வயதில் 28/03/2010ல் இறைவனடி சேர்ந்தார்கள். தந்தையின் 79-வது வயதிலேயே உடல் நிலை தளர்ந்ததின் காரணமாக அவருக்கு அடுத்த சகோதரனான எனது சித்தப்பா உயர்திரு. ம.முத்துகுமாரசாமி பிள்ளையை என் தந்தையின் முன்னிலையில் குருபூஜை செய்ய அனுமதித்து வந்தார்கள்.

இந்நிலையில் எங்கள் குடும்பச் சொத்து எங்கள் குலபொக்கிஷமாக மேற்படி தாத்தா எழுதின திருக்குறள் ஏட்டினை கல்பேழைக்குள் வைத்து பித்தளைக் கதவுப் பூட்டுடன் பராமரித்து வருகிறோம். பிரதி வருடம் வைகாசி மாதம் அனுஷ நட்சத்திரம் அன்று மட்டும்தான் கூஷ பேழை திறக்கப்படும். இதர நாட்களில் மூடப்பட்டுப் பாதுகாக்கப்பட்டு வருவதுமாகும்.

இந்தச் சந்தர்ப்பத்தில் 2002-ம் ஆண்டு டிசம்பரில் கன்னியாகுமரி வரலாற்றுப் பண்பாட்டு ஆய்வு மையம் என்ற அமைப்பின் பொதுச்செயலாளரும், "ஆய்வுக்களஞ்சியம்" ஆசிரியருமான முனைவர் சிவ.பத்மனாபன் அவர்கள் நல்லூரில் எங்கள் சித்தப்பா திரு.ம.முத்துகுமாரசுவாமியைச் சந்தித்து இருக்கிறார்.

அன்றைய தினம் நல்லூர் குருபூஜை மடப் பொறுப்பிலிருப்பவரும், கொட்டாரம் ஊரில் வாழ்ந்து வருபவருமான எனது தந்தையும் எனது தாத்தாவின் மூத்த குமாரருமான

திரு.ம.அருணாசலம் பிள்ளையை சந்திக்காமல் எனது தந்தைக்கு அடுத்தவரான திரு.ம.முத்துகுமாரசுவாமி பிள்ளையைச் சந்தித்து அவரது புத்தியை திரித்து (Brain wash) ஆசை காட்டி வைகாசி மாதம் மட்டும் திறக்கப்பட வேண்டும் என்ற சட்டத்தை மீறி எனது பாட்டனாரின் ஏட்டுப்பேழையைத் திறக்க வைத்து அதில் அடங்கிய என் தாத்தாவால் எழுதப்பட்ட திருக்குறள் ஏடு, குருபூஜை மடம் மற்றும் என் சித்தப்பா உட்பட அனைத்தையும் புகைப்படம் எடுத்ததோடு மட்டுமல்லாமல் கீழ்க்கண்ட பொய்யான தகவலை நாளிதழ்களில் பிரசுரம் செய்துள்ளார்.

பொய்யான தகவல் என்னவெனில், திருவள்ளுவருக்கும், எங்கள் மூதாதையர் குடும்பத்திற்கும் நெருக்கமுள்ளதாகவும், அசல் திருக்குறள் ஏட்டை என் தாத்தா பார்த்ததாகவும், அந்த ஏடு எங்கள் குடும்பத்திற்குக் கிடைத்ததாகவும் அந்த ஏடு அழிந்துவிடக் கூடாதென எண்ணி எனது தாத்தா புதிய ஏட்டில் எழுதியதாகவும், ஒரு உயர்ந்த கற்பனையை உருவாக்கி ஷ சிவ. பத்மனாபன் 27/12/2002 நாளிட்ட தினமலர் நாகர்கோவில் பதிப்பில் செய்தியாகக் கொடுத்துள்ளார். மட்டுமன்றி அன்றைய ஜனாதிபதி டாக்டர். அப்துல்கலாம் அவர்களிடம் திருவள்ளுவர் பிறந்த இடம் கன்னியாகுமரி மாவட்டம் எனத் தெரிவித்துப் பாராட்டும் பெற்றுவிட்டார்.

இந்தச் செய்தி முற்றிலும் முரண்பாடானது, அதில் எவ்வித உண்மையும் கிடையாது. மேலும் அவர் கூற்றுக்கு எவ்வித ஆதாரமும் கிடையாது.

இந்த நாளிதழ் செய்தியைக் கண்ட நான் ஷ திரு.சிவ.பத்மனாபன் அவர்களிடம் தவறான செய்தியை வெளியிட்டதைக் குறித்து நேரில் எதிர்ப்புத் தெரிவித்தமைக்கு அவர் சரியான பதில் ஏதும் என்னிடம் கூறவில்லை.

அன்றைய தினம் நல்லூர் குருபூஜை மடத்தில் பொறுப்பிலிருந்த என தந்தை ஓய்வு பெற்ற சார்பதிவாளர் திரு.ம.அருணாசலம் பிள்ளையை பற்றி அவர் வெளியிட்ட செய்தியில் எவ்வித தகவலும் குறிப்பிடாததில் இருந்தே தவறான செய்தியை வெளியிட்டு உள்ளார் என்பதற்கு இதுவே ஆணித்தரமான ஆதாரமாகும். எங்கள் தாத்தா மானசீகமாக குருவாக ஏற்ற திருவள்ளுவர் பெருந்தகையைத் தவறாக எங்கள் குடும்பத்தோடு நெருக்கமாக இருந்தவர் எனக் கற்பனை செய்து, முன்னுக்குப் பின் முரணான செய்தியை திரு.சிவ.பத்மனாபன் வெளியிட்டுள்ளார் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

அவர் மூலம் வந்த செய்திகளை வன்மையுடன் மறுக்கிறேன்.

திருக்குறள் ஆய்வு மைய நிறுவனத்தலைவருக்கு இந்த உண்மையைத் தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

நாள் : 22/06/2013 இவண்,

இணைப்பு : தினமலர் 27/12/2002 செய்தி ஜெராக்ஸ்

A.மாணிக்கவாசகம்

22/6/13

சார்பதிவாளர் (ப/நி)

P.R.O., Gurupuja Mandram, Nallur.

"அருண் அகம்"

தெற்குத்தெரு,

கொட்டாரம் - 629 703.

### சங்க காலம் :

கி.மு. 3-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 3 வரை சங்ககாலம்.

பாண்டியர்

**தலைச்சங்கம்** : **காய்சின வழுதி முதல் கடுங்கோன் ஈறாக 89** பேர்கள். 4440 ஆண்டுகள்

## இடைச்சங்கம் : 3700 ஆண்டுகள்

பாண்டியர் வெண்டேர் செழியன் முதல் முடத்திருமாறன் ஈறாக 59. அரசர்கள்.

## கடைச்சங்கம் : 1850 ஆண்டுகள்

முடத்திருமாறன் முதல் உக்கிரப்பெருவழுதி ஈறாக (கி.பி.200 வரை 49 ஆண்டுகள்)

### பாண்டிய மன்னர்கள்

கி.மு. 30,000 ஆண்டுகளுக்கு முன்பே தமிழகத்தில் **பாண்டியர் முதற்சங்கம் நிறுவி தமிழாய்ந்தனர்** என்பது தொல்காப்பியமும். சிலம்பும் வழி அறியக் கிடக்கின்றது.

குமரிக்குத் தெற்கே இருந்த பாண்டிநாடு கடல் கொள்ளப்பட்டது. சங்கநூல்கள், கல்வெட்டுக்கள் செப்பேடுகள்வழி பாண்டியர் வரலாறு கி.மு. 30,000 இருந்து கி.பி.20 வரை அறியப்போதிய சான்றுகள் கிடைக்கப் பெற்றுள்ளன.

விந்திய மலைக்கு வடக்கிருந்த தமிழ்நாடு கங்கை நாடு, எருமைநாடு, இமயநாடு என முப்பிரிவுகளையும் விந்தியமலைக்கும் குமரியாற்றிற்கும் இடைப்பட்ட தமிழ்நாடு, துண்டீரநாடு, தும்பர்நாடு, கொங்கர் நாடு, மழவர் நாடு, சோழ நாடு, பாண்டிய நாடு, சேரநாடு என எண் பிரிவுகளைக் கொண்டும், குமரியாற்றுக்குமரி, கன்னியாற்றுக்கும் இடைப்பட்ட தமிழ்நாடு குமரி நாடு, பெருவள நாடு, தென்பாலி நாடு எனவும் இருந்தன.

குமரி நாடு, ஏழ்மதுரை நாடு, ஏழ் தெங்க நாடு, ஏழ்குறும்பனை நாடு, ஏழ் முன் பாலைநாடு, ஏழ்பின் பாலை நாடு ஏழ்குன்ற நாடு, ஏழ் குணகரைநாடு என 49 நாடுகள் காணப்பட்டன.

## சங்ககாலப் பாண்டிய மன்னர்கள்

சங்ககாலம் என்பது மதுரையில் பாண்டியர்கள் முதல் இடை, கடை என்னும் முச்சங்கங்கள் நிறுவி வளர்த்த காலம். அக்காலத்து, காய்சினவழுதி முதல் கடுங்கோள் வரை ஆட்சி செய்திருந்தனர். இச்சங்கத்தை நிறுவி வளர்த்தவன் வெண்டேர்ச் செழியன். முதல் முடத்திருமாறன் ஈறாக உள்ள பாண்டிய மன்னர்கள். 49 பாண்டிய மன்னர்களும் இறுதியாக **உக்கிரப்பெருவழுதி** ஆட்சி செய்துள்ளான் (கி.பி. 250) பாண்டி நாட்டையும் சேரர், சோழர், பாண்டியர் ஆண்டுள்ளனர். தெற்கெல்லையாகக் **குமரிமலையும், குமரியாறும், பஃறுளி ஆறும்** இருந்தன. **பஃறுளி ஆற்றை நிலந்தருதிருவின் பாண்டியன் வெட்டுவித்தான்** என வரலாறு கூறுகிறது. கிரேக்க நாட்டாசிரியர் மலயத்துவச பாண்டியன் ஒருவனைக் குறிப்பிடுகிறார். சூளாமணியில் தன்சுடரோன்வழிமருகன் என்ற பாண்டியன் பெயர் குறிக்கப்படுகிறது. இடைச்சங்ககாலத்து முடத்திருமாறன் என்ற பாண்டியனை இறையனார் களவியலுரை கூறுகிறது. மாறவர்மன் சுந்தரபாண்டியன் ஆட்சியில் கொற்கை பாண்டியனது தலைநகராக இருந்தது எனச் சிறுபாணாற்றுப்படை "கொற்கைக் கோமான்" என்கிறது. பாண்டியனை நெட்டிமையார் பல்யாக சலை முது குடுமிப் பெருவழுதியைப் பாடியுள்ளார். உக்கிரகுமார பாண்டியன், கடல் வடிவம்-பல நின்ற பாண்டியன் எனப்புகழப் பெற்றான். கடல்கோளுக்கு முன்னும் பின்னும் திருமாறன் எனும் பாண்டியன் ஆட்சி புரிந்துள்ளார் என ரா.இராகவையங்கார் கூறுகிறார். காரிகிழார், வேள்விக்குடி செப்பேடு காரிகிழார், முதுகுடுமிப் பெருவழுதி இவர்களைக் குறிப்பிடுகிறது. கடைச்சங்ககாலத்து, பாண்டியன் மதிவாணன் என்பவன் பாண்டி நாட்டை ஆண்டுள்ளான்.

பொற்கைப் பாண்டியன், பாண்டியன் அறிவுடைநம்பி, ஒல்லையூர்தந்த பூதப்பாண்டியன், கடலுள்மாய்ந்த இளம் பெருவழுதி, ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், செங்குட்டுவன், சித்திரமாடத் துஞ்சிய நன்மாறன், தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், கானப்பேரெயில் தந்த உக்கிரப் பெருவழுதி, பாண்டியன் கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி, இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறன், கூடகாரத்துஞ்சிய மாறன் வழுதி, வெள்ளியம்பத்துஞ்சிய பெருவழுதி, நம்பிநெடுஞ்செழியன் முதலியோர் சங்ககாலப் பாண்டிய மன்னர்கள் ஆவர்.

மேலும், சாசன மஞ்சரியில், சுந்தரபாண்டியன், கோதண்டராமன், மணியன்பெருங்கன், திருமால் மாவலிவாணன், சண்டேசுவரர், மகதைப்பெருமாள், ஆட்கொண்டான், கோப்பெருஞ்சிங்கன், விடுகாதழகிய பெருமாள், அதிவீரராமன், பராந்தக வீரநாராயணன். போன்றோர் காணப்படுகின்றனர். **ஆனால் சங்க காலத்தில் வள்ளுவன் என்ற மன்னன் பெயர் வரலாற்றில் காணப்படவில்லை.**

**குமரியாற்றுக்கும் தென்பாலி நாட்டுக்கும் இடையில் எல்லையாக மேருமலை இருந்தது.**

**மேருமலைத் தொடரிலிருந்து பஃறுளியாறு உற்பத்தியாகி கிழக்கு நோக்கிப் பாய்ந்தது.**

**அடியார்க்கு நல்லார் "அக்காலத்து அவர் நாட்டுத் தென்பாலி முகத்திலிருந்து வடவெல்லையாக பஃறுளி என்னும் ஆற்றுக்கும் குமரி ஆற்றிடையே" தென்மதுரை உளது எனக் கூறியுள்ளார். பஃறுளி ஆறு இயற்கை ஆறு அன்று வெட்டப்பட்ட ஆறு**

"நிலந்தந்த பேருதவிப்
பொலந்தார் மார்பின் அடிகள், நெடியோன் உம்பர்"

என்ற மதுரைக் காஞ்சி அடிகள், நெடியோன் என்ற முதலாம் நிலம் தருதிருவின் பாண்டியன் மேருமலைத் தொடரினின்று வெட்டிப் பெருவள நாடாக்கினான் என அறிய முடிகிறது.

இவன் பஃறுளி ஆற்றங்கரையில் ஓர் நகரை உருவாக்கினான். அது ஏழ் மதுரை நாட்டின் தெற்கே இருந்ததால் தென்மதுரை எனப் பெயரிட்டனர். அங்கிருந்து தென்பாலி நாடு, பெருவள நாடு, குமரிநாடு, பாண்டிய நாடு ஆகிய நாடுகளை அரசாண்டு வந்தான்.

முதலாம் **நிலத்தரு திருவின் பாண்டியன்** என்ற 'ஆழி வடிவம்-பலநின்ற பாண்டியன்' வழித் தோன்றிய பல்யாக சாலை முதுகுடுமிப்பெருவழுதியை நெட்டிமையார் பாடியுள்ளார். இதில் நெடியோன் பற்றிய குறிப்புகள்.

"செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீந்த
முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலிலும பலவே" - புறம் 9

பெருவள நாட்டில் மேருமலை இருந்தது. இதில் 49 கொடு முடிகள் இருந்தன. ஒரு கொடு முடிக்கு மணிமலை என்று பெயர். இம் மணிமலைக்கும் அருகில் இருந்ததே பேராறு என்ற ஆறு. குமரி ஆற்றுக்கும் பஃறுளி ஆற்றுக்கும் இடையில் ஓடியது. இது ஓடிய பகுதி பெருவளநாடு.

"பேராற்றருகில் பிறங்கு மணிமலையில்
சீராற்றும் செங்கோ திறற் செங்கோ"

என்ற **தமிழ் விடுதூது** அடிகளால் அறியலாம்.

இப்பெருவள நாட்டில் ஒரு தமிழ்ச் சங்கத்தைச் செங்கோ எனும் பாண்டிய மன்னன் நிறுவித் தமிழ் வளர்த்தான்.

"பேராற்றருகில் பிறங்குமணி மலையில்
சீராற்றும் செங்கோ திறற் செங்கோ - நேராற்றும்
பேர் அவையிலே நூற் பெருமக்கள் சூழ்ந் தேத்தப்
பாரரசு செய்த தமிழ்ப்பைந்தேவி" (தமிழ்விடு தூது)

இவ்அடிகள் உறுதி செய்கின்றன.

சூரபன்மனைக் குமரன் தன் வேற்படையில் வெற்றி கொண்ட போது ஒரு கடல்கோளால் பஃறுளியாறும், பன்மலை அடுக்கமும், பெருவள நாடும், தென்பாலி நாடும் பெருவள நாட்டின் மேருமலைத் தொடரும் அதன் கொடுமுடிகளும் அழிந்தன என.

"வடிவேல் எறிந்த வான் பகை பொறாது
**பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்**
**குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள**" 18-20 காடு காண்காதை சிலம்பு பகிர்கிறது.

"மேரு கிரிதலை பண்டுதூளஎழ வேலை உருவிய வயலூரா" எனும் திருப்புகழ் அடியாலும், கடல்கோள் ஏற்பட்டது என உறுதி செய்யலாம். அடியார்க்கு நல்லார், நெடியோன் குன்றமும், தொடியோள் பௌவமும் என்ற அடிக்கு அக்காலத்து அவர் நாட்டுத் தென்பாலிமுகத்திற்கு வடவெல்லையாகிய பஃறுளி என்னும் ஆற்றிற்கும், குமரி என்னும் ஆற்றிற்கும் இடையே எழுநூற்றுக்காவதவாறும் இவற்றின் நீர் மலிவரனென்ன மலிந்த ஏழ்தெங்க நாடும், ஏழ்மதுரை நாடும், ஏழ் முன்பாலை நாடும், ஏழ் குறும்பனை நாடும என்னும் இந்த நாற்பத்தொன்பது நாடுகளும், குமரி, கொல்லம முதலிய பன்மலை நாடுகளும, காடும் நதியும், பதியும், தடநீாகளும குமரி வடபெருங் கோட்டின் காறும் கடல் கொண்டொழிதலால குமரியாகிய பவ்வம் என்றார் என்று உணர்க.

இஃது என்னை பெறுமாறு எனின், வடிவேல் எறிந்த (சிலம்பு 11-18-20) என்பதாலும், கணக்காயனார் மகனார் நக்கீரனார் உரைத்த **இறையனார் அகப்பொருள்** உரையாலும், உரையாசிரியராகிய இளம்பூரணர் அடிகள் முன்னுரையாலும் பிறவற்றாலும் பெறுதும என்று கூறியதை நோக்க இவை கடைச் சங்கத்துக்கு முற்பட்டவை.

கி.மு 1405 ல் ஏற்பட்ட கடல் கோளால் குமரியாறும் தென்மதுரையும் அழியவில்லை. இது ஏழ் மதுரை நாட்டின் ஓர் ஊரே. இங்குக் கி.மு.1404 முதல் கி.மு.9564 வரை 4440

ஆண்டுகள் தலைச் சங்கம் காய்சின வழுதி என்ற இரண்டாம் நிலந்தருதிருவின் பாண்டியன் முதல் முதலாம் கடுங்கோன் பாண்டியன் வரை 89 பாண்டியர்களால காக்கப்பட்டது. இதில் 4449 புலவர்கள் இருந்தனர். இச்சங்கத்தை ஆண்டவன் "ஆழிவடிவம் பல நின்ற பாண்டிய வம்சா" வழியினர். காய்சின வழுதி என்ற இயற்பெயரோடு இரண்டாம் நிலத்தரு திருவின் பாண்டியன் எனும் பட்டம் பெற்றவன்.

குமரியாற்றங்கரைத் தென் மதுரை ஏழ்மதுரை நாட்டின் ஓர் ஊராகும். அவ்வூரைத் தவிர்த்து ஏனைய ஊர்கள் ஆதியூழியில் அழிந்தன. இன்றைய குமரியின் தென் பகுதியில், குமரியாறு இருந்தது. அதன் கரையில் தென் மதுரை நகர் 14000 முதல் 9564 வரை 4440 ஆண்டுகள் முதற் சங்கம் இருந்தது. காயசின வழுதி என்ற இரண்டாம் நிலத்தரு திருவின் பாண்டியன் முதல் முதல் கடுங்கோன் பாண்டியன் ஆட்சி வரை 89 பாண்டிய மன்னர்கள் ஆட்சியில் 4449 சங்கப் புலவர்கள் தமிழ்ச் சங்கத்துத் தமிழாய்ந்தனர்.

**இங்கு, தொல்காப்பியரும், சங்கத் தலைமைப் புலவராக அதங்கோட்டாசானும் இருந்தனர்.** அப்போது பாண்டி நாட்டை ஆண்ட அரசன் **மூன்றாம் நிலந்தருதிருவின் பாண்டியனாவான்.** இங்குத்தான் தொல்காப்பியம் அரங்கேறியது. **தலைச் சங்கம் கி.மு.9564-ல் நிறைவுற்றது.**

குமரியாறும் குமரிக்கோடும் கி.மு.9564ல் கடல் கோளினால் அழிவுற்றன. இது இரண்டாயிரம் ஊழிக்காலம்.

குமரி நாடு அழிவுற்றபோது, ஏழ்தெங்கநாட்டின் ஒரு பகுதியான **நக்கவாரத்தீவு** எஞ்சியது.

**ஏழ்குறும்பனை நாட்டின்** ஒரு பகுதி, திருநெல்வேலி, இராமநாதபுரம், தூத்துக்குடி மாவட்டங்களில் காணப்படுகிறது.

கடைச்சங்க காலத்தில் இருந்த கடைசி மன்னன் பாண்டியன் **முதலாம் கடுங்கோன்**. இவனும் கடல்கோளால் அழிவுற்றான்.

கடல்கோளால் அப்போது அப்பகுதியிலிருந்த தமிழினமும் தமிழிலக்கியங்களும் அழிந்தன.

இக்காலகட்டத்தில் கி.மு.7500இல் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதி தமிழகத்தின் பகுதிகளைக் கைப்பற்றி பாண்டியர் ஆட்சியை நிறுவினான். இக்காலகட்டத்தில் கி.மு.9000 - 1000 இல் ஆரியர் குடியேற்றம் ஏற்பட்டது. இவர்கள் சேர, சோழ, பாண்டியமன்னர்களுடன் கலந்து தமது ஆதிக்கத்தை நிலை நிறுத்தினர்.

ஆரியவர்க்கத்தினருக்கு முவேந்தரும் அடிமையாயினர். **முதுகுடுமிப்பெருவழுதி பின், கி.மு.750இல் தென்னகத்தைக் கைப்பற்றிப் பாண்டியர் ஆட்சியை நிறுவினான். கொற்கையைத் தலைநகராகக் கொண்டான்.** ஆரியர்களுக்குப் பல நிலதானம் செய்ததோடு பல யாகங்களையும் நடத்தியதால் அவன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்று அழைக்கப்பட்டான்.

இவன் காலத்தே ஆரியப் புலவரான அகத்தியரைப் புரோகிதராக அமர்த்தினான். **கி.மு.680இல் வெண்டேர்ச் செழியன் ஆட்சிக்கு வந்தான்.** இவன் (தாமிரபரணி) பொருநை ஆற்றின் **கரையில் கபாடபுரத்தில் கி.மு. 680-ல் இடைச்சங்கம் அமைத்தான். இது** 3105 முதல் 3700 **ஆண்டுகள் இருந்தன. வெண்டேர்ச் செழியன் முதல் முடத்திருமாறன் ஈறாக 79 பாண்டிய மன்னர்கள்** ஆட்சிபுரிந்தனர். அப்போது இடைச் சங்கத்தில் 3700 புலவர்கள் அங்கம் வகித்தனர். **இக்காலத்து, எருமைநாடு மட்டுமே தமிழர் ஆட்சியில் இருந்தது.** கங்கை ஆற்றுக்கும் விந்திய மலைக்கும் இடைப்பட்ட நாடு **தாடகை நாடு,** விந்திய மலைக்குத் தெற்குப் பகுதி **தண்டக நாடு.** இந்நாடுகளும் சேர, சோழ, பாண்டிய நாடுகளும் புலத்தியர் வசமிருந்தன.

இடைச்சங்க காலத்திற்குப் பின் பூழி, மணலூரில் சில பகுதிகளைப் பாண்டியர் ஆண்டனர்.

தமிழ்நாட்டின் பெருவள நாடும், தென் பாலி நாடும், குமரி நாட்டின் சில பகுதிகளும் அழிவுற்றதால் சேர, சோழ, பாண்டியர்

வடநாடு சென்று கங்கை நாட்டையும், இமய நாட்டையும் கைப்பற்றி ஆண்டு வந்தனர். **வேளிர் வரலாறு மு.இராகவையங்கார்.**

கபாடபுரத்தை ஆண்ட இறுதி மன்னன் முதலாம் **முடத்திருமாறன். இவன் கி.மு. 1915-ல் தமிழ்ச் சங்கத்தை நிலை நாட்டினான்.** கி.மு. 1715-200 ஆண்டுகள் நடைபெற்றது. அக்காலகட்டங்களில் ஆறு பாண்டிய மன்னர்கள் ஆட்சி செய்துள்ளனர் என அறிய முடிகிறது. சிலம்பில் குறிப்பிடப்படும் பொற்கைப் பாண்டியன், பாண்டியன் குறுவழுதி, குறுஞ்செழியன் (அகம் பாடியவன்) இறுதியாக மூன்றாம் முடத்திருமாறனும் ஆண்டதாகத் தெரிகிறது.

கடைச்சங்கம் நிறுவினார் கடல் கொள்ளப்பட்டுப் போந்திருந்த **முடத்திருமாறன் முதலாக உக்கிரப் பெருவழுதி ஈறாக நாற்பத்தொன்மதின்மர்** என்ப எனப்படுவதால் கி.மு.1715-இல் பாண்டிய நாட்டில் கடல் கோள் ஒன்று ஏற்பட்டதாகக் கருதலாம். பின் **மூன்றாம் முடத்திருமாறன் திருப்பரங்குன்றத்தில் ஒரு தமிழ்ச் சங்கம் நிறுவினான்.**

களவியல் உரையாசிரியர் இதனை உத்திரமதுரை என்கிறார். **இதில் 44 பாண்டிய மன்னர்கள் இருந்தனர்** என்பர்.

இவர்களில் 16 மன்னர்களின் பெயர்கள் கிட்டியுள்ளன,

1. ஆரியப்படை கடந்த பாண்டியன் நெடுஞ்செழியன்
2. இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன்
3. உக்கிரப் பெருவழுதி
4. ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன்
5. கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதி
6. கடாரத்துத் துஞ்சிய நன்மாறன் என்ற வெற்றிவேற் செழியன்
7. சித்திர கூடத் துஞ்சிய நன்மாறன்
8. தலையாலங்கானத்துச் செருவென்றபாண்டியன் நெடுஞ்செழியன்
9. நம்பி நெடுஞ்செழியன்

10. நல்வழுதிப் பாண்டியன்

11. பன்னாடு தந்த மாறன் வழுதி

12. பாண்டியன் அறிவுடைநம்பி

13. பாண்டியன் கீரன் சாத்தன்

14. பாண்டியன் மதிவாணன்

15. முடத்திரு மாறன்

16. வெள்ளியம்பலத் துஞ்சிய பெருவழுதி

ஏனையோர் பெயர்கள் கிடைத்தில.

கடைச்சங்க காலத்தில் கடைசி பாண்டியமன்னன் உக்கிரப் பெருவழுதி

## தெய்வப்புலவர் திருவள்ளுவர்

தெய்வப்புலவர் திருவள்ளுவர் கி.மு. முதல் நூற்றாண்டு முதல் கி.பி.3 வரை வாழ்ந்தவர் என்பது அறிஞர் பெருமக்களால் ஏற்புடைக் கருத்து. கி.மு.50 முதல் கி.பி.30 வரை. **உக்கிரப் பெரு வழுதி** பாண்டிய நாட்டை ஆண்ட பாண்டிய மன்னர். இவன் சேர நாட்டின் தென் கோடியிலுள்ள நாஞ்சில் நாட்டைக் கைப்பற்றினான். நாஞ்சில் நாடு இன்றையத் (தோவாளை, அகஸ்தீஸ்வரம்) பகுதிகளாகும். இது சேர நாட்டின் நெற்களஞ்சியம். பல்வளங்களும் நிறைந்த பகுதி ஆதலால் பாண்டியன் சோழன் பின் சேரன் ஆகியோர் அடிக்கடி படையெடுத்துத் தம் ஆளுகைக்குட்படுத்திக் கொண்டனர். உக்கிரப்பெருவழுதியின் காலத்தில்தான் திருக்குறள் அரங்கேற்றப்பட்டது.

"தப்பா முதற்பாவால் தாமாண்ட பாடலினால்
முப்பாலில் நாற்பால் மொழிந்தவர் - எப்பாலும்
வை வைத்து கூர்வேல் வழுதிமன மகிழத்
தெய்வத் திருவள்ளுவர்" எனும் கீரந்தையார் பாடலால் அறியலாம்.

இரண்டாம் உக்கிரப் பெருவழுதிக்குப்பின் அவனது மகன் வரகுண பாண்டியன் கி.பி. 235 முதல் 255 வரை அரசாண்டான். அவன்பின் அரிமர்த்தன பாண்டியன் கி.பி. 255 முதல் கி.பி.320

வரை அரசாண்டான். அவன் பின் அவன் மகன் வரகுண பாண்டியன் இரண்டாமவன் கி.பி.330 முதல் கி.பி.340 வரை ஆட்சி செய்தான்.

இரண்டாம் வரகுண பாண்டியன் கி.பி.330 முதல் கி.பி.340 வரை மதுரையைத் தலைநகராகக் கொண்டு ஆண்டான். கி.பி.575ல் பாண்டியன் கடுங்கோன் கொற்கையைத் தலைநகராகக் கொண்டு பாண்டிய அரசைக் களப்பிரரிடமிருந்து கைப்பற்றி ஆண்டான். இவ்வாறு **வேள்விக்குடிச் செப்பேடு** குறிப்பிடுகிறது.

திருவிளையாடல் புராணத்தில், குலசேகர பாண்டியன், மலையத்துவச பாண்டியன், உக்கிரவரும பாண்டியன், வீர பாண்டியன், அபிடேக பாண்டியன், விக்கிரம பாண்டியன், இராசசேகர பாண்டியன் அனந்த குண பாண்டியன், குல பூடன பாண்டியன், இராஜேந்திர பாண்டியன், இராஜேச பாண்டியன், இராஜ கெம்பீர பாண்டியன், வங்கிய தீபபாண்டியன், புரந்தர சித்து பாண்டியன், வங்கிய பதாக பாண்டியன் கந்ததேச பாத சேகர பாண்டியன், வரகுண பாண்டியன். இராஜ இராஜ பாண்டியன், சுகுணபாண்டியன், சித்திரவிரத பாண்டியன், சித்திர பூடண பாண்டியன், சித்திரவரும்பாண்டியன், சித்திர சேன பாண்டியன், சித்திர துவபாண்டியன், சித்திரம பாண்டியன், இராஜ மார்த்தாண்ட பாண்டியன், இராஜசூடாமணி பாண்டியன், இராஜ சார்த்தூல பாண்டியன், துவிசராஜ குலலோத்தம் பாண்டியன், அயோதனக் பிரவீண பாண்டியன், இராஜ குஞ்சர பாண்டியன், இராஜ பயங்கரப்பாண்டியன், உக்கிரசேன பாண்டியன், மகாசேன பாண்டியன், சத்துருங்சய பாண்டியன், வீமத் தேர்மன்ன பாண்டியன், வீமபராக்கிரம பாண்டியன், பிரதமாப மார்த்தாண்ட பாண்டியன், விக்கிரமகஞ்சுகபாண்டியன், சமரகோலாகல பாண்டியன், அதுல விக்கிரம பாண்டியன், அதுல கீர்த்தி பாண்டியன், கீர்த்தி பூடன பாண்டியன், வங்கிய சேர பாண்டியன், வங்கிய சூடாமணிச் சண்பக பாண்டியன், பிரதாப குரசேன பாண்டியன்,

வங்கிய துவச பாண்டியன், இரிபுமருத்தன பாண்டியன், சோழ வங்கி காந்தக பாண்டியன், வங்கியச் சிரோமணி பாண்டியன், பாண்டீசுர பாண்டியன், குலத்துவச பாண்டியன், வங்கிய விபூடன பாண்டியன், இராஜ சூடாமணி பாண்டியன், பூப சூடாமணி பாண்டியன், குசேல பாண்டியன், அரிமர்த்தன பாண்டியன், ஜகனாத பாண்டியன், குங்கும பாண்டியன், சத்துருசாசன பாண்டியன், கூன் பாண்டியன் என்னும் சுந்தர பாண்டியன் என்பவர்கள் ஆண்டதாக அறிய முடிகிறது.

இவர்களுக்குப் பின் அரசாண்ட 41 மன்னர்களுடைய பெயர்கள் நெல்சன் துரையவர்கள் எழுதிய மதுரை ஜில்லா வரலாற்றுப் புத்தகத்தில் கூறப்பட்டிருக்கிறது.

சோமசுந்தர பாண்டியன், கர்பூர பாண்டியன், குமார சேகர பாண்டியன், குமரார சுந்தர பாண்டியன், சுந்தர ராஜ பாண்டியன், சண்முகராஜ பாண்டியன், மேரு சுந்தர பாண்டியன், இந்திர வரும பாண்டியன், சந்திர குல தீபபாண்டியன், மீன கேதன பாண்டியன், மீனத்துவச பாண்டியன், மகரத்துவச பாண்டியன், மார்த்தாண்ட பாண்டியன், குவலயானந்த பாண்டியன், குண்டல பாண்டியன், சத்துருபிக்கர பாண்டியன், சத்துரு சங்கார பாண்டியன், வீரவரும பாண்டியன், வீரவாகு பாண்டியன், மகுட வர்த்தன பாண்டியன், வஜ்ஜித சிங்கப் பாண்டியன், வருண குலோத்துங்க பாண்டியன், அதிவீரராம பாண்டியன், குலவர்த்தன பாண்டியன், சோம சேகர பாண்டியன், சோம சுந்தர பாண்டியன், இராஜராஜ பாண்டியன், இராஜ குஞ்சர பாண்டியன், இராஜசேகர பாண்டியன், இராஜ வரும பாண்டியன், இராம வரும பாண்டியன், வரத ராஜ பாண்டியன், குமாரசிங்க பாண்டியன், வீரசேனை பாண்டியன், வீகுண பாண்டியன், குமார சந்திர பாண்டியன், வரதுங்க பாண்டியன், சந்திர சேகர பாண்டியன், குமார சந்திர பாண்டியன், வரதுங்க பாண்டியன், சந்திர சேகர பாண்டியன், சோம சுந்தர பாண்டியன், பராகிரம பாண்டியன் என்பவர்கள் ஆண்டதாக

**சென்னை அரசாட்சிப் புத்தகம் பக்.123-ல் கூறப்பட்டப்படி** கி.பி.1378-க்கு பின் பாண்டியர் தலைமுறைகளாக ஆட்சி செய்தது என்பதை உறுதி செய்கிறது. கி.பி.1378 முதல் கி.பி.1559 வரை மதுரையில் ஆட்சி செய்தவர்கள் சோம சேகர பாண்டியன், சோம சுந்தர பாண்டியன், இராஜ ராஜ பாண்டியன், இராஜ வரும பாண்டியன், வரதராஜ பாண்டியன், குமார சிங்கபாண்டியன் என்பவர்கள் ஆவர்

கி.பி. 1559 முதல் கி.பி.1723 வரை தென் பாண்டி நாட்டில் ஆட்சி செய்தவர்கள் வீமசேன பாண்டியன், பிரதாப ராஜ பாண்டியன், வரகுண பாண்டியன், குமார சந்திர பாண்டியன், வரதுங்க பாண்டியன், குலோத்துங்க பாண்டியன், சந்திர பாண்டியன், சந்திர சேகர பாண்டியன் என்பவர்கள்.

மேலும் கி.பி.625 வரை பாண்டியன் கருங்கோ மகன் மாறவர்கள் அவனி சூளாமணி பாண்டியன். அவன் மகன் செழியன் சேந்தன், ஆண்டான் என **வேள்விக்குடி செப்பேடு** கூறுகிறது. கி.பி.640-670 வரை மாறவர்மன் அரிகேசரியும், கி.பி.670-710 வரை பாண்டியன் கோச்சடையன் சணதீரனும், கி.பி.710-765 வரை அரிகேசரி பராங்குச மாறவர்மனும், கி.பி.765-790 வரை நெடுங்சடையன் பராந்தகனும், கி.பி.790-792 வரை இரண்டாம் இராசசிம்ம பாண்டியனும், கி.பி.852 முதல் வரகுணமகராசனும், கி.பி.835 முதல் 862 வரை சீமாறன் சீவல்லபனும், கி.பி.852 முதல் 880 வரை மூன்றாம் இராச சிம்ம பாண்டியனும், கி.பி.946-966 வரை வீரபாண்டியனும், கி.பி.960 முதல் 1020 வரை புயங்கனும் பாண்டி நாட்டை ஆண்டனர்.

ஆரியப்படைகடந்த நெடுஞ்செழியன் கோவலனை ஆராயாமல் கொன்றதற்காக உயிர் துறந்தான் எனச் சிலம்பு பகர்கிறது. இதனால் மதுரை மாநகரம் நீண்ட நாள் ஆட்சி இன்றியே இருந்தது. பின் நெடுஞ்செழியன் தம்பி வேற்செழியன் என்ற பாண்டியன் முடிசூடி நன்மாறன் எனும் பட்டம் பெற்று ஆட்சி

புரிந்தான். அவன் கி.பி. 17-ல் இறக்க அவன் மகன் தலையாலங் கானத்து இவனது மகன் உக்கிரப் பெருவழுதி இரண்டாமவன் ஆட்சியில் தான் கானப் பேர் எயில் கடந்த **உக்கிரப் பெருவழுதி. திருக்குறள் அரங்கேறிய காலத்தவன்**. இவனை, இவன் நாஞ்சில் நாட்டைக் கைப்பற்றி (தோவாளை, அகஸ்தீஸ்வரம்) ஆண்டபோது சிற்றரசர்களாக வேந்தன், அரிகேசரி மாறவர்மன் இரணதீசன், கோச்சடையன், மாறன் சடையன், பூதபபாண்டியன் ஆகிய குறுநில மன்னர்கள் தென்பாண்டி நாட்டை ஆண்டு வந்தனர். இவர்கள் குறுநில மன்னர்கள்.

இவர்களின் பின் ஆண்ட பாண்டிய மன்னர்களின் பெயர்கள் திருவள்ளுவருக்குச் சான்றாகத் தேவையில்லை. எனவே அவர்களை விடுக்கின்றேன்.

***மேற்கூறிய பாண்டிய மன்னர்களுள் வள்ளுவன் என்ற மன்னன்* ஆட்சி புரிந்தான் என்ற வரலாற்றுச் சான்றுகள் இல்லை.**

## சோழநாடு

சோழநாடு வடவெள்ளாற்றுக்கும் தென் வெள்ளாற்றுக்கும் இடையேயும் கிழக்கில் கடலுக்கும் மேற்கே கோட்டைக்கரைக்கும் இடைப்பட்ட நிலப்பரப்பு. (இன்றைய *திருச்சிராப்பள்ளி*, தஞ்சை மாவட்டம் புதுக்கோட்டையின் ஒருபகுதி.) காவிரி, கொள்ளிடம் உட்பட்ட அதன் கிளை நதிகள் வளப்படுத்தின. தஞ்சை, திருச்சிராப்பள்ளி, உறையூர், கும்பகோணம் முதலியன முக்கிய பட்டணங்களாகும். கங்கை கொண்ட சோழபுரம் 11-12 நூற்றாண்டில் முக்கிய தலைநகரம்.

## சோழமன்னர்கள் பரம்பரை

சங்க காலத்து வரலாற்றடிப்படையில் முதலில் காணப்படும் மன்னன் சிபிச்சக்கரவர்த்தி. இதுவும் கி.மு. 30,000.

*சோழராட்சி*, மிதுலாபுரி, இலங்கை, மலேசியா, இந்தோனேஷியா, தொண்டை நாடு, மைசூர் போன்ற பகுதிகளில்

சோழர் ஆட்சி செய்துள்ளனர். தசரதன், இராமன், அனகன், மனுச்சக்கரவர்த்தி இரணியவர்மன, முக்குவாகு, குந்தன், நிமி, தண்டன், மாந்தாதா, முசுகுந்தன், பூருகூர்ச்சன் போன்றவர்கள் சோழநாட்டை ஆண்டவர்கள் எனப் புராணங்கள் கூறுகின்றன.

சோழன் காவிரிப்பூம் பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டு கி.மு.30,000 ஆண்டுகளுக்கு முன்பு ஆண்டான் என வரலாற்றாய்வாளர்கள் முடிவு செய்துள்ளனர்.

வடக்கு சோழமன்னர்கள் அயோத்தி, மிதிலை, எருமைநாடு, தும்பர்நாடு, துண்டீரநாடு மழவர்நாடுகளோடு பல நாடுகளையும் ஆண்டனர்.

மேலும் நெல்லூர், சித்தூர், திருப்பதி, வடகன்னடம், கஞ்சம், மைசூர், கடாரம், சாவகம் போன்ற இடங்களையும் ஆண்டு வந்தனர். சோழ வம்சச் சரித்திரம் எனும் நூலிலும், ஹூப் வெங்கையா, கிருஷ்ண சாஸ்திரி போன்றோரின் கல்வெட்டுகள் வழியும், சங்ககால இலக்கியங்கள் வழியும், கீழைச் சாளுக்கிய மன்னர்களின் செப்பேடுகள் வழியும், தஞ்சை மற்றும் பிற இடங்களில் கிடைத்துள்ள கல்வெட்டுகளின்றும் முதலாம் இராஜேந்திந்திரன் கரந்தைச் செப்பேடு வீரஇராஜேந்திர சாரல் செப்பேடுகள் வழியும் அறியக் கிடக்கின்றன. மேலும் பெரிப்ளூஸ் தாலமி குறிப்புகளும் தென்னிந்தியக் கல்வெட்டுகளும் உதவுகின்றன.

சிபிசக்கரவர்த்தி கி.மு. 3-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவன். இவன் சோழவேந்தர்களுக்குச் சக்கரவர்த்தி. இவனைக் குறித்த செய்திகள். புறம், சிலம்பு, பரணி, விக்கிரம சோழன் உலா, பெரியபுராணம் இவற்றில் காணப்படுகின்றன. காவிரிப் பூம்பட்டினத்தைத் தலைநகரமாகக் கொண்டு ஆண்டவன்.

முசுகுந்தன் கருவூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவன். கி.மு.3-க்கு முற்பட்டவன்.

காகந்தன், காவிரிப்பூம்பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவன். இவனை **விக்கிரம சோழன் உலா** கூறுகிறது.

தூங்கெயில் எறிந்த செம்பியன். இவன் காலம் கி.மு.14000. இவனைக் குறித்து சிலம்பு, மேகலை, சிறுபாணாற்றுப்படை, பழமொழிநானூறு, பரணி பேசுகின்றன. சிலர் இவனது காலம் கி.மு.300 என்கின்றனர். காவிரிப்பூம்பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவன். செருப்பாழி எறிந்த இளஞ்சேட்சென்னி கி.மு. 290-270 இவனும் காவிரிப்பூம் பட்டினத்தினின்று ஆண்ட மன்னன்.

மனுநீதி சோழன் கி.மு.150-120 வரை திருவாரூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவன்.

முதல் கரிகாற் சோழன். சென்னிமரபைச் சார்ந்தவன். இவன் அழுந்தூரைத் தலைநகராகக் கொண்டு அரசாண்ட சோழன் கி.மு.120 முதல் 90 வரை. தடக்கைப் பெருவிறற் கிள்ளி என்ற மரபினர் உறையூரைத் தலைநகராக்கி ஆண்டான் என அறியக் கிடக்கின்றது.

இரண்டாம் கரிகாற் சோழன் கி.மு.60 முதல் கி.மு.40 வரை காவிரிப்பூம்பட்டினத்தினின்று ஆண்டவன். இமயத்தில் புலிச்சின்னம் பொறித்தவன். காவிரியில் கல்லணை கட்டியவனும் இவனே.

**வள்ளுவன் காலத்தில் காவிரிப்பூம்பட்டினத்து இரண்டாம் கரிகாற் சோழன் மகன் நலங்கிள்ளி சோழப் பேரரசை ஆண்டு வந்த காலம். பாண்டிய நாட்டை அப்பொழுது உக்கிரப்பெரு வழுதி ஆண்டு வந்தான். அவன் ஆட்சியில் உட்படு கருமத் தலைவனாக இருந்தவன் வள்ளுவக் குடியில் பிறந்த நாஞ்சில் வள்ளுவன்.**

நலங்கிள்ளி உறையூரைத் தலைநகராகக் கொண்டிருந்தான். இவன் கி.மு.50 முதல் கி.பி.10 வரை ஆட்சி புரிந்தான்.

கி.மு. 165ல் கலிங்க அரசன் காரவேலன் தமிழகத்தின் மீது படையெடுத்தான். அவன் படைக்கு ஆற்றாது கிள்ளிவளவன் மலையனுக்குரிய முள்ளூர் மலையில் ஒளிந்தான். மலையனின்

மகன் திருக்கண்ணன் காரவேலனிடமிருந்து சோழநாட்டை மீட்டுக் கிள்ளிவளவனைச் சோழநாட்டு அரியணை ஏற்றினான். அதனால் அவனைத் தன் படைத்தலைவன் ஆக்கிக்கொண்டான். திருக்கண்ணன் 'மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணன்' எனப்பட்டான். தம்பி இளஞ்சேட் சென்னியோ வலிமையோடு திகழ்ந்தான். சேரமான் பாமூளூரை வென்றான்.

இவன் மகனும் இளஞ்சேட் சென்னி என்றே அழைக்கப்பட்டான். இது நன்னன் சேய் நன்னன் என்பது போல அமைந்த பெயர். இவன் 'வம்ப வடுகர்' என்றும் 'வட வடுகர்' என்றும் அழைக்கப்பட்ட கலிங்கரிடமிருந்து மீட்கப்படாத சோழநாட்டுப் பகுதியாகிய பாழி (இன்றைய செங்கற்பட்டு வட்டத்தில் உள்ள திருவாஞ்சேரி) என்னும் வலிமை வாய்ந்த கோட்டையை மீட்டான். அதனால், 'சோழன் செருப்பாழி எறிந்த இளஞ்சேட்சென்னி' எனப்பட்டான். இவனது மக்களே நலங்கிள்ளியும் மாவளத்தானும்.

## நலங்கிள்ளி

இவன் ஆற்றல் மிக்க அரசன். இவனுக்குத் துணையாகத் தம்பி மாவளத்தான் செயற்பட்டான். இவன் காலத்தில்தான் உறையூரிலிருந்து நெடுங்கிள்ளி என்பான் ஆண்டான். நெடுங்கிள்ளியொடு நலங்கிள்ளி பொருது உறையூரைக் கைப்பற்றித் தன் தலைநகரை உறையூருக்கு மாற்றிக்கொண்டான்.

## நலங்கிள்ளி சேட் சென்னி

இவன் நலங்கிள்ளியின் மகன். இவன் சில ஆண்டுகளே ஆண்டவன். இவனைப் பாடியவர் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் மட்டுமே. ஒரு பாட்டே உள்ளது.

## திருமாவளவன்

நலங்கிள்ளி சேட்சென்னி சில்லாண்டுகளே ஆண்டு மறைந்ததனால், அரசப் பொறுப்பு சிறறப்பனாகிய மாவளத்தானிடம் வந்தது. அதனால்தான் பட்டினப்பாலை

"உருகெழு தாயம் ஊழின் எய்தி"

என்கிறது. தன் பெயரையும் திருமாவளவன் என மாற்றிக்கொண்டு சிறக்க ஆண்டான். சேரர்களையும் பாண்டியனையும் குறுநில மன்னர்களையும் தன்னடிப்படுத்தினான். தலைநகரை உறையூரிலிருந்து பூம்புகாருக்கு மாற்றிக் கோயிலொடு குடிகளை அமர்த்தினான்.

வடநாட்டுப் படையெடுப்பை மேற்கொண்டு மகதம், அவந்தி, வச்சிரம் ஆகிய நாடுகளை வென்றான். இலங்கைமீது படையெடுத்து 12000 சிங்களவரைக் கொணர்ந்து காவிரிக்குக் கரையமைத்தான். அக்கரையைக் கி.மு. 11-ஆம் ஆண்டில் பார்வையிட்டான்.

பட்டினப்பாலைக்கு 16 நூறாயிரம் பொன் பரிசளித்தான்.

இவன் வென்ற குட்டுவன் கோதை வெளியிட்ட காசுகள் இன்று நமக்குக் கிடைக்கின்றன. மற்றொரு சேரனாகிய திருக்குட்டுவனைத் தன் படைத்தலைவனாக்கிக் கொண்டான். அதனால், அவன் 'சோழிய ஏனாதி திருக்குட்டுவன்' எனப்பட்டான்.

இவன் காலத்துப் பாண்டியன் 'வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி'

இவன் காலத்துத் தொண்டைநாட்டை ஆண்டவன் தொண்டைமான் இளந்திரையன்.

## செங்கணான்

இவன் திருமாவளவனுக்குப் பின்வந்தவன். தன் தந்தை போலவே சிவனிடத்து ஈடுபாடு மிகக்கொண்டு கோயில் தொண்டு செய்து வந்தான், காவிரிக் கரையோரமாக எண்டோள் ஈசனாகிய சிவனுக்கு எழுபது கோயில்கள் கட்டினான் என ஆழ்வார் ஒருவர் கூறுகிறார்.

இவன் காலத்தில் வாழ்ந்த சேரன் கணைக்கால் இரும்பொறை சோழநாட்டின் மீது படையெடுத்தான். சேரனின் படைவலிமையைக் கூறவந்த பிளினி.

"சேர்மா என்னும் ஊரின் அரசன் முன்னர்க் கூறிய ஊரின் அரசனைப் போல அவ்வளவு வீரம் வாய்ந்தவன் அல்லன். வலிமையில் அவனுக்குச் சற்றுக் குறைந்தவனாகவே காணப்படுகிறான். சேர்மா ஊரின் அரசனிடம் 60 யானைப்படைகள் மட்டும் உள்ளன. பழைய பெருமைகளை மட்டும் தெரிவிக்கும் சில காலாட்படைகளும் உள்ளன"

என்கின்றான். அதே நேரத்தில் செங்கணானின் படையைக் கூறும் பிளினி,

"இந்த நாட்டில் மற்றொரு நகரமும் இருக்கிறது. அதன் பெயர் கதுமுலா என்பதாகும். அந் நகரம் கடற்கரையில் உள்ள பட்டினமாக விளங்குவதோடு, பல நாட்டு மக்கள் வணிகம் செய்யும் இடமாகவும் விளங்குகிறது. மற்றும், அது ஐந்து நதிகள் ஒன்று கூடிக் கடலில் விழும் இடத்தில் உள்ளது. அதன் அரசனிடம் வலிமை வாய்ந்த 1600 யானைப் படைகள் உள்ளன. 150 ஆயிரம் காலாட் படைகளும், 5000 குதிரைகளும் உள்ளன".

என்கிறான். பிளினியின் காலம் கி.பி. 23 - 79. கதுமுலா என்றது கழுமலத்தை.

இத்தகைய வலிமை வாய்ந்த செங்கணானோடு சேரன் கணைக்கால் இரும்பொறை பொருத இடம் கழுமலம். போரில் கணைக்கால் இரும்பொறை கைது செய்யப்பட்டுக் குடவாயிற் கோட்டத்தில் அடைக்கப்பட்டான்.

சிறையில் நீர்க்கேட்டு, அவமானப்பட்டு, நீரை உண்ணாமல் உயிரை விட்டான் இரும்பொறை. 'களவழி நாற்பது' பாடி வந்த பொய்கையார் அவனது உடலையே மீட்டுச் சென்றார் எனலாம்.

## நல்லுருத்திரன்

செங்கணான் தன் மகனுக்குச் சிவன் பெயராகிய நல்லுருத்திரன் என்ற பெயரை இட்டான். இவன் காலம் அமைதியாகவே கழிந்தது எனலாம்.

இவன் *முல்லைக்கலியைப்* பாடியவன். அதில் சிவனைப் பற்றிய குறிப்புகள் மிகுதியாகக் காணப்படுவதால் தன் தந்தையைப் போலவே சிவத்தொண்டில் ஈடுபட்டு விளங்கினான் எனக் கொள்ளவேண்டியுள்ளது.

இவனுக்கு முன் முல்லைத் திணையைப் பாடியவர்கள் அனைவரும் 'இருத்தல்' என்னும் உரிப் பொருளிலேயே பாடியுள்ளனர். அதாவது, தலைவன் நாடு காவலின் நிமித்தமோ அரசற்கு உற்றுழி உதவும் நிமித்தமோ பிரிந்து சென்றுவிடத் தலைவி ஆற்றியிருப்பதையே பாடியுள்ளார்கள்.

ஆனால், நல்லுருத்திரனே ஏறு அடக்கியவனைத் தலைவி மணப்பதாக (ஆசுரமணம்) முதன் முதலாகப் பாடுகின்றான். இது தமிழ் இலக்கியவுலகில் இவன் செய்த புதுமை.

இவனது மகளே நற்சோணை. அவளே சேரலாதனின் மனைவியாகிக் கண்ணகிக்குக் கற்கோயில் எடுத்த செங்குட்டுவனையும் சொற்கோயில் எடுத்த இளங்கோ வடிகளையும் ஈன்றவள்.

இளங்கோவடிகளும் தம் பாட்டனை அடியொற்றி 'ஆய்ச்சியர் குரவை'யில் ஏறு தழுவுவாரே இடைக்குல மகளிரை மணப்பதைக் காட்டுகின்றார்.

நல்லுருத்திரன் மகன் யார் எனத் தெரியவில்லை.

## மணக்கிள்ளி

சிலப்பதிகாரக் காலத்தில் சோழ நாட்டைப் புகாரிலிருந்து ஆண்டவன் நெடுமுடிக் கிள்ளி எனப்படும் மணக்கிள்ளி. இவன்

மகனே உதயகுரன். விஞ்சையன் வாளுக்கு இரையாகியவன். நெடுமுடிக்கிள்ளியின் காலத்தில்தான் புகாரைக் கடல் கொண்டது.

சோழன் கிள்ளி வளவன் கி.பி.30 முதல் கி.பி 70 வரை, இவன் உறையூரையும், காவிரிப்பூமபட்டினத்தையும் கைப்பற்றி ஆண்டவன். இவனைக் குறித்து, ஆலந்தூர் கிழார், வெள்ளைக்குடி நாகனார், மாறோக்கத்து நப்பசலையார், ஆவூர் மூலங்கிழார், கோவூர்க்கோவூர் கிழார், ஐயூர் முடவனார் ஆகியோர் பாடியுள்ளனர்.

கோப்பெருஞ்சோழன் இவன உறையூரிலிருந்து ஆட்சி செய்தவன். இராயசூயம் வேட்ட பெருநற்கிள்ளி கி.பி.10-55. இவனைக் குறித்து (புறம் 367) கூறுகிறது.

நித்தன் சோழன் உறையூரிலிருந்து ஆண்டவன்

வேல்புல் தடக்கைப் பெருநற்கிள்ளி, உறையூரை ஆண்ட சிற்றரசன். நெடுமுடிக்கிள்ளி. கி.பி. 150-200 வரை இவன் சிலப்பதிகார காலத்தவன். இவன் தம்பி இளங்கிள்ளி காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு வாழ்ந்தவன். இவனுக்குப்பின் சோழநாடு களப்பிரர் ஆளுகைக்கு உட்பட்டது. இவர்களைப் பாண்டியன் வென்றான். மீண்டும் சோழர் ஆட்சி ஏற்பட்டது. விஜயாலய சோழன் கி.பி.க850-907. இவனை ஆதித்த சோழன் என்பர். உறையூரைத் தலைநகராக்கி ஆண்டவன். ஆதித்த சோழன் கி.பி.850-907. இவன் விசயாலய நாட்டிலிருந்து ஆட்சி செய்தவன். முதற் பராந்தக சோழன் கி.பி.907-953. ஆதித்த சோழன் மகன். தஞ்சைப் பேரரசை ஆண்டான். கண்டராதித்தன் கி.பி. 949-957 வரை. இவனை உத்தம சோழன் என்று மதுராந்தகன் என்பர். சோழர் ஆட்சி இந்திய வரலாற்றில் 1900 ஆம் ஆண்டு வரை கிடைக்கப்பெறவில்லை.

கி.பி. 10.11 ஆம் நூற்றாண்டுகளில் கிடைக்கப்பெற்ற செப்பேட்டுப் பட்டயங்களிலும்.வீர ராஜேந்திரனின்கன்னியாகுமரிக் கல்வெட்டுகளிலும்.பரணி, விக்கிரமச் சோழன் உலா நூல்களிலும்

காந்தமின், காகந்தி,புபார், காவிரிபூமபட்டினம் பெயர்களைக் கொண்ட சம்பா எனுமிடத்திலிருந்து ஆட்சி பரிந்தான் என்ற புராணச்செய்தியும் காணப்படுகிறது.

கரிகாற் சோழன் சோழ நாட்டை ஆண்ட செய்தி பட்டினப்பாலை பகர்கிறது. (புறம் 14) பாடல்களில் பாடப் பெறுகின்றன. இவனை நெடுங்கிள்ளி வென்று ஆட்சி செய்தான். இவனைப் புறம் 47 கூறுகிறது.

கோப்பெருஞ்சோழன் உறையூரிலிருந்து ஆண்டு வந்தான்.

சங்க காலத்து இராய சூய யாகம செய்தவன். பெருங்கிள்ளி இவனைக் குறித்து புறம் 367 கூறுகிறது

சங்ககாலச் சோழச்சிற்றரசாகள் இளஞ்சேட்சென்னி, குடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி, வேற்பஃறடக்கைப் பெருநற்கிள்ளி, கோப்பெரு நற்கிள்ளி, தித்தன்,

கோச்செங்கணான், இவனைப் பற்றியும் செய்திகளைத் தருகின்றன.

முதலாம் ஆதித்தன் (கி.பி. 871-907) முதலாம் பராந்தகன் (கி.பி.907-955) இராஜாதித்தியன் (கி.பி.936).

முதலாம் ராஜ ராஜன் கி.பி. (955-985) இவனைப் பற்றி, செங்கல்பட்டு, வடஆர்காடு மாவட்டக் கல்வெட்டுக்கள் சான்றாவணங்கள் கூறுகின்றன.

அரிஞ்சயன் இவனைக் குறித்து இராஜ கேசரிக் கல்வெட்டு கூறுகிறது.

## உத்தமச் சோழன்

இராஜஇராஜப் பெருவேந்தன் (கி.பி.985-1014) இரண்டாம் பராந்தகசுந்தர சோழன் மகன்.

இவர்களுக்குப் பின் ஆண்ட சோழ மன்னர்கள் இக்கட்டுரைக்குத் தேவை இல்லையாதலால் பிற சோழவரசர்களைக் குறித்துக் கூறவில்லை.

**ஆக, சோழர் பரம்பரையிலும் வள்ளுவன் என்ற மன்னன் தமிழகத்தில் எங்கும் ஆட்சி புரியவில்லை என்பது வரலாறு.**

## சேர மன்னர்கள்

பதிற்றுப்பத்து 1800 ஆண்டுகளுக்கு முன் அரசாண்ட சேர மன்னர்களின் வரலாறு கூறுகிறது.

இவர்கள் இரும்பொறை மரபினர், சேரல் மரபினர் என இருபிரிவினர்.

**ஆதி உலாகாரம் நிகண்டு** சேரநாட்டையாண்ட மன்னர் பெயர்களைக் கூறும்

"பூழியன் அதியன் கொங்கன் பொறையன்
வானவன் குட்டுவன் வான வரம்பன்
வில்லவன் குடநாடன் வஞ்சி வேந்தன்
கொல்லிச் சிலம்பன் கோதை கேரளன்
போந்தின் கண்ணகிக் கோஆன் பொருனைத் துறைவன்
சேரவன் மலையமான் கோச் சேரன் பெயரே"

கி.மு.3-ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்ட சேர மன்னர்களில் இமயவரம்பன் முதன் முதலாக அறிமுகமாகிறான். இவன் இமயம் வரை சென்று தனது எல்லையை நிலை நாட்டியவன்.

"குமரியோடு வடவிமயத்தொரு மொழி வைத்துல
காண்ட சேரலாதன்" (சிலம்பு - 29)

இவனை இளங்கோவடிகள் சேரலாதன் வானவரம்பன் என்கிறார். இவனது காலம் கி.மு. 9564. 'பரங்கொண்டு நாடு' என்று குறிப்பில் இவனைப்பற்றிய குறிப்புகள் உள.

பெருஞ்சோற்றுஉதியன்சேரலாதன். கி.மு.3105 பாரதப்போரில் உணவளித்தவன்..

"அலங்குளைப் புரவி ஐவரோடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட பொலம்பூந்தும்பை
ஈரைம்பதின்மர் பொருது களத் தொழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்" (புறம்2)

கோட்டம்பலத்துஞ்சிய மாக்கோதை (புறம் 245) (அகம் 168)

சேரமான், பெருஞ்சேரலாதன். கி.மு.2-ஆம் நூற்றாண்டு (கி.மு.80-118) ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் நறவு எனும் கடற்கரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவன்.

இவன் உதியன் குடியைச் சோந்தவன். வஞ்சி இவனது தலைநகர். கடல்பிறகோட்டிய செங்குட்டுவன்.

சேரன் குடக்கோநெடுஞ்சேரலாதன். (கி.மு.95-75) இவன் வஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவன். இவனைப் பற்றி, புறம் 363-ல் காணலாம்.

குடக்கோச் சேரலிரும்பொறை (கி.மு. 78-62) இவன் பொறையன் குடியைச் சேர்ந்தவன். தொண்டி இவன் தலைநகரம்.

சேரமான் கணைக்கால் இரும்பொறை (கி.மு.60-35) தொண்டியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவன். (நற்றிணை - 18ல்) இவனைப் பற்றிய குறிப்புகள் உள.

சேரமான் கோக்கோதை மார்பன் (கி.மு.35-16) இவனைப் பற்றி புறம் 41-ல் காணலாம்.

கருவூரேறிய ஒள்வாள் கோப்பெருஞ்சேரலிரும் பொறை (கி.மு.30-10). இவன் இரண்டாம் கரிகாலன் மருமகன். அத்தி என்ற பெயருடையவன்.

உதியஞ் சேரலாதன் (கி.பி.18-67) வஞ்சியைத் தலை நகராகக் கொண்டு ஆண்டவன். இவன் வேளிர் குலத்தவன். இவன் மக்கள் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், பல்யானை செல்கெழுகுட்டுவன்.

அந்துவஞ் சேரல் இரும்பொறை. (கி.பி. 32-92) செல்வக் கடுங்கோவாழியாதன் தந்தை. கருவூர் இவர் தலைநகரம்.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன். (கி.பி.67-125) உதியனின் மகன், வஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவன். இவன் சேரன் செங்குட்டுவன், இளங்கோவடிகள் இவர்களின் தந்தை.

பல்யானைச் செல்கெழுகுட்டுவன் (கி.பி.70-95) இவன் உதியன் மகன். வஞ்சி இவன் தலைநகரம்.

களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் (கி.பி. 72-97) வஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவன்.

செல்வக் கடுங்கோ வாழியாதன் (கி.பி. 90-115) இவன் சேர நாட்டின் ஒரு பகுதியை ஆண்டான் என அறிய முடிகிறது.

சேரமான் குட்டுவன் கோதை. (கி.பி. 95-130) இவன் குட்ட நாட்டை ஆண்டவன். சேரமான் தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை. கி.பி.115-132) கபிலரால் பாடப்பெற்றவன். இவனைப் பற்றிப் பதிற்றுப் பத்தில் காணலாம்.

சேரமான் மாந்தரங் சேரல் இரும் பொறை (கி.பி.150) விளங்கில் எனும் பகுதியை ஆண்டவன்.

சேரன் செங்குட்டுவன் கி.பி.125-180. வஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவன். (**பதிற்றுப் பத்து 30**)

சேரமான் யானை கட்சேய் மாந்தருஞ் சேரல் இரும்பொறை (கி.பி. 148-180) மாந்தரன் எனும் பெயரும் உண்டு. தொண்டியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவன்.

சேரமான் மாரிவெண்கோ கி.பி. (180-215) ஔவையாரால் பாடப்பெற்றவன், கணைக்கால் இரும்பொறை, கருவூர் ஏறிய ஒள்வாட் கோப்பெருஞ்சேரல் இரும்பொறை, மாந்தரம் பொறையன் கடுங்கோ, யானை கட் சேய்மாந்தரம் சேரல் இரும்பொறை.

குலசேகரவர்மன் (கி.பி. 800-820) இவன் வேணாட்டை ஆண்டவன்.

ராஜ சேகரவர்மன் (கி.பி. 820-844)

ஸ்தனு ரவிவர்மன் (கி.பி. 844-885) வேணாட்டை ஆண்டவன்

இரவி வர்மா. (கி.பி. 885-917) வஞ்சியிலிருந்து வேணாட்டை ஆண்டவன்.

கோதாரவிவர்மா. (கி.பி. 917-944) வேணாட்டை ஆண்டவன்.

இந்து கோத வர்மா (கி.பி. 944-962) நாஞ்சில், நெல்லை, போர்களில் ஈடுபட்டவன்.

பாஸ்கர ரவிவர்மன். கி.பி. 962-1021. திருவேலங்காடு செப்பேடு இவனது போர்கள் பற்றிக் குறிப்பிடுகிறது.

சேரநாட்டை இதன் பின் ஆண்ட மன்னர்கள் பற்றி வள்ளுவரைத் தெரிந்து கொள்ளச் சான்றுகள் தேவையின்றி விடப்பட்டன.

**இத்தனைச் சேரமன்னர்களுள் "வள்ளுவன்" என்ற சேர மன்னனும் வரலாற்றில் இல்லை.**

**இவ்வாறாக சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் ஆட்சியில் கி.மு. முதல் நூற்றாண்டிலிருந்து கி.பி. 10 ஆம் நூற்றாண்டு வரை வரலாற்றில் வள்ளுவன் என்ற மன்னன் நாடாண்ட வரலாறு இல்லை.**

# பண்டைய சேரநாட்டின் நில இயல்பு விவரம்

பண்டைய சேர நாடு 12 மண்டலங்களாகப் பிரிவுற்றிருந்தது அவை,

1. பாண்டி
2. தென்பாண்டி
3. குட்டம் குமரி முனை வரை அளாவிக் கிடந்தது
4. குடம் - கொங்குநாட்டு மேல் எலலை
5. கற்கா - பாறை அடர்ந்த பகுதி
6. வேண் - மூங்கில்நாடு
7. பூழி - மணற்பாலைப்பரப்பு
8. பறை அருவா
9. அருவா வடதலை
10. சீதம்
11. மலாடு
12. புனல்நாடு




மலபார் வள்ளுவநாடு

A Survey of Kerala History
(A Sreedhara Menon)




திருவிதாங்கூர் நிலவரைபடம்




சேரசாம்ராஜ்யத்தில் வள்ளுவநாடு

**Government and Society in the Kulasekhara Age 149**

Inodupuzha-Muvattupuzha area and its capital was located at Karikode near Thodupuzha. To its north lay

Kalkarainad which included Trikkakara and neighbouring regions in the Ernakulam and Trichur districts. Further north lay Nedumpurayurnad (Talappalli-Palghat-Chittur area), **Valluvanad** (Ponnani-Perinthalmanna-Tirur area), Eralnad (Ernad area), Polanad (Calicut area), Kurumpurainad or Krumbranad (Quilandy - South Wynad area), Kolathunad (Cannanore-Kasargod area) and Puraikizhanad (North Wynad-Guddalore area).

அரசியல்முறையில் ஆய்நாடு, வேணாடு தற்போதைய நாகர்கோவிலிருந்து வடக்குத் திருவல்லா வரை எல்லை கொண்டது. இதன் தலைநகரம் ஆய்குடி. இது பொதிகை மலையை அடுத்துள்ளது. சங்ககாலத்து 3 முக்கிய ஆய் மன்னர்களான ஆய் அண்டிரன், திதியன், அதியன் என்பவர் ஆண்டனர்.

நாஞ்சில் நாடு குமரிமுனையை உள்ளிடமாகக் கொண்டு **இன்றுள்ள தோவாளை, அகஸ்தீஸ்வரம்** பகுதிகளைக் கொண்டுள்ளது. **இதனை உக்கிரப்பெரு வழுதி** கைப்பற்றி ஆண்டு வந்தான். இது ஒரு **நஞ்செய் நாடு.** நான்கு நிலங்களும் இதனுள் உள்ளன. எனினும் மலைப்பகுதி மிகுதியாக உள்ளதால் **மலைநாடு** என்றும் வழங்கப்பட்டு வருகிறது. நாஞ்சில் நாட்டின் முதல் தலைவன் **நாஞ்சில் குறவன்** என்றும், **நாஞ்சில் வள்ளுவன்** என்றும், **நாஞ்சில் பொருநன்** என்றும் அழைக்கப்பட்டான். இவனைக் **கணியன்** என்றும் கூறுவர்.

திருவள்ளுவர் காலத்தில் பாண்டியநாடே (இன்றைய கேரளா) எல்லை.

ஏனெனில் "சேரநாட்டில் சாளுக்கிய நாயக்கர்களும், ஆரிய நம்பூதிரிகளும் சேர்ந்து தமிழை, மலையாள மொழியாக ஏறத்தாழ எழுநூறு ஆண்டுகட்கு முன் எழுத்தச்சன் என்ற நம்பூதிரி மாற்றினான்," என்ற வரலாறு உள்ளது.

## மூவேந்தர்களின் எல்லை :

### பாண்டிய நாட்டின் எல்லை

வடக்கு - தென் வெள்ளாறு

தெற்கு - குமரி முனை

கிழக்கு - வங்கக்கடல்

மேற்கு - திருவிதாங்கூர் கொச்சி ஆகிய கேரளமாநிலப் பகுதிகள்

### சோழ நாட்டின் எல்லை

தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி மாவட்டங்களும், கிழக்குக் கடற்கரைச் சமவெளியும் சேர்ந்த நிலப்பரப்பாகும்.

### சேரநாட்டின் எல்லை

கொச்சி, திருவாங்கூர் நாடுகளும் மேல் கடற்கரை வெளியும் மலையாள மாவட்டங்களும் சேர்ந்த நிலப்பரப்பாகும்.

## வள்ளுவ நாடு

இன்றைய குமரிமாவட்டத்தில் அகஸ்தீஸ்வரம், தோவாளைத் தாலுகாக்கள் நாஞ்சில் நாடு எனப்படும். கல்குளம், விளவங்கோடு பகுதிகள் நாஞ்சில் நாட்டில் உட்பட்ட பகுதிகள் அன்று. நாஞ்சில் நாட்டை மலைநாடு என்பர். சேர நாட்டின் தென்கோடி வேணாடு எனப்படும். நாஞ்சில்நாடு சேர, சோழ, பாண்டியர்கள் அதன் வளமை கருதி அடிக்கடிப் போரிடுவதுண்டு. உக்கிரப்பெருவழுதி நாஞ்சில் நாட்டைக் கைப்பற்றி ஆண்டு வந்தான். எனவே நாஞ்சில் நாடு பாண்டி நாட்டைச் சார்ந்தது.

அழகிய பாண்டியபுரம், *குறத்தியறை, கடுக்கரை, பூதப்பாண்டி உள்ளிட்ட மலைப்பகுதிகள் தோவாளைத் தாலுகாவில் காணப்படுகின்றன. ஒல்லையூர்தந்த பூதப்பாண்டியன் தன் பெயரால், பூதப்பாண்டி எனப் பெயரிடப்பட்டதாகத் தெரிகிறது. முதலில் வாழ்ந்த குடிமகன் நாஞ்சில் குறவன், என்றும் நாஞ்சில் பொருநன் என்றும்

நாஞ்சில் வள்ளுவன் என்றும் வழங்கப்பட்டான். வள்ளுவக் குடியில் பிறந்ததால் வள்ளுவன் என்று அழைக்கப்பட்டான். இப்பகுதியே வள்ளுவநாடு என்று அழைக்கப்படுகிறது.

*- அறை என்பது பாறை என்னும் பொருள்படும் தமிழ்ச்சொல். எனவே குறவர் - குறத்தியர் வாழ்ந்த பாறையே குறத்தியறை என்றாயிற்று.

குறத்தியை அறையில் அடைத்து வைத்ததால் குறத்தியறை எனப்பெயர் பெற்றது இவ்வூர் எனலாம்.

மேலும், கல்குளம் மாவட்டத்தில் திருநந்திக்கரைப் பகுதியும், கேரளத்தின் மலபார் பகுதியும் வள்ளுவநாடு என்று அழைக்கப்பட்டு வருகிறது.

நாஞ்சில் நாடு என்பது அகஸ்தீஸ்வரம், தோவாளைத் தாலுகாப் பகுதிகளாகும். எனவே வள்ளுவநாடு என்பது மலைநாட்டின் திருநந்திக்கரையினின்று தோவாளைத் தாலுகா வரையிலான பகுதி ஆகும். சங்க காலத்தில் நாஞ்சில்நாடு பாண்டிய நாட்டிற்குட்பட்டது.

குமரி மாவட்டத்தில் இன்று காணப்படும் கல்குளம் மற்றும் விளவங்கோடு என்ற இரு தாலுகாக்கள், வேணாட்டுப் பகுதிகளாகும்.

கல்குளம் தாலுகாவில் திருவட்டாற்றிற்கு வடக்கில் உள்ள ஓரிடத்திற்கு திருநந்திக்கரை என்று பெயர். இங்கு ஒரு குடவரை சிவன் கோயில் உள்ளது. இக்கோயிலில் உள்ள சாசனத்தில்.... வள்ளுவநாட்டு முட்டம் என்றும் பெயர் தவிர்த்து மும்முடிச் சோழ நல்லூர் என்று பேராக்கி, இந்நாட்டுத் திருநந்திக்கரை மாதேவர்க்கு பெருமாள் ஐப்பிக சதயத்தின் நாள் .......... திருவிழா எடுத்து" என்று உள்ளது. (கி.பி.985-1012). வள்ளுவநாட்டு முட்டம் என்பது வள்ளுவநாட்டில் காணப்படும் சின்னமுட்டமே. இது தவிர தென்னாட்டுக் குறுநாட்டுக் கடிகைப்பட்டினத்து மேல் முட்டம், கீழ் முட்டம் என்ற இரு

முட்டங்கள் உள. கி.பி.10ஆம் நூற்றாண்டில் முட்டம் எனும் பெயரை மாற்றி மும்முடிச் சோழநல்லூர் என்று பேராக்கினான் என்று மேற்கண்ட சாசனம் உறுதி செய்கிறது. எனவே நாஞ்சில் சின்ன முட்டமே வள்ளுவ நாட்டு முட்டம் ஆகும.

புலவர் குழந்தை அவாகளின் "**தமிழக வரலாறு இடைக்காலம்**" எனும் நூலில் (பக்கம் 136) உதகை செல்லும் வழியில் மேல் கொக்கில் வள்ளுவ நாட்டில் உள்ள முட்டம் எனும் ஊர்க்கு மும்முடிச் சோழ நல்லூர் எனப் பெயரிட்டு அதை அந்நாட்டுத் திருக்கரைக் கோயிலுக்கு இறையிலியாக இராச ராச சோழன் விட்டான். (கி.பி.988) என்கிறார். ஆக, இந்த முட்டமும் வள்ளுவ நாட்டு முட்டம் அன்று.

தமிழ்நாட்டில் கடலூர் மாவட்டத்தில் காட்டுமன்னார்குடி தாலுகாவில் கொள்ளிடம் ஆற்றின் கரையில் "முட்டம்" என்ற ஊர் உள்ளது. தமிழக அரசின் முன்னாள் துணை முதல்வர் ஸ்டாலின் அவர்கள் "இந்த முட்டம் என்ற ஊருக்கும்" நாகப்பட்டினம் மாவட்டம் மணல்மேடு என்ற ஊருக்கும் இடையே, கொள்ளிடம் ஆற்றின் குறுக்கே பாலம் அமைப்பதற்கு 06.03.2010 அன்று அடிக்கல் நாட்டியுள்ளார்கள். **இந்த முட்டமும் வள்ளுவநாட்டு முட்டம் அல்லது நாஞ்சில் முட்டம் அன்று.** மேற்கண்ட குறிப்புகளிலிருந்து திருவள்ளுவர் காலத்து நாஞ்சில் முட்டம் இன்றைய நாஞ்சில் நாட்டு பகுதியான அகஸ்தீஸ்வரம் தாலுகாவில் கன்னியாகுமரிக்கு அருகே உள்ள (புறத்தாய நாடு) சின்னமுட்டமே ஆகும். இது பண்டைய காலத்தில் துறைமுகமாக இருந்தது.

### வள்ளுவரின் ஆட்சி :

**எந்த வள்ளுவ நாட்டையும் வள்ளுவன் என்ற மன்னன் ஆண்டதாக வரலாற்றுச் சான்றுகள் இல்லை.**

ஆனால் குமரி மாவட்டத்தில் அகஸ்தீஸ்வரம், தோவாளைத் தாலுகா உள்ளடக்கிய நாஞ்சில் நாட்டு மலைப் பகுதியில் நாஞ்சில்

**வள்ளுவன் அரசர்க்கு உட்படு கருமத் தலைவனாக பாண்டிய மன்னன் நியமித்ததாக வரலாறு கூறுகிறது. எனவே, திருவள்ளுவர் தென்பாண்டி நாட்டில் தோன்றி நாஞ்சில்நாட்டுப் பகுதியில், வாழ்ந்ததாகக் கருதலாம்.**

திருவள்ளுவர் காலத்தில் (கி.மு. முதல் நூற்றாண்டு) **திருநயினார்குறிச்சி** என்ற பெயருடைய **ஊரே கன்னியாகுமரி** மாவட்டத்தில் **இல்லை** என்பது குறிப்பிடத்தக்கது. **திருவிதாங்கூர்** விவரச் சுவடியிலும், **அரசு வெளியிட்ட நில வரை படத்திலும்** ***திருநயினார்குறிச்சி*** **என்ற ஊர்ப்பெயர் இடம் பெறவில்லை.** 1958ல் வெளியிடப்பட்டுள்ள கன்னியாகுமரி மாவட்ட மலரில் குமரி மாவட்ட ஊர்கள் பற்றிய விபரம் அடங்கிய சுவடியில திருநைனார்குறிச்சி என்ற ஊர் பெயர் இடம்பெறவில்லை. ஆனால் பிற பெயர்களும், அவ்வூர்ச் சிறப்புகளும் காணப்படுகின்றன.



திருநைனார்க்குறிச்சி மகாதேவர் ஆலயம்



கோவிலில் காணப்படும் கல்வெட்டு வண்ணத்தால் மறைக்கப்பட்டுள்ளது.

1985ல் தற்போதைய குமரி மாவட்டத்தில் கடியபட்டினம் கிராமத்தில் வெள்ளிச்சந்தை பேரூராட்சிக்கு உட்பட்ட சிற்றூர்களில் ஒன்றான திருநைனார்குறிச்சி உள்ளது. இங்குக் கறைகண்டே சுவர மகாதேவர் கோவில் ஒன்றுள்ளது. இது 11 ஆம் நூற்றாண்டில் இராஜேந்திர சோழனால் கட்டப்பட்டது. 1985-ல் நாஞ்சில் சிந்தாமணி வெளியிட்ட கன்னியாகுமரி மாவட்ட மலரில் கல்குளம் வட்டத்தில் வருவாய் கிராமத்தில் தொடங்கிய 42 சிற்றூர்களில் 29 ஆவது சிற்றூரானது திருநயினார்குறிச்சி எனும் ஊர் சேர்க்கப்பட்டுள்ளது. இங்குள்ள வருவாய்த்துறை ஆவணங்களிலும், பத்திரப்பதிவு ஆவணங்களிலும் திருநயினார்குறிச்சி என்றே காணப்படுகின்றன.

தலக்குளம் அழகம்பெருமாள் நயினார்கோயில் கல்வெட்டில், "ஸ்வஸ்தி ஸ்ரீ கொல்லமாண்டு கும்ப ஞாயிறு தென்னாட்டுக் குறுநாட்டுக் கடிகைபட்டினத்து உடையார் கறைகண்டே சுவரமுடைய மஹா தெய்வர்க்கு அகநாழிகெசெ" ....என்ற குறிப்புக் காணப்படுகிறது. ஆனால் இங்குக் கறைக்கண்டேசுவர நாயனார் கோவில் என்ற பெயரில் கோவில் ஏதும இல்லை. கறைகண்டேசுவர் மகாதேவர் என்ற பெயரில் தான் ஒருசிறு கோயில் காணப்படுகிறது.

# வள்ளுவநாட்டு முட்டம் எது?

சேரமான் பாற்கர இரவிவர்மன். (978 - 1036) இராசராசன் அனுப்பிய தூதனை உதகைச் - சிறையிலிட்டான். அதனால், இராசராசன் 988 இல் பெரும்படையுடன் மேற்கு நோக்கிச் சென்றான். பாண்டிய நாட்டைக் கடந்து செல்லும்போது, எதிர்த்த பாண்டியன் அமரபுயங்களை வென்று சேரநாட்டை அடைந்து காந்தளூரில் நடந்த போரில் சேரனை வென்று அங்கிருந்த கடற்படையை அழித்தான்; பின் அப்பகுதியிலிருந்து விழிஞம், கொல்லம், கொடுங்கோளூர் முதலியவற்றையும் கைப்பற்றினான். பின்னர் தூதுவன், சிறையிருந்த உதகை செல்லும் வழியில், மேல்கொங்கில், வள்ளுவ நாட்டில் முட்டம் என்னும் ஊர்க்கு மும்முடிச் சோழ நல்லூர் எனப்பெயரிட்டு அதை அந்நாட்டுத் திருக்கரைக் கோயிலுக்கு இறையிலியாகவிட்டான். இம்முட்டம் வெள்ளிமலையின் அடிவாரத்தில் இருக்கிறது. பின் உதகை சென்று, அதனை அழித்துத் தூதனைச் சிறைமீட்டான். இது, நீலகிரியில் உள்ள உதகையேயாகும். (புலவர் குழந்தை - தமிழக வரலாறு பக்கம் 136)

மூன்றாம் சேரமான் என்பான் (798-834) பெருமாள் மரபில் கடைசி மன்னன். இவன் கி.பி.834இல் சேரநாட்டை 12 பாகமாகப் பிரித்துப் பன்னிருவர்க்குக் கொடுத்துவிட்டு முகமதிய சமயத்தைத் தழுவி, மெக்காவுக்குச் சென்று விட்டனன். அப்பன்னிரு வரும் தனியாட்சி நடத்திவந்தனர். அப்பன்னிரு நாடுகளாவன :

1. கோழிக்கோடு
2. வள்ளுவநாடு
3. கொச்சி
4. திருவிதாங்கூர்
5. குறும்பரநாடு
6. கோட்டயம்
7. சிரககல்
8. கடத்தநாடு
9. பாலக்காடு
10. பெய்ப்பூர்
11. பரப்பநாடு (இருபகுதி)

இப்பன்னிரு நாடுகளில், கொங்கு நாட்டுக்கு அணித்தாயுள்ளவை பாலக்காடும், கோழிக்கோடும் ஆகும். கோயிற் கோட்டை என்பதே கோழிக்கோடு எனத் திரிந்து பின் கள்ளிக்கோட்டை ஆனதாம். கொங்குநாட்டைச் சேர்ந்த வள்ளுவ நாட்டின் மேற்பகுதியைச் சேரர் கைப்பற்றிக்கொண்டனர். (தமிழகவரலாறு - புலவர் குழந்தை - பக்கம் 338)

முட்டம் என்னும் ஊர் கோவைக்கு மேற்கில், வெள்ளிமலை அடிவாரத்தில் காஞ்சியாற்றின் (நெய்யல்) கரையிலுள்ள ஒரு பழைய ஊர். அக்காலத்தில் அதற்கு இரவிவர்ம சதுர்வேதிமங்கலம், அமரபுசங்க நல்லூர் என்றப் பெயர்கள் வழங்கி வந்தன. இக்கல்வெட்டில் கண்டதான நிலங்களை வீரராசேந்திரச் சோழன் (1206-1255) புதுப்பித்ததாக அவனது 27 ஆவதாண்டு முட்டம் கல்வெட்டால் தெரிகிறது.

இதுகாறும் கண்டவற்றால், கிழக்கே வெள்ளலூரையும் மேற்கே முட்டத்தையும் உள்ளடக்கிய பேரூர் நாட்டிலும், பழனிப் பகுதியான வைகாவூர் நாட்டிலும், அமராவதிக் கரையிலுள்ள கரைவழி நாட்டிலும், அன்று சேரர்கள் ஆதிக்கம் இருந்து வந்ததென்பதை அறியலாம். (தமிழக வரலாறு - புலவர் குழந்தை - பக்கம் 339, 340, 341)

கேரளத்து நெய்யாற்றின்கரை எனும் ஊரிலிருந்து 20 கிலோ மீட்டர்த் தொலைவில் நெடுமங்காடு செல்லும் வழியில் மாராய முட்டம் எனும் ஊர் இருக்கிறது.

குமரி மாவட்டத்தில் கடியப்பட்டினத்திற்கு அருகில் மேலமுட்டம் கீழமுட்டம் எனும் ஊர்களும், நாஞ்சில் நாட்டில் கன்னியாகுமரி முனையில் சின்னமுட்டம் எனும் ஊரும் உள்ளன. இதில் சின்னமுட்டமே நாஞ்சில் நாட்டு முட்டமாகும். இது சங்ககாலத்தில் சிறந்த துறைமுகமாக இருந்தது. இன்றைக்கு அது ஓர் மீன்பிடித்துறைமுகமாக விளங்குகிறது.



சின்னமுட்டம் கடற்கரைப் பகுதியில் வாழும் திரு.அந்தோனி அவர்களிடம் சின்னமுட்டம் பற்றிய வரலாற்றை நூலாசிரியர் கேட்டுத தெரிந்து கொண்ட செய்தி

திருநந்திக்கரை வள்ளுவநாட்டு முட்டம் என்பது இன்று முட்டைக்காடு என்று கூறப்படும் முட்டமாகும். இரணியல் முட்டம் என்பது கடிகைப்பட்டினத்துள்ள மேல்முட்டம் கீழ்முட்டமாகும். நாஞ்சில் முட்டம் என்பது குமரிப்பகுதியில் உள்ள சின்னமுட்டமே. பண்டு இது ஒரு துறைமுகம். இன்றும் இதன் அருகு அமைந்த லீபுரத்துக் கடற்கரையில் தட்டிய கப்பல் கிடப்பதைக் காணலாம். கப்பலின் மேல் பகுதிச் சின்னம் இன்றும் கடல் மட்டத்தினின்று மேலே தெரிவதைக் காணலாம். அக்கப்பலின் உள்பகுதியில் உள்ள பகுதியைத் தமிழக அரசு எடுத்துள்ளது. ஆக வள்ளுவநாடு **கல்வெட்டின்படி பார்த்தால் திருநந்திக்கரையினின்று தோவாளைத் தாலுகா வரையிலும் உள்ள மலைப்பகுதியாகும்**. தோவாளையும் அகஸ்தீஸ்வரம் தாலுகாக்கள் நாஞ்சில் நாடாகும். இதனையே பாண்டியன் கைப்பற்றியதால் இது பாண்டி நாட்டிற்குரியது. தோவாளைப் பகுதியில்தான் பாண்டியன் அணை, அழகியபாண்டிபுரம், பூதப்பாண்டி, பூதநாதன்கோவில், கடுக்கரை, திருமடவளாகம் என்ற குறத்தியறை நல்லூர், மருங்கூர். இப்பகுதிகள் காணப்படுகின்றன. இக்குறத்தியறையில் தான் நாஞ்சில் குறவன் (வள்ளுவன்) தோன்றினான். நாஞ்சில் நாட்டைக் கருங்கை உக்கிரப்பெரு வழுதி கைப்பற்றி அவ்வூர்த் தலைவனான நாஞ்சில் குறவனை (வள்ளுவனை) உட்படுகருமத் தலைவன் என்ற பட்டம்

கொடுத்து அப்பகுதியில் அரசாணைகளை யானைமீதமர்ந்து முரசறைந்து அறிவிப்பவனாக அமர்த்தினான். இவற்றானும் வள்ளுவன் எனப்பட்டான். இவன் வீரமும், கொடையும் கொண்டவன். இவனது மகன் அவ்வூர் முதலியாருடைய பெண்ணைக் காதலித்தான். பெரிய வீட்டு முதலியாரும் ஒப்புக்கொண்டு பெண் கொடுக்க குறவர் குறத்தியரை அடைத்து வைத்த காரணத்தால் குறத்தியறை எனும் பெயராயிற்று. அருகில் குறவன் திட்டு என்ற ஒன்றும் உ_ளது. குறவர்களைக் கொன்றழித்து குருதி சிந்திய வயல் இன்றும் உ_ளது. இது குருதி வயல், சோரை வயல் என்று அழைக்கப்படுகிறது.



குறவர்களை கொன்றழித்த குருதி சிந்திய வயல் இதனைக் குருதி வயல் என்றும் சோரை வயல் என்றும் குறிப்பிடுகிறார்கள்

கடிகைப்பட்டினம் தென்னாட்டுக் குறுநாடு. அதன் அருகமைந்த திருநைனார்குறிச்சியான கூழக்கடை. இன்றும் அது ஒரு சந்தையாகவே (Market) காணப்படுகிறது. 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில்தான் இப்பெயர் பெற்றது கல்வெட்டுக்கள் அனைத்தும் இராசராசத் தென்னாட்டுக் குறுநாட்டுக் கடிகைப்பட்டினம் என்றே காணப்படுகின்றன.

# கல்வெட்டுச் சான்றுகள்

அதிகனூரான அழகியபாண்டியபுரக் கலவெட்டு :

கொல்லம் 252ஆம் ஆண்டு (கி.பி.1077) சாசனம் இது அழகிய பாண்டிபுரத்தின் மேற்பால் இருககும் மேல்கரைக் கோவிலில் இச்சாசனம் காணப்படுகிறது.

கொல்லம் தோன்றி 252ஆம ஆண்டு நாஞ்சில் நாட்டு *அதிகனூரான அழகியபாண்டிபுரத்து கணணன் தெவனான்* உத்தமப் பாண்டிய சிலை செட்டியென் இந்நகரத ..........

கன்னியாகுமரிக் கோவிலில் பொறிக்கப்பட்டுள்ள பராந்தகப் பாண்டியன் சாசனமும் எல்லை கூறுமிடத்து இவ்வூரைக் குறிப்பிடுகின்றது.

'வடவெல்லை நாஞ்சி நாட்டு அதிகனூரும்' என வருகின்றது.

## குமரி மாவட்டக் கல்வெட்டுக்கள்

கல்வெட்டாய்வாளர் : டாக்டர் **இரா.நாகசாமி**

**கல்குளம் கல்வெட்டு கி.பி.13-ஆம் நூற்றாண்டு**

**ஊர் : தலக்குளம் எழுத்திட்டான் பாறையில் உள்ள கல்வெட்டில்**

**"தென்னாட்டு குறுநா**
**ட்டு கடியபட்டனித்து பெரிய குளத்து குளக்கரை**
**யும் (மறை)காலும் கல்படுத்த கற்தச்சன் கறைக்க**
**ண்டேவரத்து" என்று காணப்படுகிறது. எனவே கடிகைபட்டினம் தென்னாட்டுக் குறுநாடாகும். வள்ளுவ நாடாகா.**

த.நா.தெ.ஆய்வுத்துறை தொடர் எண் 1969/37
கன்னியாகுமரி கல்வெட்டுக்கள் நான்காம் தொகுதி டாக்டர்
இரா.நாகசாமி

கல்குளம் - திருநயினார்குறிச்சிக் கல்வெட்டு .பி 1139

கறைகண்டேஸ்வரர் கோவில் உண்ணாழியின்தெற்குப் பக்கபட்டி தென்னாட்டுக் குறுநாட்டைச் சேர்ந்த கடிகைப் பட்டினத்துகறை கண்டேஸ்வரமுடைய மகாதேவர்க்கு ஆதிச்சன் கோதை என்பான் திருநந்தவனமும் திருநந்தாவிளக்கும் அளித்ததைக் கூறுகிறது.

கல்வெட்டு :

"கொல்லம் 315 ஆண்டு கும்ப ஞாயிறு தென்னாட்டு குறுநாட்டு கடிகைபட்டினத்து
உடையார் கறை கண்டேஸ்வரமுடைய மகாதேவற்கு அகநாழிகை செ"

என்று காணப்படுகிறது. எனவே இப்பகுதி வள்ளுவநாடு அன்று. திருநயினார்குறிச்சிக் கல்வெட்டு கி.பி.1227.

கறைகண்டேச்சுரமுடைய மகாதேவற்கு ஸ்ரீபலிச் செலவிற்கு முப்பதே கால் அச்சு (ஒருவகை நாணயம்) ஆதிச்சன் கோதை அளித்ததைக் குறிக்கிறது.

கல்வெட்டு :

"கொல்லம் (403) மாண்டே மகர ஞாயிற்று....
இந்நாளில் இராஜராஜத் தென்னாட்டுக் குறுநாட்டுக் கடிகை
பட்டினத்து உடையர் கறை கண்டேவரத்து மகாதேவற்கு"

எனக் காணப்படுகிறது. எனவே இங்கும் இது வள்ளுவ நாடு இல்லையாயிற்று.

எ.கா :

1. திருநந்திக்கரை பட்டாரகர்க்கு திருநந்தாவிளக்கு ஒன்று எரிப்பதற்கு சித்தக்குட்டி அம்பி என்ற அஞ்நூற்றுவ முத்தரையன் ஒன்பது எருமைகளை அளித்ததைக் குறிப்பிடுகிறது.

கன்னியாகுமரிக் கல்வெட்டு 4-ஆம் தொகுதி (கல்குளம்)
டாக்டர்.இரா. நாகசாமி
இயக்குநர். தொல்பொருள் ஆய்வுத்துறை

2. திருநயினார் குறிச்சி கல்வெட்டு கி. 1163

கறைகண்டேஸ்வரமுடைய நாயனார்க்கு சித்திரைத் திருநாளில் நீராடுவதற்கும் திருஉலா எழுந்தருளுவதற்கும் அந்நாளில் திருநடனம் நடத்துவதற்கும் பெரும்பற்றப்புலியூர் சிவனுக்கினியார் என்பார் நெல் அளித்ததைக் குறிக்கிறது.

3. திருநயினார்குறிச்சி கல்வெட்டு :

"கொல்லம் (339) மாடை மேஷ ஞாயிறு (204) சென்(ற)வியாழ வாட்ச்சையும் மூலரும்..... பெற்ற இந்நாளில் ராஜ

ராஜத் தென்னாட்டுக் குறுநாட்டுக் கடிகைப்பட்டினத்து உடையார் கறைகண்டேவரமுடைய

நாயனார்க்கு பெரும்பற்

றப்புலியூர் சிவனுக்கினியார் கற்பிச்ச ...... சித்திரைத் திருநாள்

தீர்த்தமாடி எழுந்தருளி அதின்" எனக் காணப்படுகிறது. எனவே இப்பகுதியும் வள்ளுவ நாடன்று கடிகைப்பட்டின தென்னாட்டுக் குறுநாடு.

திருநயினார்குறிச்சி கி.பி.1432 குகைக்கோவில் மேற்குப்பக்க சுவர்

4. திருநயினார்குறிச்சி கல்வெட்டு :

1. ஸ்ரீ கொல்லம் 98-மாண்டு சித்திரை மா(து)ம் உயசாந்
தியதி ரோஹணி நாள்

2. நாயினார் கறை கண்டீச்சுரமுடைய னாயி(ந)ாற் கோயில் புதுக்கி கலசமாடி எ(ழு)ந்தருளிச்ச வேதை அறை

3. சடையரின் சுவ(ர) கரனாதசோடி கேரளப் பல்லவரயற்"
கறைகண்டேஸ்வரர் கோயில், மணி மண்டபத்தின் வடக்குப் பக்கக் குறுக்குப்பட்டி

5. திருநயினார்க்குறிச்சி கல்வெட்டு :

**இராசராச தென்னாட்டுக் குறுநாட்டுக் கழகைப் பட்ண முடைய**

நாயனார் கரைகண்டீசுரமுடைய நாய

னாற்கு பெரும்பற்றப் புலியூர் சிவனுககினி(யார்) (கடிகை)மகா

தேவர் திருக்கோவில் சன்னதி சோபான மண்டப முகித்து

கலசமும(ா)டி உ மண்டபத்தில் திருவடிச் சோதிக்கு எழுந்தருளிச்சு

கல்வெட்டு ஸ்ரீ கறைகண்டேஸ்வரத்துக் கமலற்றயாண்டு திருநந்திக்கரைப் பட்டாரகர்க்கு நாஞ்சிநாட்டு வெய்கோட்டு மலையுடைய சித்தகுட்டி அம்பியாயின அந்நூற்றுவ முத்தரையன் நிசதம் உரிய நெய் எரிவதாக வைச்ச திருநந்தாவிளக்கு ஒன்றுக்கு வைச்ச சாவா மூவா எருமை ஒன்பது இவை பெருமக்களுக்குச் சமைஞ்(ச) இடையன்வீரன் மஙகலவன் வாய்ந்த(ந)ன்

கலசமும்(ா)டி மண்டபத்தில் திருவடிச்சோதிக்கு எழுந்தருளிவிச்சு

குறிப்பு : இக்கல்வெட்டு இராசராசத் தென்னாட்டு வள்ளுவ நாட்டைச் சேர்ந்த திருநந்திக்கரையில் உள்ள மகாதேவர் கோயிலுக்குத் திருவிழா எடுப்பதற்கும் சந்திவிளக்கு இரண்டு எரிப்பதற்கும் கொடை அளித்ததைக் குறிக்கிறது.

6. கல்வெட்டு :

இராசராசத் தென்னாட

டு வள்ளுவ நாட்டு முட்டம் முட்டமென்னும்பே

ர் தவிர்த்து மும்முடிச் சோழநல்லூரென்றுபெ

இந்நாட்டு திருநந்திக்கரை மாதேவர் பெருமாள்

ஐப்பிசைத் சதையத்தினான்.

....... நடை திரத திருவிழா வெடுத்து தி

........ அட்டி ஞமனஞ்செய்

.........கவும் நசதம் நாழிநெய

கன்னியாகுமரி கல்வெட்டுக்கள் 4-ஆம தொகுதி

இவர்தம் கன்னியாகுமரிக் கலவெட்டுக்களில் 19-ஆம் நூற்றாண்டில் தோன்றிய சிற்றூரான (கூழக்கடை) திருநைனார்க்குறிச்சி இடம் பெறவில்லை. கடிகைப்பட்டினமே அனைத்துக் கல்வெட்டுக்களிலும் காணப்படுகின்றது.

................"பிர
மபுரத்து நயினார் வேழ்விமலைவே
லாயுதம் ளுள்க்கு ராசராச தென்னாட்டு
கை கடிய பட்டணத்து.... என குமாரகோவிலின் முதல் திருச்சுற்றின் மேற்குப் பக்க மண்டபத்தினுள் தனிக்கல்"

7. தலக்குளம் கல்வெட்டு

"............... தென்னாட்டு குறுநா
ட்டு கடியபட்டனத்து பெரிய குளத்து குளக்கரை
யும் (மறை)காலும் கல்பகுத்த கறதச்சன் கறைக்க
ண்டேவரத்து ..........."

கறைகண் டேச்சுரமுடைய மகாதேவர்க்கு ஶ்ரீபலிச் செலவிற்கு முப்பதேகால் அச்சு ஆதித்தன் கோதை அளித்ததைக் குறிக்கிறது.

"ஶ்ரீ கொல்லம் (403) மாண்டே மகர ஞாயிற்று....
இந்நாளில் இராஜராஜத் தென்னாட்டுக் குறுநாட்டுக் கடிகை
பட்டினத்து உடையார் கறைக்கண்டேசவரத்து மகாதேவற்கு"

"உடையார் கறைகண்டேச்சுரமுடைய நாயனார் கோவில் சிரி
பொலி செலவுக்கு........."

ராஜராஜத் தென்னாட்டுக் குறுநா
ட்டுக் கடிகைபட்டினத்து உடையார் கறைகண்டேசு வரமுடைய
நாயனார்கு.........

"நாயனார் கறைகண்டீச்சுரமுடையனாயி(ந)ாற்கோயில் புதுக்கி"

"இராசராச தென்னாட்டுக் குறுநாட்டுக் கடிகைப் பட்டணமுடைய நாயனார் கரைகண்டீசுரமுடைய நாயனாற்கு பெரும்பற்றப் புலியூர் சிவனுக் கினி(யார்) கடிகை மகா
தேவர் திருக்கோவில்ச் சன்னதி சோபான மண்டப முதித்து
கலசமும்(ா)டி உ மண்டபத்தில் திருவடிச் சோதிக்கு
எழுந்தருளிவிச்சு"

## கருப்புக்கோட்டை கல்வெட்டு

8. "சுவஸ்தீஸ்ரீ கொல்லம் ................ மாண்டு கன்னியில் வியாழுநின்ற விருச்சிக ஞாயிரு சென்ற நாள் காரித் துறைப் பிரான் சேகரான கங்கை கொண்ட சோழவள்ளுவ நாட்டாழ்வானென் கருப்பழவில் ஸ்ரீகைல (சக்) கோவில் நிவந்தம்" (காலம் கி.பி. 1163).

மற்றொன்று "..................விளைந்த நிலத்துக்கு மாத்தால் நெல்லைமுகலமுமேற்படி யூரிலுள்ள பூ (வா) லையுங் கூடக் குடுத்தேன். கங்கைக் கொண்ட சோழ வள்ளுவ நாட்டாழ்வானென் ஸ்ரீகயிலாச முடைய மஹாதேவர்க்கு" (காலம் கி.பி. 12ம் நூற்றாண்டு தோவாளைத் தாலுகா குறத்தியறை, அழகிய பாண்டியபுரம், பூதபாண்டி, கடுக்கரை, கருப்புக்கோட்டை உள்ளிட்ட பகுதியே.

## வள்ளுவநாடு கல்வெட்டு

திருநந்திக்கரை குடவரைக் கோயில் கிழக்குப் பக்கம் சுவரில் காணப்படும் கல்வெட்டு

இராசராசத் தென்னாட்டு வள்ளுவ நாட்டைச் சேர்ந்ப திருநந்திக்கரையில் உள்ள மாதேவர் கோவிலுக்குத் திருவிழா எடுப்பதற்கும், சந்தி விளக்கு இரண்டு எரிப்பதற்கும் கொடை அளித்ததைக் குறிப்பிடுகிறது.

"ஸ்ரீ கோ இராசராச கேசரி பன்மர்க்கு
யாண்டு பதினட்டாவது இராசராசத் தென்னாட்
டு வள்ளுவ நாட்டு முட்டமென்றும் பே
ர் தவிர்த்து மும்முடி சோழ நல்லூரென்று பெ
....... இந்நாட்டு திருநந்திக்கரை மாதேவர்
........... பெருமாள் ஐப்பசிசைச சதையத்தினாள்
...... நரை திருத் திருவிழா வெடுத்து தி
......... அட்டி குமனஞ்செய்
................ கவும் நிதம் நாழி நெய்யா(ல்) இர
ண்டு திருச்சந்தி விளக்கு இராசராசனென் வம்தி
............ (அளக்கக்கட) வ்வதாகவும் உச்சி
..... சந்ததிப் பிர" என்று காணப்படுகிறது.

(கல்வெட்டுச் சான்று இந்நாட்டின் (நாஞ்சில் நாட்டின்) மலைப்பகுதிதான் வள்ளுவநாடு எனும் மலைநாடு ஆகும். புறநானூற்றில், ஒருசிறைப் பெரியனார், மருதன் இளநாகனார், ஔவையார். கருவூர்க் கந்தப்பிள்ளை ஆகியோர் நாஞ்சில் பொருநனை - வள்ளுவனைப் பாடியுள்ளார்.

1) செவ்வரைப் படப்பை நாஞ்சிற் பொருந - புறம் 137
(நாஞ்சில் மலைப்பகுதிக்குத் தலைவன்)
2) உயர்சிமைய உழாஅ நாஞ்சிற் பொருந - புறம் 139
(நாஞ்சில் மலைக்குத் தலைவன்).

(ஆய்அண்டிரனுக்குட்பட்ட நாஞ்சில் மலைத் தலைவனாக இருந்தவன்)

தடவுநிலைப் பலவின் நாஞ்சில் பொருநன் - புறம் 140
(அவ்வையார் ஆய்அண்டிரனைப் பாடியது இவனும் மலைவேந்தனே.

தீஞ்சுளைப் பலவின் நாஞ்சிற் பொருநன் - புறம் 380
(பாண்டியனின் படைத்தலைவன் மறவனாகத் திகழ்ந்தவன்)

உரையாசிரியர்கள் நாஞ்சில பொருநனை நாஞ்சில் வள்ளுவன் என்றே குறிக்கிறார்கள்.

தென்னவன் மய மறன் என்று கூறப்படுவதால் இவன் பாண்டியனுக்குப் படைத்தலைவனாய் இருந்தான் என்பது தெளிவு.

# திருவள்ளுவர் காலமும் வள்ளுவநாடும்

தெய்வப்புலவர் கி.மு. 30 முதல் கி.பி. 30 வரை வாழ்ந்தவர் என ஆய்வாளர்கள் கருதுகின்றனர். இக்காலத்தே உக்கிரப்பெருவழுதி வேணாட்டின் தென்பகுதியாகிய (சேரநாட்டின்) தோவாளை அகஸ்தீஸ்வரத்தைக் கைப்பற்றினான். தோவாளை அகஸ்தீஸ்வரம் நாஞ்சில் நாடு என அழைக்கப்படுகிறது. நாஞ்சில் நாட்டின் தலைவனாக இருந்தவன் நாஞ்சில் குறவன். இவன் வள்ளுவக்குடியைச் சார்ந்தவன். குறிஞ்சி, முல்லைப் பகுதிகள் வள்ளுவநாடு, திருநந்திக்கரை, குலசேகரம், திருவட்டார், சித்திரங்கோடு, அழகிய மண்டபம், மேக்கோடு, இடைப்பட்ட பகுதி மருதநிலம், நெய்தல் நிலப்பகுதியாகிய கடிகைபட்டணம், மேல்முட்டம் கீழ் முட்டம், குளச்சல, மணவாளக்குறிச்சி போன்ற இடங்கள் இராசஇராச தென்னாட்டுக் குறுநாட்டுக் கடிகைப்பட்டணம். இங்கு 18ஆம் நூற்றாண்டில் தோன்றிய சிற்றூரே (கூழக்கடை) என்ற திருநயினார்க்குறிச்சி. திருநந்திக்கரை குடவரைக் கோவிலில் உள்ள கல்வெட்டில் வள்ளுவநாடு குறிப்பிடப்படுகிறது. இதன் எல்லை திருநந்திக்கரை, குலசேகரம், திருவட்டார், மங்கலம், ஆற்றூர், மேக்காமண்டபம், அழகியமண்டபம், தெற்கெல்லையான தக்கலை, வேளிமலை, அழகன்பாறை, அழகியபாண்டியபுரம், பூதப்பாண்டி, சீதப்பால், கடுக்கரை, குறத்தியறை திருமடவளாகம் தாடகை மலைவரையுள்ள மேற்குத் தொடர்ச்சி மலைப்பகுதிகள்



குறத்தியறையில் காணப்படும் தாடகை மலை வள்ளுவநாட்டின் தெற்கெல்லை ஒரு பெண்ணின் தோற்றமாகக் காணப்படுகிறது.

அடங்கிய பகுதியே **வள்ளுவநாடு**. மேலும் கருப்புக் கோட்டை கல்வெட்டின்படி அகஸ்தீஸ்வரம் வட்டத்தில் ஒரு **வள்ளுவநாடு** இனம் காணப்படுகிறது. மலபாரிலும் ஒரு வள்ளுவ நாடு காணப்படுகிறது. மேற்குறித்த வள்ளுவநாடுகளில் வள்ளுவன் என்ற மன்னன் ஆட்சி செய்ததாக எந்த வரலாறும் இல்லை. பாண்டியன் நாஞ்சிலைக் கைப்பற்றி அவ்வூர்த் தலைவனான **வள்ளுவனை உட்படு கருமத்தலைவனாக நியமனம் செய்தான்**. அரசாணைகளைப் பொதுமக்கட்குப் பறையறைந்து சொல்பவனாகவும் இருந்தான். இவை மலைப்பகுதி என்பது அழகியபாண்டியபுரத்தில் கண்டெடுக்கப்பட்ட **ஓலைச்சுவடிகளாலும்**, அக்கால **நாணயங்களாலும்** அறியக் கிடக்கின்றன. இவனைப் பற்றிய புறப்பாடலும் இதை வலியுறுத்தும். இதனைக் **கனகசபைப் பிள்ளையும்** உறுதி செய்கிறார். **நாஞ்சில் பொருநன் சேரமன்னர்க்குப் படைதிரட்டித் தரும் தலைவன் என்கிறார் உ.வே.சா.** சேரரும், பாண்டியரும் இந்த நாஞ்சில் நாட்டு வளங்கண்டு அடிக்கடி போர்தொடுப்பதுண்டு. நாஞ்சில் நாட்டில் பூதப்பாண்டி எனும் ஊர்களும் அழகியபாண்டியபுரம் பாண்டியன் அணைக்கட்டும் பாண்டியன் பேரால் உள்ளன. அம்மன்னன் குமரி என்னும் பேரூரில் கன்னித்தோட்டத்தைக் கட்டிக், கன்னித் தேவதைக்கு அர்ப்பணித்தான் என்ற செய்தி பாண்டிய மன்னன் தென்திருவிதாங்கூர்ப்பகுதிகளைக் கைபபற்றி ஆண்டான் என்பதை வலியுறுத்தும் என்பார் திரு. **செ. சதாசிவம்**.

பாண்டியன் மேற்கொண்ட இன்னொரு போரில் மன்னார்குடிக் கடலைச் சார்ந்த நாடும், பொதியமலையைச் சார்ந்த கூற்றமும், கன்னியாகுமரியும், கோட்டாறும் கைப்பற்றப்பட்டன.

"முள்ளாறும் கல்லாறும் தென்னர் ஓட
முன்னொருநாள் வாபயன் முனிந்தபோரில்
வெள்ளாறும், கோட்டாறும், புகையால் மூட
வெந்தவனம் இந்தவனம் ஒக்கில் ஒக்கும்"

என்னும் **கலிங்கத்துப் பரணி** 95-ஆம் பாடல் உறுதி செய்கிறது.

பாண்டிய நெடுமாறன் நாஞ்சில் நாட்டில் படையெடுத்து, எதிர்த்த சேரர்களை வென்று நாஞ்சிலைக் கைப்பற்றினார் எனப் பாண்டிக்கோவை கூறுகிறது.

"தூவுண்டை வண்டினங் காள்வம்மின் சொல்லுமின்
துன்னி நில்லாக்
கோவுண்டை கோட்டாற் றழிவித்த கோன்"

என்று பாண்டிக்கோவை கூறும்.

"குருமா நெடுமதிற் கோட்டாற் றரண்
கொண்ட தென்னன் கன்னிப்பெருமான்"

என **இறையனார் அகப்பொருள்** உரை கூறுகிறது.

நாஞ்சில் நாட்டின் தலைநகரான கோட்டாற்றைப் பாண்டியன் வென்றான் என்ற செய்திகளால் நாஞ்சில்நாடு பாண்டியன் ஆளுகைக்குட்பட்டிருந்தது. கி.மு. 3 முதல் கி.பி. 8 வரை என அறியலாகும்.

நாஞ்சில் நாட்டில் பூதப்பாண்டி எனும் ஊர் உளது முன்பு குறிக்கப்பட்டுள்ளது. இவ்வூரும் "**பணிகொண்ட காரையு முந்நீரையும் பெரும் பூதத்தையும் பணிகொண்ட செண்பகத்தென்னாபராக்ரம பாண்டியனே**" (பெருங் கதை) நாஞ்சில் நாட்டைப் பாண்டியன் வென்றான் என்பதாகும்.

புறப்பாட்டில் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் என்னும் ஒரு பாண்டி மன்னன் காணப்படுகிறான். இவன் ஆய் நாட்டின் தலைவனைத் தோற்கடித்த **பசும்பூண் பாண்டியன்** தந்தை. இவன் **தந்தை பெயரால் அதிகனூர்க்கு அழகியபாண்டியபுரம்** எனப் பெயர் சூட்டினான் எனச் **சிவராஜபிள்ளை** கூற்று. இம்மலைப்பகுதியே (நாஞ்சில் நாட்டின் மலைப்பகுதி).

அழகிய பாண்டிபுரத்தின் மேற்புறம் "மேல்கரைக் கோவிலில் அமைந்த சாசனத்தில்" "கொல்லம் (252) தோன்றி இருநூற்றைம்பத்தி இரண்டாமாண்டு நாஞ்சி நாட்டறினூரான அழகிய பாண்டிபுரத்து கண்ணன் தெவனான உத்தம பாண்டியச் சிலை செட்டியென் இந்நகரத் ......" என்று காணப்டுகிறது.

கன்னியாகுமரி குமரியம்மன் கோவிலில் பொறிக்கப்பட்டுள்ள பராந்தக பாண்டியன் சாசனமும் எல்லையைக் கூறுங்கால் இவ்வூரைக் குறிக்கிறது. "வடவெல்லை நாஞ்சி நாட்டு அதியனூரும்" என வருகிறது.

சேர வேந்தரிடமிருந்து பாண்டியன் கைப்பற்றியதாகத் தெரிகிறது.

**மேலும் 2000 ஆண்டுகளுக்கு முற்பட்ட சங்ககாலப் பாடலான புறநானூற்றில் நாஞ்சில் வள்ளுவன் என்ற பெயர் காணப்படுவதால் இவன் திருக்குறளை இயற்றிய திருவள்ளுவனே என உறுதியாகக் கூறலாம்.**

பின், திஸ்ஸா அரசனது காலத்தில் இருந்த ஏலேல சிங்கச் சோழப் பரம்பரையிலிருந்த ஏலேல சிங்கனிடம் நட்புப் பூண்டு திருமலையில் வாழ்ந்து வந்ததாகத் தெரிகிறது. நாஞ்சில் நாடு இதன் வளங்கருதி சேர சோழ பாண்டிய மன்னர்களால் அடிக்கடி கைப்பற்றப்பட்டு அவர்களின் ஆளுகைக்குட்பட்டிருந்தது. பின் சோழன் நாஞ்சிலைக் கைப்பற்றினான். ஒழுகினசேரியிலுள்ள சோழராஜா கோவில், சோழன் காலத்தில் கட்டப்பட்டது. மேலும் மும்முடிச் சோழ

நல்லூர் என்பது இன்று நல்லூர் எனபபடுகிறது. அப்போது பாண்டிய மன்னன் உக்கிரப் பெருவழுதி வேண்டுதலுக்கிணங்க - தமிழுக்குப் பொதுமறை எழுதச் சொல்ல - அவரும சுவடியில் திருக்குறளை எழுதி மதுரைச் சங்கத்தில் நக்கீரர் உள்ளிட்ட 59 புலவர்கள் அவையில் அரங்கேற்றப்பட்டது. இதைத் "தபபா முதற்பாவால் தாமாண்ட பாடலினால் முப்பாலில் நாற்பால மொழிந்தவர் - எப்பாலும் வைத்த கூர்வேல் வழுதிமென மகிழத் தெயவத் திருவள்ளுவர்" எனும் கீரந்தையார் பாடலினால் அறியலாம

கானப் பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி தமிழ்ச்சங்கத்தில் (மதுரை) திருக்குறள் அரங்கேறிய காலத்தில் இருந்தவன். நாஞ்சில்நாடு கி.மு. 3 முதல் கி.பி.8 வரை பாண்டியரின் ஆளுகைக்கு உட்பட்டிருந்தது எனத் தெரியவருகிறது.

# திருக்குறள் ஆவணங்கள்

## கவிஞர் தமிழ்நாடன்

உலகம் போற்றும் பொதுமறை திருக்குறள். திருக்குறள் தமிழ்நாட்டில் ஓர் ஆட்சி நூலாகவும் விளங்கியது. தமிழ் நாட்டில் சோழர், பல்லவர் காலத்தில் மனு தருமமே ஆட்சி நூலாய் விளங்கிற்று. கொங்கு நாட்டில் திருக்குறள் ஆட்சி முறை என்னும் குறிப்பு புதியது. தமிழ் நாட்டில் வேறுபகுதியில் கூடத் திருக்குறள் ஆட்சி நூலாக விளங்கி இருக்கக்கூடும். அத்தகைய ஆவணங்களைத் திரட்ட வேண்டும் என்பார், ஈரோடு முனைவர் செ.ராசு.

### 1. பொன்சொரிமலைக் கல்வெட்டு

சேலம் மல்லூர் அருகே உள்ளது பொன்சொரிமலை. இந்த மலையில் திருக்குறள் கல்வெட்டு கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இது தமிழகத்தில் அறியப்படும் மிகப்பழைய திருக்குறள் கல்வெட்டாகும். இதன் காலம் கி.பி. 15ஆம் நூற்றாண்டாகும். இந்தக் கல்வெட்டில் கீழ்க்காணும் திருக்குறள் பொறிக்கப்பட்டுள்ளது.

தன்னூன்
பெருக்கற்
குத் தான் பி
றிதூனுண்பா
னெங்ன
மாளுமருள்

(எண் 251) இந்தக் குறள் கொங்கு நாட்டு மக்கள் கொல்லாமையை வலியுறுத்திவாழ்ந்ததை விளக்கும். மேலும் கொங்குநாட்டில் சமணம் 15ஆம் நூற்றாண்டு வரையிலும் இருந்ததற்கு இது ஒரு சான்றாகும்.

## 2. பழனி செப்பேடு

மதுரை நாயக்கர்கள் கொங்கு நாட்டை ஆண்டபோதும் கொங்கு நாட்டுச் சிற்றரசர்கள் திருக்குறளைப் போற்றி ஒழுகினர். திருமலை நாயக்கர் காலத்தில் பழனியில் வீரமுடியாளர் சார்பில் ஒரு மடம் கட்டப்பட்டது. இதனைக் கட்டுவித்தவர் சின்னோப நாயக்கர் என்பார்.

"வள்ளுவர்மரபுகாத்து
முப்பால் மொழியின் படிக்கு
அல்லவை கடிந்து நல்லவை
நாட்டி
ஆறிலொன்று கடமை
கொண்டு
அசையாமணிகட்டி
அரசாள்பவர்
சின்னோபர்"

என்று வீரமுடியார் செப்பேடு பாராட்டுகிறது. (கொங்கு நாட்டுச் சமுதாய ஆவணங்கள், தமிழ்ப் பல்கலைக்கழகம், 1991)

## 3. பூந்துறை நாட்டார் மேலோலை

மதுரை முத்துவீரப்பநாயக்கர் காலத்தில் கொங்குப்

பகுதியிலுள்ள அரச்சலூருக்கும் காரையூருக்கும் எல்லைத்தகராறு இருந்து வந்தது. அதைத் தீர்த்துவைக்கப் பணிக்கப்பட்டவர் நாயக்கரின் தாராபுரம் அதிகாரி திம்மப்பமுதலியார். தகராறு தீர்ந்து 1617 ஆம் ஆண்டு ஒப்பந்தம் கையெழுத்தாகியது. இப்பதிவு பூந்துறைநாட்டார் மேலோலை என்றழைக்கப்படுகிறது. அதில்,

"அன்புடைய தாயேபோல்
அனைத்து உயிர்கட்கும்
இனிமைநல்கி
வள்ளுவர் உரைத்த
முப்பால் மொழியின்படியே
செங்கோல் நீதிவழுவாமல்
நடத்தி வரும் நாளில்" என்ற வாசகம் பதியப் பெற்றுள்ளது (கொ.ஆ).

## 4. கபிலமலைச் செப்பேடு

பரமத்தி பகுதியைப் பதினெட்டாம நூற்றாண்டில் ஆண்ட குறுநிலத் தலைவன் அல்லாள இளையா நாயக்கன் என்னும் வேட்டுவன். அவன் கபிலமலையின் திருவள்ளுவருக்கு ஒரு மடம் அமைத்தான். மடத்தின் தலைவரின் பெயர் திருவள்ளுவர் இணையாநாயக்கன். திருச்செங்கோடு, பழனியிலும் இவ்வாறான மடங்கள் அமைத்து மூன்றையும் கபிலமலைத் திருவள்ளுவருக்கு எழுதிக் கொடுத்தான். (கபிலமலைச் செப்பேடு கொ. ஆ) கபிலமலை வள்ளுவர் மடத்திற்கு ஒரு லட்சம் வராகன் செலவானதாம். நூறு கொத்தர்கள் கோவில் பணிசெய்தனராம். திப்புசுல்தான் காலத்தில் இந்தமானியம் நிகழ்ந்தது என்று செப்பேடு விளக்குகிறது.

## 5. பல்லடம் செப்பேடு

பல்லடத்தில் நாரணபுரம் என்று ஓர் ஊர் உண்டு. இந்த ஊரின் தலைவராக நாராயணக் கவுண்டர் இருந்தார். ஊரின் தெய்வம் அங்காள பரமேஸ்வரி. அம்மனுக்குக் குடிவாரியாக 24 மனைச் செட்டியார்கள். ஆண்டொன்றுக்கு ஒரு குறிப்பிட்ட பணம் கொடுத்தனர். அது பற்றிய விவரம் ஒரு செப்பேட்டில் பதியப்

பெற்றிருக்கிறது. இதன் காலம் 01.02.1798.

நீதிசாகரம்
நினைவுடன் கற்று...
வள்ளுவர் மரபுகாத்து
முப்பால் மொர்ழியின்படியே
அல்லவை கடிந்து
நல்லவை நாட்டி
ஆறிலொரு
கடமைகொண்டு

குடிதழைக்க ஆள்பவர் நாராணயக் கவுண்டர் என்று புகழ்கிறது. அந்தச் செப்பேடு (பல்லடம் செப்பேடு கொ.ஆ).

## 6. காரையூர் செப்பேடு

பாளையக்காரர்கள் காலத்திலும் கொங்கு நாட்டில் திருக்குறள் போற்றிப் பின்பற்றப்பட்டது. பழைய கோட்டைப் பட்டக்காரர் அழகன் உத்தமக்காமிண்டர்.

அன்புடைத்தாய்போல்
அனைத்து உயிர்க்கும்
இனிதென
வள்ளுவர் உரைத்த முப்பால்
மொழியின் படியே
அறமே அறிந்து
ஆறில் ஒன்று கடமை
கொண்டு

ஆட்சி செய்தார், என்கிறது. காரையூர் செப்பேடு. (தென்னிந்தியக் கோவில் சாசனங்கள் - தொகுதி மூன்று பாகம் ஒன்று. எண் 1223)

## 7. பழைய கோட்டை பூர்வபட்டயம்

பழைய கோட்டைப் பாளையக்காரர் குமாரரத்தினக் கவுண்டர் பள்ளிக்கூடமொன்று அமைத்தார். திருவாவடுதுறை

ஆதினத்திலிருந்து ஆசிரியர் வரவழைக்கப்பட்டார். அந்தப் பள்ளிக்கூடத்தில்

சங்கீத பண்ணுடன்
தமிழ்மன்ற
சாதிமத பேதமிலாது
சகலருக்கும் நலநீதியாய்

கற்பிக்கப்பட்டதாம். (பழைய கோட்டைப் பட்டையக்காரர் நாட்டுப்பாடலும் பூர்வபட்டயமும் 1965) குறள் இசையோடு பயிற்றுவிக்கப்பட்டது.

## 8. திருக்குறள் ஓலைச்சுவடி

ஈரோடு மாவட்டத்தில் திருக்குறள் ஓலைச்சுவடி யொன்றைக் கண்டறிந்தார். கல்வெட்டறிஞர், செ.இராசு. ஓலையில் வலப்புறம்



மூன்றில் இருபங்கு இடத்தில் திருக்குறள் கீழே பரிமேலழகர் உரை குறளுக்கு இடதுபுறம் உத்தமம், மத்திமம், அதமம் என்று ஒவ்வொரு குறளுக்கும் ஒரு மாதிரிக் குறிப்பு, இச்சுவடி சோசிய சுவடியாகப் பயன்பட்டதாம். இந்த ஓலைச் சுவடியை ஒன்றாகச் சேர்த்துப்பிடித்து அதைப் பிரித்துப் பார்த்தால் பலன் இருக்குமாம். அந்த மூன்றில் ஏதோ ஒன்றை சோசியர் கூறுவாராம். கேட்க வந்தவர் அப்பலனுக்கு ஏற்ப நடந்து கொள்ள வேண்டியது. இந்தச் சுவடியின் காலம் 200 ஆண்டுகள்.

## 9. மரக்கோட்டைத் திருக்குறள்

அண்மையில் சேலம் அருகேயுள்ள மரக்கோட்டை என்னும் ஊரைச்சேர்ந்த பாரம்பரியமிக்க மருத்துவம் பார்க்கும் குடும்பத்தினரது ஓலைச்சுவடிகள் பார்வைக்கு வந்தன. அவற்றில் பெரிய அளவிலான மருத்தவச் சுவடிகள் பத்து இதிகாசம், புராணங்கள் என எழுபது இருந்தன. திருக்குறள் சுவடியொன்றும் இருந்தது. இது பரிமேலழகர் உரை, அதிகார வைப்பு மாறிக்காண்கிறது. முன்னோர்கள் இநதத் திருக்குறள் சுவடியை மருத்துவ நூலாகப் பயன்படுத்தியிருக்கக்கூடும்.

## 10. இராசிபுரம் (ஆங்கிலத் திருக்குறள் கல்வெட்டு)

இராசிபுரம் அரசு மருத்துவமனை சீரமைப்பின் போது, புதையுண்டிருந்த ஓர் ஆங்கிலத் திருக்குறள் கல்வெட்டு அறியப்பட்டது. அதிற்காணுவது

The wealth of generous soul is like the Tree that healing Balm Destils for every ill.

The Sacred Kural

"மருந்தாகித்தப்பா மருந்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின்" (217)

எனும் குறளாம். இக்குறளை வெட்டுவித்தவர் திருமதி எம்.ஹெச்.ஏ.டோட் அம்மையார்.

1929ஆம் ஆண்டு முதல் 1933 ஆம் ஆண்டு வரை 3 முறை 12 மாதங்கள்) சேலம் மாவட்டக் கலெக்டராக இருந்தவர் ஏ.எச்.ஏ.டோட். அவரது துணைவியார்தாம் திருக்குறள் கல்வெட்டு வெட்டுவித்தார்.

1931ஆம் ஆண்டில் ஏற்பட்ட காலரா மற்றும் காய்ச்சலினால் தற்போதைய தர்மபுரி, நாமக்கல் மாவட்டங்களையும் உள்ளடக்கிய

சேலம் மாவட்டத்தில் 20 ஆயிரத்துக்கு மேற்பட்டவர்கள் இறந்தனர். அதன் பிறகு விரைவாக சேலம் மாவட்டத்தில் சேலம், ஆத்தூர், நாமக்கல், ராசிபுரத்தில் மருத்துவமனைகள் தொடங்கப்பட்டன. ராசிபுரத்தில் 23 படுக்கை வசதியுடன் மருத்துவமனை தொடங்கப்பட்டது. (1932) ஆங்கிலேயர் ஆட்சியில் மருத்துவமனைகள் இராணுவ நிர்வாகத்திலிருந்து பொது நிர்வாகத்திற்கு மாறியது. இந்தக் காலகட்டத்தில்தான் அமைக்கப்பட்டது. ஆதலின் அதற்குப் பொதுப் பணியில் மக்களை ஈர்க்கும்படியான பொருத்தமானதோர் குறளைத் தேர்ந்து பதிவு செய்துள்ளனர். அப்போது ராசிபுரம் மருத்துவமனையில் சமகாலக் கட்டிடங்களில் இன்னும் வேறுபல திருக்குறட்பாக்கள் பதிக்கப்பட்டிருக்கலாம்.

இவை கொங்குநாட்டில் இதுவரை அறியவந்த திருக்குறள் தொடர்பான ஆவணங்கள்.

ஒன்று கல்வெட்டு, சிலசெப்பேடுகள், சில ஓலைச் சுவடிகள் இவை 15, 16, 17, 18, 19 ஆம் நூற்றாண்டுகளின் கொங்கு மக்களின் வாழ்க்கைப்பதிவுகள். இவற்றில் சாதிபேதம் கடந்த அனைத்து மக்களுக்கும் பொதுவான, அறம் சான்ற ஆட்சி என்னும் கோட்பாடு ஒலிக்கக் கேட்கலாம்.

நன்றி - வள்ளுவர்

## வள்ளுவர் வடக்கா?

திரு.பாம்பக் ஆசீர்

ஓய்வு ஆசிரியர், நாகர்கோவில் அவர்களின் வினா?

வள்ளுவர் வடக்கு என்பதற்கு வரலாறு உண்டு. அந்த வரலாற்றுக்கு ஆதாரங்களும் உண்டு.

அபிதான சிந்தாமணியில், திருவள்ளுவர் பறையர் குலத்தின் ஓர் உட்பிரிவான வள்ளுவர் வகுப்பைச் சார்ந்தவர் எனக் கூறப்பட்டுள்ளது.

திருவள்ளுவர் உயர்குலத்தினா எனக் கூறப்பட்டிருந்தால், அது மிகைப்படக் கூறப்பட்டதாயிருக்கும என்னும் அனுமானத்தின் அடிப்படையில், அப்படி இருக்குமா? என்னும் சந்தேகம் எழுந்திட வாய்ப்பு உண்டு. வள்ளுவர் தாழ்ந்த குலத்தைச் சேர்ந்தவர் என அறிவிக்கப்பட்டுள்ளதால் அக்கூற்றை உண்மையென எளிதாக ஏற்றுக் கொள்ள முடிகிறது.

வள்ளுவர் தாழ்த்தப்பட்ட வகுபபைச் சேர்ந்தவர் என்பதை உறுதிப்படுத்துவதாகவே நமது கவிமணி அவர்களின் பாடலும் அமைந்துள்ளது.

"நந்தனார் வந்த திருக்குலத்தை - உயர்
நாயனார் வந்த பெரும் குலத்தைத்
தீய குலம் எனச் செப்புவரேல் - இது
தெய்வம் பொறுக்கும் செயலாமோ?"

எனக் கவிமணி அவர்கள் வினா எழுப்புகிறார்.

மேல் நாட்டுத் தமிழறிஞரான ஜி.யு.போப் என்பவர், திருவள்ளுவர் பறையர் குலத்தைச் சேர்ந்தவர் எனவும், மயிலாப்பூரைப் பிறப்பிடமாகக் கொண்டவர் எனவும் உறுதிப்படக் கூறியுள்ளார்.

தமிழ்கூறும் நல்லுலகின் புலவர்களாலும், குமரிமாவட்டப் புலவர் பெருமக்களான தேசிகவிநாயகம் பிள்ளை, சதாவதானி செய்குத் தம்பி பாவலர், பன்மொழிப் புலவர் அப்பாத்துரையார் ஆகியோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டு, இலக்கிய வரலாற்றிலும் இடம் பெற்றதே வள்ளுவர் தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்தவர் என்னும் உண்மை.

கல்வியறிவு பெற்றவர்களாக, சாஸ்திரங்களைக் கற்றுத் தேர்ந்தவர்களாக இருந்த வள்ளுவ குலத்தவர்கள், புரோகிதர்களாகவும், ஜோசியர்களாகவும், அண்ணாவி என்னும் சிறப்புப் பெயரால் அழைக்கப்பட்டு உபாத்தியாயர்களாகவும் இருந்துள்ளார்கள்.

திருவள்ளுவரைச் சுட்டிக்காட்டும் அபிதான சிந்தாமணி, 'இவர் அரசர்பால் கருமத்தலைவராகவும், யானை மீதமர்ந்து முரசறைந்து, அரச ஆணை சாற்றுவோராகவும் விளங்கினார்' என விளக்கிக் கூறி வள்ளுவரை இனம் காட்டுகிறது.

வள்ளுவ குலத்தவர் கல்வியோடும், கலைகளோடும், சாஸ்திர சம்பிரதாயங்களோடும் தொடர்புடையகளாயிருந்ததால் வேதியர்களோடு அவர்களுக்கு ஈடுபாடு ஏற்பட்டிருந்தது.

## திருக்குறள் அச்சிடப்பட்ட வரலாறு

1812 இல் திருக்குறளின்மூலப்பாடம் அச்சிடப்பட்டது. இது தெய்வப்புலவர் திருவள்ளுவ நாயனாரால் இயற்றப்பட்ட ஓலைச் சுவடி. கலியுக சகாப்தம் ஆங்கில வருடம் தொண்டை மண்டலம் சென்னைப் பட்டினத்தில் தஞ்சை நகரம் மலையப்ப பிள்ளை குமாரன் ஞானப்பிரகாசனால் மாசித் தினசரி தையின் அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டது. அச்சிட்ட இந்நூல் இன்று குடந்தை கோபாலராவ் நூலகத்தில் காணப்படுகிறது.

மாவட்டத் தலைவர் பொறுப்பிலிருந்த எல்லீசு 1825ஆம் ஆண்டு சென்னையில் தமிழ்ச் சங்கம் ஏற்படுத்தி ஓலைச் சுவடிகளை அச்சிட்டு வழங்கினார். 1931இல் திருக்குறள் வெளியீடப்பெற்றது.

சார்ச் ஆரிங்டன் என்பவருடைய சமையற்காரன் கந்தப்பன் மூலம் திருக்குறள் கிடைத்தது. முதல் முதலில் வெளியிடப்பெற்ற திருக்குறளில் திருவள்ளுவமாலைப் பகுதியில் ஆதிபகவன், ஏழு குழந்தைகள் போன்ற கட்டுக்கதைகள் ஏதுமில்லை. பின்னர் விசாகப்பெருமாள், சரவணப்பெருமாள், வேதகிரியார் அச்சிட்ட பதிப்புகளில் தாம் பல புனைகதைகள் இணைக்கப்பட்டள்ளதாக அறிஞர் அயோத்தி தாச பண்டிதர் தம்நூலில் குறிப்பிடுகிறார்.

சென்னைப் பல்கலைக் கழகத்தில் உள்ள அரசினர்க் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகப் பழங்காலச் சுவடிகளோடு பல ஏடுகள் திருக்குறளைத் தாங்கியுள்ளன. அவை அழியாமல் இருக்கின்றன.

அச்சுவடியின் இறுதியில் "ஆசுகவி 1320 நிறைவேறினது. முகிந்தது முற்றும் சம்பூரணம் விளம்பி வருடம் தை மாதம் மூலநட்சத்திரம் அமைந்த சுபதினத்தில் எழுதி நிறைவேறினது" எனச் சுவடிக்கட்டில் இறுதியாக நூலக எண் டி17 என்ற எண்ணின் கீழ்க்கவனமாகப் பேணப்பட்டு வருகிறது.

இதில் பெருமான் என்றது கி.பி. 985-1012 வரை ஆண்ட முதல் இராசராசசோழனை. அவன் மேல் கடற்கரையிலுள்ள முட்டத்தைக் கைப்பற்றி அதற்குத் தன்பெயரைச் சூட்டினது மட்டுமன்றி திருநந்திக்கரையில் கோயில கொண்டுள்ள தேவர்க்குத் தான்பிறந்த நாளான ஐப்பசி மாதச் சதயநாளில் விழாக் கொண்டாடவும் ஏற்பாடு செய்தான். விழா எடுத்து செய்து,

"சதய நாள் விழா உதியர் மண்டலம்
தன்னில் வைத்தவன் தனியொர் மாவின்மேல்
உதய பானுவெத் துதகை வென்ற கோன்
ஒருகை வாரணம் பலக வர்ந்ததும்" எனக் கலிங்கத்துப் பரணியிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

திருவள்ளுவரின் வாழ்க்கையினை அவர் அருளிச் செய்த திருக்குறளினின்று உய்த்துணர முடிகின்றதேயன்றி, வரலாற்று முறையால் அறிந்து மகிழும் வாய்ப்புக் கிட்டாதது தமிழராகிய நமக்குப் பேரிழப்பே. வரலாற்று வழி அறிய முடியாத அளவிற்குப் பழமை வாய்ந்தவர் அவர். அன்னார் வாழ்ந்த காலத்தை இன்றைக்கு ஏழாயிரத்து ஐந்நூறு ஆண்டுக்கு முற்பட்டது என்று பழமை பாராட்டுவாரும், கி.பி. 800 என்று எல்லை வகுப்பாரும் உளர்.

குருகுலம் அழகரடிகள், குறள் இன்றைக்கு ஏழாயிரத்தைந்நூறு ஆண்டுக்கு முற்பட்டது என்பார்.

வி.ஆர். ஆர். தீட்சிதர், கி.மு முதல் மூன்று நூற்றாண்டுகட்கு உட்பட்டதாகலாம் என்பார்.

வேறு தக்க சான்றுகள் கிடைக்கும் வரையிலும் திருவள்ளுவர் காலம் ஏறத்தாழக் கி.மு.முதல் கி.பி. 300க்கு உட்பட்டது என்று கோடலே, அமைவுடையதாகும் என்பார் முனைவர் மா.இராசமாணிக்கனார்.

கி.பி. 1921இல் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் நிறைதமிழாய்ந்த மறைமலையடிகளார் தலைமையில் தமிழ்த்தென்றல் திரு.வி.க., தமிழ்மொழிக் காவலர் தமிழ்க் காசு எனும் கா.சுப்பிரமணியனார், சிவநெறிச் செம்மல் சச்சிதாநந்தம், பேரா. கா. நமசிவாயர், நாவலர் வேங்கட சாமியார், நற்றமிழ் நாவலர் சோமசுந்தர பாரதியார், முத்தமிழ்க் காவலர், கி.ஆ.பெ.விசுவநாதனார் போலும் புலவர் பெருமக்கள் ஐந்நூற்றுவர் கூடி திருவள்ளுவராண்டைப் பின்பற்றுவதென முடிவு செய்தனர். அதன்படி திருவள்ளுவராண்டுத் தொடக்கம் கி.மு.31 என்றும் சுறவத்திங்கள் (தை மாதம்) ஆண்டுத் தொடக்கம் என்றும் ஏற்றனர்.

அதனை நடைமுறைப்படுத்தாததால் மறைமலையடிகள் திருவள்ளுவர் திருநாள் கழகம் என்ற அமைப்பை உருவாக்கி மீண்டும் மறைமலை அடிகள் தலைமையில் தமிழறிஞர்கள் கூட்டத்தில் திருவள்ளுவர் கிறிஸ்து பிறப்பதற்கு 30 ஆண்டுகளுக்கு முன் கி.மு 31இல் பிறந்தார் என்பது எனது ஆய்வின் முடிவு. இதனை நடைமுறைப்படுத்த வேண்டும் என்றார். இதனைத் தமிழர்களும் ஏற்று அதன்பிறகே திருவள்ளுவர் பிறந்த தினமாக கி.மு 31 என்று நடைமுறைப்படுத்த ஒப்புக் கொண்டு இன்றுவரை பின்பற்றப்பட்டு வருகின்றது.

இதனை 1970இல் கலைஞர் ஆட்சியின்போது தமிழக அரசு அரசாணையாக வெளியிட்டது.

குறள் தொல்காப்பியத்திற்குப் பின் தோன்றியது. தொல்காப்பிய இலக்கணக் கூறுகள் பெரும்பாலானவற்றைக் குறள்

கொண்டுள்ளது. இரட்டைக் காப்பியங்கட்கு முன் தோன்றியது குறள். குறளின் அடிகளை இரட்டைக் காப்பியங்கள் எடுத்தாண்டுள்ளன.

## வள்ளுவரின் சமயம்

திருவள்ளுவரைச் சைவ சமயத்தினர் சைவரென்றும், வைணவர்கள் ஆழ்வார்களில் ஒருவரென்றும், கூறுவர். பார்ப்பனர்கள் அவனுக்கு முப்புரி நூலை அணிந்து மகிழ்ந்தனர். சமணர்கள் அவனையொரு முற்றுந்துறந்த முனிபுங்கவனாகத் தீட்டிக் காட்டியுள்ளனர்; கிறித்தவர்கள் 1966இல் தம் மதத்திற்குட்படுத்த முயன்றனர். இப்பொழுது பல இதழ்கள் வெளிவந்தவண்ணமுள. ஒவ்வொருவரும் தத்தம் சமயமாகிய குறுகிய எல்லைக்கோட்டிற்குள் அடைத்துவிட இடைவிடாது முயலுகின்றனர். திருவள்ளுவனைக் காணவேண்டுமெனில் அவன் தந்த திருக்குறளைப் படியுங்கள் என்றார். செ.சதாசிவம்.

## திருவள்ளுவரின் திருஉருவம் பொறித்த தங்க நாணயம்

கிழக்கிந்தியக் கம்பெனி ஆட்சியின் போது சென்னை மாகாணத்தின் ஆட்சியாளராக (கவர்னராக) பதவி வகித்த ஆங்கிலேய அதிகாரி ஃபிரான்சிஸ் லைட் எல்லீஸ் துரை. ஆட்சியாளர் பதவியுடன் சென்னை மாகாணக் கருவூலத் தலைமை அதிகாரியாகவும், சென்னையிலிருந்த நாணயச்சாலையின் மேற்பார்வையாளராகவும் செயல்பட்டு வந்தார்.

எல்லீஸ்துரை தமிழ்மொழி மீது கொண்டிருந்த அவா காரணமாய்த் திருக்குறளின் அரிய அமைப்புப் பற்றித் தெரிந்து அதனை முற்றிலும் கற்று உணர்ந்து அதன் அருமை பெருமைகளை அறிந்து அதற்கு ஆங்கிலத்திலும் ஓர் உரை நூலும் எழுதினார் என்பது கல்வெட்டுச் சான்றுகள் மூலம் தெரிய வருகிறது. எல்லீஸ் துரை தமது அரசுப் பணியில் கிடைத்த வாய்ப்பைப் பயன்படுத்தி நாம் மிகுந்த

ஈடுபாடு கொண்டிருந்த திருக்குறளை இயற்றிய திருவள்ளுவர் பெருமானின் திருவுருவத்தைக் கும்பினி அரசின் பெரிய தங்க நாணயமான இரட்டை வராகனில் பதிப்பிக்க ஏற்பாடுகள் செய்தார் என்பது நம்ப இடமிருக்கிறது.

திருவள்ளுவப் பெருமானின் திரு உருவம் பொறித்த ஒரு தங்க நாணயம் ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் கம்பெனி அரசால் சென்னையிலிருந்து வெளியிடப்பட்டது என்பது இதுவரை யாருக்கும் தெரிந்திராத ஒரு வியப்பான செய்தியாகும். கொல்கத்தாவில் உள்ள இந்திய அருங்காட்சியகத்தில் சேகரித்து வைக்கப்பட்டுள்ள இந்திய நாணயங்களின் பட்டியலின் முதன் தொகுப்பு 1906 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. இதில்தான் மேற்சொன்ன நாணயத்தைப் பற்றிய ஒரு சிறு குறிப்புக் காணப்படுகிறது.

இரட்டை வராகன் என்று அழைக்கப்பட்ட ஒரு தங்க நாணயம் சென்னை அரசால் 1819 ஆம் ஆண்டுக்கு முன்னர் வெளியிடப்பட்டது என்றும் இது புத்தம் புதிதாகக் காணப்படுவதால் அச்சடிக்கப்பட்டுப் புழக்கத்தில் வெளியிடப்படாத தங்க நாணயங்களில் பட்டியலில் இந்த நாணயமும் சேர்க்கப்பட்டுள்ளதாக 1990 ஆம் ஆண்டு கொல்கொத்தா பல்கலைக் கழக வரலாற்றுப் பேராசிரியர் பி.என்.முகர்ஜி விரிவாக தமது நூலில் எழுதியுள்ளார். இந்த நாணயத்தின் முன்புறம், அமர்ந்த நிலையில் காணப்படும் திருவுருவம் ஒரு முனிவராகவோ அல்லது தெய்வமாகவோ இருக்கலாம் என்று முகர்ஜி கருத்துத் தெரிவித்துள்ளார்.

### இந்த நாணயத்தைப் பற்றிய விரிவான விவரம்

| | |
|---|---|
| நாணயத்தின் உலோகம் | - தங்கம் (85.23) சதம் தூய்மையானது |
| பெயர் | - இரட்டை வராகன் (Double Pagoda) |
| எடை | - 6.9 கிராம் |

குறுக்களவு - 2.2 செ.மீ

வடிவம் - வட்டம்

முன்புறம் அமர்ந்த நிலையில் ஒரு முனிவரின் திருவுருவம் பீடத்தின் மீது பத்மாசனமிட்டு தியான நிலையில் அமர்ந்திருக்கிறது. வலக்கை வலது தொடை மீதும், இடக்கை சின்முத்திரை நிலையிலும் உள்ளன. இடையில் தோளில் மடித்துப் போட்ட துண்டும் அணிந்திருக்கிறது. மழித்த தலை, அவருக்கு முன்ஒரு சிக்குப் பலகையில் விரிந்த நிலையில் ஒரு புத்தகம் வைக்கப்பட்டுள்ளது. பின்புறம் ஐந்து முறை நட்சத்திரப் புள்ளிகளாலான வட்டத்துக்குள் பொறிக்கப்பட்டுள்ளது.

எம்.இ.முகமது அலி
நாணய சேகரிப்பாளர்,
தொல்லியல் ஆர்வலர், சேரன்மாதேவி

## திருக்குறளாசிரியரின் திருவடிகள் உள்ள பொன்னூர் மலை

தமிழ்ச் சமணர்கள் காலங்காலமாய்த் திருக்குறள் ஆசிரியர் என்று போற்றிவருவது குந்த குந்தரையே. குந்தகுந்தருக்குத் தேவர், ஏலாச்சாரியார், கிருந்தபிங்சர், உமாசுவாமி, வக்ரக்ரீவர் என்ற வேறு பல காரணப் பெயர்களும் உண்டு, இவர் கி.பி. முதல் நூற்றாண்டில் வாழ்ந்த சமண திகம்பரத் துறவி. திகம்பரத் துறவிகளின் வாக்கிய மூலசங்கம், நந்தி சங்கம், சேனசங்கம், வீசங்கம், தேவசங்கம் என நான்காகப் பிரிந்து தென்னிந்தியாவில் தங்கள் ஆன்ம சாதனையோடு தமிழில் நூல்கள் பல இயற்றி சமுதாய நல்வாழ்விற்கு வழிகாட்டியுள்ளனர்.

நந்தி சங்கம் தென் பாடலிபுத்திரமாகிய திருப்பாதிரிப் புலியூரைத் (இன்றைய கடலூர்) தலைமை இடமாகக் கொண்டு

விளங்கியது. அந்தச் சங்கத்தின் குரு பீடத்தில் குந்த குந்தர் இருந்துள்ளார். (கி.பி. 100 முதல் 52 ஆண்டுகள்)

## பொன்னூர் மலையில் உள்ள குந்த குந்தாச்சாரியார் திருப்பாதம்

சில காலம் மைலாப்பூரிலும் (சென்னை) தங்கி இருந்ததற்கான சான்றுகள் கிடைக்கின்றன. இவர் தமது இறுதிக் காலத்தில் பொன்னூர் மலையில் தங்கி தவமியற்றியுள்ளார்.

இவர் பிராகிருதம், வடமொழி இரண்டிலும் 84 நூல்கள் யாத்துள்ளார். தமிழில் திருக்குறள் ஒன்றே இன்று கிடைப்பது. சில பிராகிருத நூல்களுள் உரையும் எழுதியுள்ளார்.

இவர் பொன்னூர் மலையில் தங்கித் தவமியற்றினார் என்பதற்குச் சான்றுகள் உண்டு.

"தக்ஷிண தேசே மலையே! ஹேமக்ராமே
முதிர் மஹாத்மாஸீத்!
ஹேலா சார்யோ நாம்தா திராவிட
கணாதீஸ்வரோ தீமாந்" (மந்த்ரலட்சணம்)

# பொன்னூர் மலை



பொன்னூர் கிராமத்தில் உள்ள ஜினாலயத்தில் உள்ள திருக்குறள் ஆசிரியர் ஸ்ரீகுந்த குந்தாசாரியர் திருமேனி.



பொன்னூர் மலையில் திருவள்ளுவர் திருப்பாதங்கள்



பொன்னூர் ஜினாலயத்திலுள்ள குந்தகுந்தர் மணி மண்டபம்

"பொதிய மலையை எல்லையாக உடைய தென் தேசத்தில் பொன்னூர் கிராமத்தில் (ஹேமம் - பொன்) திராவிட நிர்க்கந்த மகாமுனிவர் சங்கத்தின் கணதாபதத்தைப் பெற்றவராயும் மகா மேதாவியாயும், மகாத்மாவாயும் உள்ள, பெயரினால் ஏலச்சாரியார் என்கிற நிர்க்கந்த மகா முனீஸ்வரர் இருந்தார்" என்று கூறப்படுகிறது.

பொன்னூர் மலை வந்தவாசியிலிருந்து சேத்துப்பட்டு செல்லும் சாலையில் 8-வது கி.மீட்டரில் உள்ள ஒரு சிறு குன்று. மலை உச்சியில் குந்த குந்தாச்சிரியரின் பழைமை வாய்ந்த, கல்லில் செதுக்கப்பட்ட திருவடிகள் வழிபாட்டிற்காக உள்ளன. தமிழ்ச்சமணர்கள் மட்டுமன்றி கடந்த சில ஆண்டுகட்கு முன்புவரை பிற சமயத்தினரும் வழிபட்டு வந்தது குறிப்பிடத்தக்கது. இது மேலும் தென்னிந்திய சமணத் திருத்தலமாக விளங்கி வருகிறது.

ஆண்டுதோறும் வட இந்தியாவில் இருந்து சமணர்கள் இங்கு வந்து வழிபாடு செய்து செல்வதை இன்றும் காணலாம்.

குந்த குந்தரின் திருக்குறள் போன்றே அவரது நூல்களில் சமயசாரம், பிரவசனசாரம், பங்காஸ்தி காயம், அஷ்டபாகுடம் முதலான அரிய நூல்கள் இன்று அனைத்துச் சமணர்களாலும் போற்றப்பட்டு ஒப்பற்ற புகழுக்கு உரியதாக விளங்குகிறது.

குந்த குந்தர் தமிழில் அறம், பொருள், இன்பம், வீடு எனும் நான்கு உறுதிப் பொருள்களை மக்கள் அனைவரும் அறிந்து ஒழுக திருக்குறளை இயற்றினார். அவரது சீடர்களில் திருவள்ளுவ நயினார் என்பவர் குறளின் பொருளை நுட்பமாக அறிந்துள்ளமை அறிந்து அவரிடமே நூலைக் கொடுத்து பாண்டியன் அவையில் இருந்து தமிழ்ச்சங்கத்தினில் அரங்கேற்ற அனுப்பினார். திருவள்ளுவ நயினாரும் அவ்வாறே திருக்குறளைத் தமிழ்ச் சங்கத்தில் அரங்கேற்றினார் என்பது சமண வரலாறு.

சமண ஆச்சாரியர்கள் எந்த நூலை எழுனாலும் அதைத் தாங்கள் இயற்றியதாகக் குறிப்பிடுவதில்லை. காரணம் 'எல்லாமே வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவனாகிய இறைவன் உரைத்த அறத்துள் அடங்கியவனே ' என்பதாலுமே. இந்த மரபு இன்றளவும் காக்கப்பட்டு வருகின்றது. அரங்கேற்றச் சென்ற திருவள்ளுவ நயினார்தான் நூலாசிரியராகவும், திருவள்ளு வராகவும் மாறிய பல புனைகதைகளுக்குக் காரணமாயினார்.

'அறம்பொருள் இன்பம் வீடென்னும் நான்கின்
திறம்தெரிந்து செப்பியது தேவை - மறந்தேயும்'
வள்ளுவன் என்பானோர் பேதை யவன்வாய்ச்சொல்
கொள்ளார் அறிவுடை யார்'

இப்பாடல் 'திருவள்ளுவமாலை' - யில் மாமூலானார் பாடியதாக உள்ளது. அன்றே திருக்குறள் ஆசிரியரைப் பற்றிய குழப்பம் தோன்றியுள்ளதை உணரலாம்.

'குறளாசிரியராகிய தேவரை வள்ளுவன் என்பவன் பேதை' - என்று தெளிவாக இவ்வெண்பா கூறுகிறது.

நீலகேசி என்னும் சமண நூலின் உரையாசிரியரான சமய நிவாகர வாமன முனிவர் தமது உரையில் சில இடங்களில் திருக்குறளை மேற்கோளாகக் காட்டும் போதெல்லாம் குறளை எம்மோத்து (எம்மறை) என்றே கூறியிருப்பதைக் காணலாம்.

இதே போன்று சீவக சிந்தாமணியின் உரை ஆசிரியர் நச்சினார்க்கினியர், சில இடங்களில் திருக்குறளைக் காட்டும் போது 'தேவர்குறள்' என்று கூறியிருப்பதைக் காணலாம். குறளாசிரியருக்குத் தேவர் என்ற பெயரே இருந்துள்ளது.

பின்னாளில் சமயக் காழ்ப்பில் அவரே வள்ளுவரானார் என்று உணர முடிகிறது. சிந்தாமணி ஆசிரியர் திருத்தக்கத் தேவர் சூளாமணி ஆசிரியர் தோலாமொழித் தேவர் போன்று உயர்ந்த நிலையில் இருந்த சமணத் துறவிகளை அவர்கள் பெயருடன் 'தேவர்' எனச் சேர்த்து வழங்கியுள்ளமையைக் காண முடிகிறது.

எது எவ்வாறாயினும் அவர் ஒரு குறிப்பிட்ட சமயத்தினர்க்கு என்று, தம் நூல் இயற்றவில்லை. மன்பதை அனைத்திற்கும் 'யாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம்' என்ற நோக்கிலேயே யாத்துள்ளார்.

ஒருகால் அவர் நம் சமயத்தை வெளிப்படையாகக் காட்டியிருப்பாராயின் அது இன்று உலகப் பொதுமறையாகப் பின்பற்றப்பட்டிருக்காது. அது மட்டுமன்றி நூலே கிடைத்திருக்காது.

குந்த குந்தரின் திருவடிகள் விளங்கும் பொன்னூர் மலையின் இன்று அவரது அரும்புகழைப் பரப்பும் வகையில் அரும்பணிகள் நடைபெற்று வருகின்றன. ஜைனம் ஒரு சமயமல்ல. வாழ்வு நெறி.

"திருவண்ணாமலை வந்தவாசியில் 24 திகம்பரர்க்குப் பின் தோன்றிய குந்த குந்தாச்சாரியார் என்ற திகம்பரர் மறைவுக்குப் பின் பொன்னூர் மலையில் அவரது திருப்பாதங்களைக் கல்லில் வடித்து இன்றும் வழிபடுகின்றனர். இவரை திருவள்ளுவர் என வந்தவாசி மக்கள் கருதுகின்றனர் (குந்த குந்தாச்சாரியார் சிறிது காலம் மயிலாப்பூரில் வாழ்ந்ததாக வரலாறு உள்ளது).

கனகசபை அவர்கள் எழுதி பன்மொழிப்புலவர் கா.அப்பாத்துரையார் தமிழாக்கம் செய்த 1800 ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம் எனும் நூலில் "வள்ளுவர் மயிலாப்பூரில் வாழ்ந்து மறைந்தார்" என்று எழுதப்பட்டுள்ளது.

1800 ஆண்டுகளுக்கு முன்பே நாஞ்சில் நாடும் அதன் தென்பகுதியாகிய குமரியும் தமிழ் கூறும் நல்லுலகத்தின் ஒரு பகுதியாக இருந்தது எனத் தொல்காப்பியப்பாயிரத்தில்,

"வடவேங்கடம் தென்குமரி
ஆயிடைத்
தமிழ்கூறும் நல்லுலகத்து" என வருவதைக் கொண்டு தெளியலாம். பாண்டியனுக்குரியதாகக் 'குமரிச்சேர்ப்பன்' என்று ஒருபெயர் திவாகரத்தில் காணப்படுகிறது. இப்பெயரால், இந்நாடு தொன்று தொட்டுப் பாண்டியனுக்குரியதாயிருந்தமை புலனாகும். பல்யாகசாலைமுதுகுடுமிப் பெருவழுதியைக் குறித்த அச்சமும் புகழும் தெக்கின்கண் உள்ள கன்னியாகுமரிக்குத் தெற்கும் பரவுகவென அப்பாண்டியனைக் காரிகிழார் என்ற புலவர்,

"வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்
தெனாஅது உருகெழு குமரியின் தெற்கும்" (புறம் 6)

எனப்பாடுகிறார். பாண்டியனுக்கு உரியதாகவே குமரியை அடுத்துள்ள பஃறுளியாறும் கூறப்பட்டுள்ளது. (புறம் 9)

"செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க்கு ஈந்த
முந்நீர் விழவின் நெடியோன
நன்னீர் பஃறுளி மணலினும பலவே" என நெட்டிமையார் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடும் போது குறிப்பிடுகிறார்.

பன்முறை குமரியைச் சார்ந்த நாட்டைச் சேரர்கள் வென்று அடிமைப்படுத்தினர் என்பதைப் பதிற்றுப்பத்து,

"வடதிசை யெல்லை இமைய மாகத்
தென்னங் குமரியொடு ஆயிடை அரசன்
முரசுடைப் பெருஞ்சமந் ததைய ஆர்ப்பெழச்
சொல்பல நாட்டைத் தொல்கவின் அழித்த
போரடு தானைப் பொலர்ந்தார்க் குட்டுவ" என வரும் அடிகள் குமரியைச் சார்ந்த நாட்டைச் சேரர்கள் வென்று அடிமைப்படுத்தினர் என்பதைத் தெளிவாகக் காட்டுகிறது.

'*திருவள்ளுவர் அருளிய திருக்குறள் மூன்றாம் தமிழ்ச்சங்க* நூல். இரண்டாம் தமிழ்ச்சங்கம் கொல்லர் குடியிருப்பாகிய "கொற்கை" என்ற கபாடபுரத்தில் அமைந்தது. கபாடம் என்பது கதவைக் குறிக்கும். தமிழ்நாட்டின் தலைவாயில் எனப்போற்றப்பட்டது, கலிங்கத்துப்பரணியில் செயங்கொண்டார் "கடை திறப்பு" என்னும் பகுதியில் "கபாடம் திறமினோ" என்று கூறுவது கருதத்தக்கது. மூன்று தமிழ்ச்சங்கங்கள் பற்றிய குறிப்பு நக்கீரர் நல்கிய இறையனார் களவியலுரை வாயிலாகவும் அடியார்க்கு நல்லார் வரைந்த சிலப்பதிகார உரை வழியாகவும் தெளிவாகிறது.

சித்தாந்த வித்தக, ஆய்வாளர். 'நா. விவேகானந்தன் தமது ஆய்வு நூலில் 'வழிபடப்படுபவர்களே யோகி திருவள்ளுவ

நாயனாரும் திருவள்ளுவ சித்தரும் ஆவர்'. ஆனால் திருக்குறள் எழுதிய நீதிமான் திருவள்ளுவருக்குக் கோயில் கிடையாது. இனி திருவள்ளுவர் எனப்பெயர் பெற்ற மூவர் எழுதிய நூல்களைக் குறிப்பிடுகிறார்.

1. திருவள்ளுவர் - திருக்குறள

2. யோகி திருவள்ளுவநாயனார் - 1.ஞானவெட்டியான் 1500,

2. நவரத்தினவைத்திய சிந்தாமணி - 800, 3. பங்வரத்தினம், நாதாந்தத் திறவுகோல் - 100, 5.ஏணி ஏற்றம்.

3. சித்தர் திருவள்ளுவர் எழுதிய நூல்கள்-1. கவுனமணி 100, 2. கற்பகம்-300, 3.முப்புக்குரு-11, 4 வாதசூத்திரம்-16, 5.மூப்பு 30, 6.திருவள்ளுவஞானம் 7.குருநூல்-51, 8.சூத்திரம்-108.

பதினெண் சித்தர்களில் ஒருவராகக் கருதப்படும் திருவள்ளுவர் ஒரு சித்தர். 'ஞானவெட்டியான் எழுதிய திருவள்ளுவ நாயனார் ஒரு யோகி. இவர்களில் ஒருவருக்கு எழுப்பப்பட்டதே மயிலாப்பூர் முதலிய இடங்களில் அமைந்திருக்கும் கோவில்கள். மயிலாப்பூரில் இருக்கும் திருவள்ளுவநாயனார் கோயில் கி.பி.12-ம் நூற்றாண்டுக்குப் பின்னர் தோன்றியதாகவே தெரிகிறது" என்கிறார்.



திருமயிலையில் திருவள்ளுவர் கோயில் (கள ஆய்வு)

# GAZETTEERS OF INDIA TAMIL NADU STATE, K.K.DISTRICT

**Editor. M.Gopala Krishnan, B.Com., 1995**

**Thiruvalluvar :**

It is said that Thiruvalluvar, the author of Thirukkural which is regarded as the Bible of the Tamils, was born in Thirunayanarkurichi, near Muttam is Kanyakumari District. P.830.

**Ref** : Padmanabhan S. contribution of Kanyakumari district to Tamil World, Nagercoil, 1982. P.8.

This theory is ascribed on the basis of many edvidences, most of them are circumstantial including that the existence of names like Valluvanau and the corruption of Valluvankodu into Vilavankodu and the mention of Thiruvalluvar as the pivot of Punal koodal in Thiruvalluvamalai etc. (P.830)

But it should also be remembered here that the publishers of the Parimelazhkar commentary on Thirukural (1953) has said that the question of who Valluvar was, which sect he belonged to, which period he lived, what his birth place was and which religion he followed are not answered authentically. There is also a view that the birth place of Valluvar was Mylapore in Madras. Hence, this is a subject which needs further research. (P.830)

"There is also a belief that the birth place of Thiruvalluvar called Thirunayanar Kurichi and the death place of Avvayar near Thazhakudi are found in this district, Nanjil Nadu was once ruled by Nanjil Valluvan, Whomes names has been mentioned in Purananuru and to whom might have been related to Thiruvalluvar and the present Vilavan code, might have been derived from Valluvan kotu. (P.173)

Atikanur, a village located at the foot of the Nanjil Hill came to be called as Azhakiapandiapuram. (58)

He is described as Nanjil Valluvan by a commentator or 'Purananuru' while his original name was kandan. The term 'Porunan' stands for king, But as, it appears it in the family name of the chieftain. (P.57)

மேற்கூறப்பட்ட கன்னியாகுமரி விவரச்சுவடி (Kanyakumari Gazetteer)யில் அதன் ஆசிரியர் திரு எம்.கோபாலகிருஷ்ணன் அவர்களை அணுகி தவறான தனது கற்பனைக் கதையை வரலாறாக மாற்றி 1955-இலே இடச் செய்து சில காலங்கள் கழித்து தனது ஆய்வுக்களஞ்சியத்தில் பலமுறை பல இதழ்களில் 'கன்னியாகுமரி விவரச் சுவடியில் திருவள்ளுவர் திருநாயனார் குறிச்சியில் பிறந்தார் என இடப்பட்டுள்ளது' என இதழ்களில் அச்சிட்டு ஆவணப்படுத்தியுள்ளார்.

# சான்றோர் கூற்று

திருக்குறள் ஆக்கத்தில் மிகச்சிறந்தது. கிறிஸ்துவ சகாப்தத்தின் ஆரம்பகாலங்களில் செய்யப்பட்டிருக்க வேண்டும் என்று திரு. கே.ஏ.நீலகண்ட சாஸ்த்திரியவர்கள் கூறுகிறார்.

திருவள்ளுவர் மாபெரும் ஞானி. ஒப்புயர்வற்ற தீர்க்கத்தரிசி, தெய்வப்புலவர், திருவள்ளுவர் என்ற தமிழ்ப்புலவரால் திருக்குறள் எழுதப்பட்டது என்பதுதான் உண்மை.

கரைவழி நாட்டு உலகுடைய பிராட்டி சதுர்வேதி மங்கலத்து நிலத்தை, பாண்டி மண்டலத்துக்கீழ் இரணியமுட்ட நாட்டுக்குத் திருமாலிருஞ் சோலை அழகர்கோயில் ஆழ்வார் பதின்மர்க்கு வழிபாடு நடத்துதற்காகத் தானம் செய்ததாகக் குமாரலிங்கம் கல்வெட்டு கூறுகிறது. இரணிய முட்டம் என்பது பெருங் கௌசிகனார் என்னும் சங்கப் புலவரால் பாடப்பட்டதே. பத்துப்பாட்டில் ஒன்றான மலைபடுகடாம்

குமாரலிங்கம் விசுவநாதர் கோயிலில் அதிராசராசன் திருமடவளாகத்தில் ஒருமடமும் கெழுமமும் ருத்திராட்டீசுர முடையார் கோவிலுக்கு அருகே திருநீறிட்டான், திருமடம் என ஒருமடமும் உள்ளது.

**புலவர் குழந்தை 'கொங்குச் சோழர்'**

மேலும், G.U.போப் அவர்கள் திருவள்ளுவரைக் குறித்து, வள்ளுவர் ஒருபுலவர், சிந்தனையாளர், நூலாசிரியர், விவிலியத்தில் கையாளப்பட்டுள்ளன. ஆனால் ஒரு குறளில் ஒரு பொருளில் வந்த சொல் வேறு குறட்பாக்களில் அதே பொருளில் கையாளப்படவில்லை என்கிறார். வள்ளுவரை உலகமகா கவி என்கிறார். மேலும், "திருவள்ளுவரை பாராட்டத்தகுந்த தமிழ்ப்புலவர்" என்றும் திருக்குறள் தமிழின் அறநூல் என்றும் அவர் தெய்வப்புலவர், பொய்யாமொழிப் புலவர் என்றும், அவரது காலம் கி.மு.200 முதல் கி.பி. 10 வரை என்றும் அவர் பறையர் என்றும் அவ்வினத்தவரில்

குரு என்றும் ஔவையார் போன்ற பெரிய எழுத்தாளர் என்றும் வள்ளுவன் என்பது பொதுப் பெயர் என்றம் பின் அதுவே அவரது குலப்பெயராயிற்று என்றும் கிறிஸ்துவிற்கு 25 ஆண்டுகளுக்கு முற்பட்டவர் என்றும் அவரது பிறப்பிடம் பற்றிய கதைகளில் மதுரையில் பிறந்தார் என்றும், மயிலையில் பிறந்தார் என்றும், அவர் இயற்றிய திருக்குறள் பாண்டியன் அவைகளில் அரங்கேற்றப்பட்டது என்றும் அவரது மனைவி வாசுகி என்றும் கூறப்படுகிறது" என்கிறார்.

(from Wikipedia, The Free Encyclopedia)

யானை மீது முரசறைந்து அரசன் ஆணையை ஊரார்க்கு அறிவிக்கும் முதுகுடிபபிறந்தோனை

"இருபாற் பெயரிய உருகெழுமூதூர்
ஒரு நூறு வேள்வி உரவோன் தனக்குப்
பெருவிழா அறைந்ததும்"

- என மணிமேகலை பகர்கிறது.

திருவிதாங்கூர் நாடு உருவாகக் காரணமான திருவிதாங்கோடு வள்ளுவ நாட்டிலேயே இருக்கிறது. திருவள்ளுவர் குமரி மாவட்டத்தில் பிறந்தவரோ. ஆம், உக்கிரப் பெருவழுதியின் ஆட்சிக்குட்பட்ட நிலப்பகுதி. நக்கீரன் உட்பட 49 புலவர்கள் முன்னிலையில் திருவள்ளுவர் திருக்குறளை அரங்கேற்றினார்.

**- உ.வே.சா.**

அறிஞர் சிலர் இப்பெருமானாரை குறுநில மன்னர் என்று கூறுகின்றனர். மேலும் சிலர் முனிவர் என்றும் நெசவுத் தொழிலாளி என்றும் கூறுகின்றனர். இக்கூற்றுகளில் திருவள்ளுவர் மன்னர் என்பதை மட்டும் உறுதியாக மறுக்கலாம்." - இவ்வாறு குமரி மாவட்டத்தைச் சார்ந்த தமது திருவள்ளுவர் நூலில் குறிப்பிடுகிறார். பண்டித ரத்னா என். ஏ. வேலாயுதம்

திருவிதாங்கூர் மன்னர் தலைமையில் திருவனந்தபுரத்தில் அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் அவர்களது உதவியால் தமிழ்நாடு காவல்துறை முன்னாள் டி.ஐ.ஜி. திரு. டயஸ் அவர்களின் திருக்குறளின் ஆங்கில மொழிபெயர்ப்பு சூன். 14,2001ல் வியாழன் மாலை 5.00 மணிக்கு கார்த்திகைத் திருநாள் அரங்கத்தில் வெளியிட்டபோது, **அருட்செல்வர் டாக்டர். நா. மகாலிங்கம் அவர்கள் தமது உரையில் "திருவள்ளுவர் சேரநாட்டில் பிறந்து பாண்டிய நாட்டுப் பேரரசில் தலைமைச் செயலாளராக இருந்தவர் என்பதற்கான சான்றுகள் உள்ளன. உட்படு கருமத்தலைவர் என்றும் அழைக்கப்பட்டார்.** சங்க இலக்கியம் இதனைச் சான்றுடன் நிறுவி உள்ளது' என்றார்.

**- அருட்செல்வர் நா.மகாலிங்கனார்**

1-1-2000 அன்று கன்னியாகுமரியில் திருவள்ளுவர் உருவச் சிலையை நிறுவிய போது அங்கு , தமிழக முதல்வர் டாக்டர். கலைஞர் தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் குமரிமாவட்டத்திலுள்ள கன்னியாகுமரி வரலாற்றுப் பண்பாட்டு ஆய்வு மையத் தலைவர் முனைவர் தே. வேலப்பன் அவர்கள் தமது உரையில் "1958 ஆம் ஆண்டிலேயே கோவை ஆய்வாளர்.திரு. **ஆர். கிருஷ்ணசாமி அவர்கள் தமது 'திருவள்ளுவர் காவியம்' எனும் நூலில் உலகப்புகழ் திருவள்ளுவர் சேர நாட்டில் நாஞ்சில் மலையிலுள்ள வள்ளுவ நாட்டில் 1958 ஆண்டுகளுக்கு முன் வைகாசித் திங்கள் விசாகம் மதி நிறைந்த நன்னாளில் பிறந்தவர்** என்று மிகத் தெளிவாகத் தெரிவித்துச் சென்றுள்ளார்" என்றார்.

**- கோவை ஆய்வாளர் திரு.ஆர்.கிருஷ்ணசாமி**

"உலக வழக்கில் வள்ளுவன் என்பது பறையர்களுக்குக் குருவாய்ச் சோதிடமே சீவனமாக இருக்கும் வள்ளுவச் சாதியில் பிறந்தவனையே குறிக்கிறது" எனச் செல்வகேசவராய முதலியார் கூறுகிறார்.

"சங்க காலத்து விளங்கிய பெருமக்களுள் பழமை வாய்ந்தவர் இவர். கடைச் சங்கக் காலத்தவர். பலருக்கு முன் தோன்றியவர். தெய்வப் புலவர் என்றே தோன்றுகிறது".

- மு.இராகவையங்கார்

திருவள்ளுவர்மாலையில்

"நான்முகத்தோன் தான் மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த - நூன்முறையை என வள்ளுவனாரை நான்முகன் அம்சம்" என்று உக்கிரப் பெருவழுதியார் கூறுகிறார்.

"பிரம்மதேவனது திரிவர்க்க நூலைச் சுருக்கி முப்பால் என்ற பெயரால் தம் நூலை எழுதினார்" - இது புராணச்செய்தி. "வள்ளுவன் என்ற தாழ்ந்த குடியில் பிறந்து அரசாணையை முரசறைந்து அறிவிப்பவன் என்று பழைய நூல்கள் கூறுகின்றன."

"சோதிட நூல் வல்லவர், நிமித்தகர்" எனச் சீவக சிந்தாமணி (பாடல் 419) கூறுகின்றது.

அரசர்க்குக் கருமத் தலைவராயிருந்து "சாக்கை" எனும் பெயருடன் இருந்தார் எனத் திவாகர நிகண்டு கீழ்க்கண்டவாறு கூறுகிறது.

"வள்ளுவன் சாக்கை எனும் பெயர் மன்னர்க்கு
உட்படு கருமத் தலைவர்க் கென்றும்" எனும் சூத்திரத்தால் அறியலாம்.

வல்லபர் என்ற வடமொழி, வள்ளுவர் எனத் திரிந்து வழங்கலாயிற்று எனப் புதுக்கோட்டைச் சித்தன்ன வாசல் மலைக் குகைச் சாசனத்தில் பாண்டியன் அவனிச் சேகரன் 9-ஆம் நூற்றாண்டில் ஆண்ட சிறீமாறன், சிறீவல்லபநாபன். இச்சாசனம் அமைத்தவர் மதுரை ஆசிரியன் இளங்கௌதமன் என்ற புலவர் அதனில் இப்பாண்டியன் "சீரி வல்லுநன்" எனக் குறிக்கப்பட்டுள்ளது.

சூடாமணி நிகண்டு,

"வருநிமித்தகன் பேர் சாக்கை வள்ளுவன்

என்னுமாம்" என்கிறது.

"திருவள்ளுவர் மாபெரும் ஞானி. ஒப்புயர்வற்ற தீர்க்கத்தரிசி, தெய்வப் புலவர், திருவள்ளுவர் என்ற தமிழ்ப்புலவரால் திருக்குறள் எழுதப்பட்டது என்பதுதான் உண்மை".

**- முனைவர் எம்.முருகேச பாண்டியன்**

"வள்ளுவர் யார்? எந்தக் குலத்தைச் சார்ந்தவர் என்பதை நிச்சயமாகக் கூறமுடியாது"

**- ஈ.வெ.ரா. பெரியார்.**

"செந்தமிழ்ப் பாண்டி நாட்டில், பீடுகெழுமானா மதுரையில் தாளாண்மை மிக்க வேளாண்குடியில் தோன்றி பாண்டியப் பேரரசரின் உட்படு கருமத் தலைவராகப் பிறங்கி நின்றார் வள்ளுவர்"

"திருவள்ளுவரது வரலாறு ஒரு வரையறையாக வழங்கப்படவில்லை. அவருடைய பிறப்பைப் பற்றியும், சாதியைப் பற்றியும், ஆச்சிரமத்தைப் பற்றியும் ஒன்றுக்கொன்று வேறுபாடான செய்திகள் தமிழ்நாட்டில் உலவுகின்றன. அவற்றை ஆராய்ந்து அறுதியிட்டுக் கூறுவதற்குரிய கருவிகள் போதிய அளவாகக் கிடைக்கவில்லை".

**- தமிழ்த்தாத்தா உவேசா.**

"திருவள்ளுவரை மலைநாட்டுத் தமிழனாகக் காண்பது பலருக்குக் கசப்பாக இருக்கலாம். ஆனால் மலைநாடு பண்டைய தமிழகத்தின் ஒரு பகுதி என்பதைத் தமிழர்கள் மறந்தனால்தான் இந்நிலை"

- தமிழ்வளர்ச்சித்துறை முன்னாள் இயக்குநர்

**பேரா.கொண்டல் மகாதேவன்**

"திருவள்ளுவர்" என்பது கருத்தாவாகுபெயரே அன்றி இயற்பெயரன்று என்பது அறிஞர்கள் கூற்று.

நல்வழியில், "தேவர் குறளும்" என்று காணப்படுவதால் தேவர் என்பதும் அறியக் கிடக்கிறது.

"உலகுக்கு ஒரு நூலை அருளிய திருவள்ளுவரது உண்மை வரலாறு நமக்குத் தெரியவில்லை. இப்போது வழங்கிவரும் அவரது வரலாறு பின்னே முனையப்பட்டது"

- **திரு.வி.க.**

"திருவள்ளுவர் நாஞ்சில் நாட்டில் (தோவாளை அகஸ்தீஸ்வரம் வட்டம்) பிறந்து வளர்ந்தவர்"

- தமிழறிஞர் மறைதிரு. **ஞானப் பிரகாசம்**

"திருவள்ளுவர் எந்த நாட்டுக்கும சென்றதாக வரலாறுகளில் காணப்படவில்லை. சில அண்டை நாடுகளையும் கூட அண்டியதாகத் தெரியவில்லை. பேரவைகளில் சென்று பெருமுழக்கம் செய்ததாகவும் இல்லை. ஆனால், எல்லா நாடுகளையும் சுற்றி எல்லாவற்றையும் கண்டறிந்தவர் போல இச்சிறந்த கருத்தைக் கூறியிருக்கிறார்".

- **கி.ஆ.பெ.விஸ்வநாதம்**

"பெருமை வாய்ந்த திருக்குறள் அதனை ஆக்கிய ஆசிரியர் வரலாறு ஏதும் கூறவில்லை"

- **இராய. சொக்கலிங்கனார்**

"திருவள்ளுவருக்குத் தேவர் எனும் பெயருள்ளது".

- **புலவர் குழந்தை**

"நாம் தொழுது வாழ்த்தும் வளளுவர் என்னும் தெய்வ ஒளி வீசும் திங்களின் சரித்திரமும் நம்மால் அறிதற்கரிதாய் இருக்கிறது.

**- ச.வையாபுரிப்பிள்ளை**

"நாஞ்சில் வள்ளுவன் இயறபெயர் குறிப்பிடப்படாததால் அவன் நாஞ்சில் மலையில் தனிவாழ்வு நடத்திய வள்ளுவர் குலத்தின் தலைவன் என்பதை உய்த்துணரலாம்"

**- டாக்டர் எஸ்.இராதாகிருஷ்ணன்** (திருக்குறள் ஒரு சமுதாயப் பார்வை)

"திருவள்ளுவர் இயற்பெயர் தேவர்" என்பதும் அவரின் அலுவல் பெயரே வள்ளுவர்" என்கிறார்

**- பாவேந்தர்**

நீலகேசி ஆசிரியர் "தேவன் உரைப்பத் தெளிந்தேன்" என்கிறார்.

"திருக்கினார் தேவர் கோமான் எனச் சூடாமணி நிகண்டு கூறும் "திருவள்ளுவர் யார் என்பது தெரியவில்லை மயிலாப்பூரைச் சேர்ந்த ஞானி".

**- க.த.திருநாவுக்கரசு.**

திருவள்ளுவர் வாழ்ந்த வாழ்க்கையும் குடிசை வாழ்க்கையோ, மாளிகை வாழ்க்கையோ? தெரியமுடியவில்லை".

**- மகாவித்துவான் ச.தண்டபாணி தேசிகர்**

"திருவள்ளுவர் தோன்றியது தென்பாணடிய நாடு என்று எண்ணுவுதற்குரிய அரண்கள் பலவாக உள்ளன"

**- தவத்திரு குன்றக்குடி அடிகளார்**

"வரலாறு கிடைக்காத திருவள்ளுவர்"

**- புலவர் கண்ணையன்**

பேரா.எம்.வின்டர்நிட்ஸ் "இந்திய இலக்கிய வரலாறு" எனும் நூலில் (128ல்) "திருவள்ளுவர் மயிலையில் பிறந்த பெயர் குறிப்பிடப்படாத ஒரு ஞானி" என்கிறார்

"திருவள்ளுவர் கடவுள் வாழ்த்தில் ஓரிடத்தில் ஒரு திறவுகோல் வைத்துள்ளார். அதற்கு அரணாக நூலிற் பல குறிப்புகள் உள்ளன. முதலில் பொறிவாயில் ஐந்துடையனாய் இருந்து பின்னை அவ்வைந் தவித்த ஒருவனைத் திருவள்ளுவர் ஆதிபகவன் என்று போற்றி இருக்கிறார் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளங்குவதொன்று. பொறிவாயில் ஐந்துடையனாய்ப் பின்னை அவ்வைந்தவித்த ஒருவனை ஆதிபகவனாகப் போற்றுவது எச்சமயம்? ஜைனர் வழிபடும் விருஷப தேவரையே"

**- திரு.வி.க.24.7.1930**

திருவள்ளுவர் தென்னிந்தியாவில் கி.பி.200ல் தோன்றியவர். ஒரு சன்னியாசி. தீண்டத்தகாத ஜாதியில் பிறந்தவர்.

**- மனோமோகன்தாஸ்**

திருவள்ளுவர் ஒரு சன்னியாசி. கவிஞன்.தத்துவஞானி. கி.மு.முதல் நூற்றாண்டில் தோன்றியவர்.

- Dr.A.L.**முதலியார்**

"திருக்குறள் சீரிய செந்தமிழ் நூல். அதன் தனித் தன்மைக்கு மற்றெந்தத் தமிழ் நூலும் அடுத்து வைத்தற்கும் தக்கது அன்று.

சீரிய திருக்குறளையும் அதனை இயற்றிய சிறந்த பெருமகனாரையும் பெற்றெடுத்த ஒரு புகழ்வாய்ந்த நாடு, புறக்கணித்து ஒதுக்கத்தக்க ஒரு நாடாக இருத்தற்கு இயலாது.

வள்ளுவப் பெருமகனார் வழங்கும் அறநெறிக் கூறுகள், ஒழுக்கத்தின் விளை நிலமாய் விளங்கும் ஒரு நாட்டில் அன்றி அரும்ப இயலாது".

**- பெர்சிவல்**

"திருவள்ளுவர் தாம் சொல்ல விழைந்த அறக்கூறுகளைச் செவ்விய செய்யுள் நடையால் கூறியுள்ளதற்கு ஒப்பாகிய ஒரு நூலை, உலகில் மக்களால் பேசப் பெற்று வரும் வேறு எம் மொழியிலாயினும் காண்டற்கு இயலாது".

**- மைக்கேல்**

"தமிழர்களின் புகழ்மிக்க பண்பாட்டின் வளர்ச்சியாகத் திருக்குறள் உள்ளது. இவ்வுலகில் தமிழர்கள் மற்றது எதற்காகவும் தணிந்துவிட வேண்டியது இல்லை. திருக்குறள் மதிப்பிற்குரிய அளப்பரும் வளப்பரும் பொருளாகும்".

**- சார்லசு**

"தமிழ் மக்களின் மனநிலை, ஒழுக்கத்தையே உயிர்நாடியாகக் கொண்டு நின்றது என்பது திருக்குறளால் தெள்ளிதின் விளங்கும்"

**- மைக்கேல்**

"தமிழர்களாகிய நாம் நம்முடைய பழந்தமிழ் நாகரிகத்தையெல்லாம் இழந்து வருவதாகப் பகிர்கிறோம். பொருநை, காவிரி முதலிய ஆறுகளையோ, திருக்கோயில்களையோ, அரண்மனைகளையோ பிற வளங்களையோ இழக்க நேர்ந்தாலும் திருக்குறளை இழக்க மாட்டோம்".

**- மர்டாக்**

Caldwell said about the birth place of Thiruvalluvar 'Regarding the birth place of Thiruvalluvar there is one tradition that was Mylapore which houses shrine of Thiruvalluvar. Some scholar hold the view on the strength of a verse in Thiruvannamalai that Thiruvalluvar's birth place was Madurai. It is a custom in Tamil Nadu to erect a temple in memory of great men at the place where they left for the abode of God. The Thiruvalluvar shrine at Mylapore may be at the best help to decide that Thruvalluvar left this mortal world at Mylapore but is can't an evidence to its claime of his place of birth"

எனப் பேராயர் கால்டுவெல்லார் அவர்கள் கூறியுள்ளார். இதில் திருநயினார்குறிச்சி குறிப்பிடவில்லை என்றறிக.

"குறளாசிரியர், இந்துக்களுக்குரிய மூட நம்பிக்கைகளினின்றும் தாம் விடுபட்டு நிற்பதை நூல் முழுவதிலும் நன்கு விளக்கியுள்ளார். அவர் இறையைப் பற்றிக்கூறும் திறத்தை நாம் வியந்து போற்றாமலிருக்க முடியாது".

**அறிஞர் அறிவர் எலிசா கூல்**

"பார்ப்பனர் அந்தணர் என்ற பெயரால் அழைக்கப்படுவதற்குத் தகுதியுடையரல்லர் என்று ஆசிரியர் இடித்துக் கூறுகின்றார். சமயப்போலி, பொய்யொழுக்கம் ஆகியவை நூல் முழுவதிலும் கண்டிக்கப்பட்டுள்ளன."

**அறிஞர் அறிவர் இ. செ. இராபின்சன்**

"இறையுண்மையை நிலைநாட்டுவதற்கும், பார்ப்பனர்கள் பின்பற்றி வந்ததும் சடங்குகள் நிறைந்ததுமாகிய பல தெய்வ வணக்கத்தைக் கண்டிப்பதற்கும் திருவள்ளுவரையும் சிவாக்கியரையும் போன்ற அறிஞர்கள் தம் சொல்லாற்றலையும் எழுத்தாற்றலையும் பயன்படுத்தி வந்தார்கள். கிரேக்கர்களிடம், கோமர் விளங்கியது போலவே, தமிழர்களிடம் திருவள்ளுவர் திகழ்ந்தார் என்பது மறுக்க முடியாததோர் உண்மையாகும். திருக்குறள், ஒரு கல்விக் களஞ்சியம்." புலவர் பெருந்துணை; ஒப்புயர்வற்ற சொற்றிறம் நிறைந்த ஒழுக்க நூல். திராவிடர் (தமிழர்)களின் மனப்பண்பு உயர் ஒழுக்கத்தையே நாடி நின்றது என்பது இந்நூலால் தெளிவாக விளங்கின்றது. தமிழ்ப் பெருமக்களின் நல்லொழுக்கப் பண்பினால்தான் புத்தமதம் இந்நாட்டில் கால் கொண்டதென்று கருதாலம். இத்தாலியின் மொழிக்கு தாந்தேயின் நூல் பெருமை அளிப்பதுபோலத் தமிழ்மொழிக்குத் திருக்குறள் பெருமை அளிப்பதாகுமென்பது மிகையாகாது".

**அறிஞர் சார்லசு இ. கவர்**

"தமிழ் நூல்களில் தலைசிறந்து விளங்குவது திருக்குறளே. திருக்குறளாசிரியர், வகுப்புகளையும் மக்கட் பிரிவுகளையும் அவற்றிற்குரிய மூடநம்பிக்கைகளையும் ஒரு பொருளாக மதியாது மக்கட் குழுவிற்கே உரிய வகையில் பொதுவாக நூல் எழுதியிருக்கின்றார்".

**அறிஞர் எம்.ஏரியல்**

"திருக்குறள் உலக இலக்கியங்களில் பொறுக்கி எடுத்த மணியாகும். சாதி, வகுப்பு, மதம் என்ற எல்லாப் பிரிவினைகளையும் ஆசிரியர் கடந்தவர். அவர் கூறுவது மக்கட் குழுவுக்கே பொதுவான நீதியும் அறிவுரையுமாகும்."

**பேராசிரியர் எம்.வின்டெர் நிட்ச்**

"இக்காலத்தில் திருக்குறளை வாயினால் புகழ்ந்துரைப்பது மாத்திரமின்றி, அந்நூலின் கருத்துக்களையும் நோக்கங்களையும் உ ய்த்துணர வேண்டும் என்ற விருப்பத்துடன் படிக்கின்றிலர் என்பது மிக வருத்தப்படத்தக்கது".

**அறிஞர் பாப்ளி**

"தமிழ் இலக்கியங்களின் தலைமணியாக விளங்குவது திருக்குறளே! அதனை ஓதி உணர்ந்தவனை அன்றி மற்றையோன் தமிழ் கற்றவன் என்னும் தகுதிக்கு உரியவன் அல்லன்"

**பிரடெகது பினகாட்டு**

"தமிழர்களாகிய நாம் நம்முடைய பழந்தமிழ் நாகரிகத்தையெல்லாம் இழந்து வருவதாகப் பார்க்கிறோம். பொருநை, காவிரி முதலிய ஆறுகளையோ, திருக்கோயில்களையோ, அரண்மனைகளையோ, பிற வளங்களையோ இழக்க நேர்ந்தாலும் திருக்குறளை இழக்க மாட்டோம்"

**மர்டாக்**

"தமிழகத்து அறவோர்களுள் திருவள்ளுவர் முதன்மையானவர். உறுதியாக, திருக்குறளுக்கு ஒப்பான ஒன்று, இந்திய மொழி நூல்களுள்ள எந்த ஒன்றும் இல்லை என்று பொதுவாக அறிஞர்களால் ஏற்கப்பட்டுள்ளது."

**எச்.பவர்**

"மேற்கத்திய கிழக்கிந்திய இலக்கியத் தொகுப்புகள் எவற்றிலும் (திருமறையும் ஓரிரு உயர் நூல்களும் தவிர) பழமைக்கும் புதுமைக்கும் எதிர்மைக்கும் இணையற்று விளங்குவது திருக்குறளாகும்".

"புத்தர் புகழ்வது போலவும், கீதை மொழிவது போலவும் உலகோர்க்குத் தொல்லையில் இருந்து விடுதலைபெற்ற உள்ளத்தையும், பற்றற்ற வாழ்வையும் வேண்டுகின்றது. திருக்குறள் அவற்றைப்போலவே கொல்லாமை, இன்னா செய்யாமை என்பவற்றை விலக்க ஆணையிடுகிறது

திருக்குறள் மானிடப் போக்கின் அறக்கோட்பாடுகளைச் செவ்வனே மதிப்பிடுகிறது. அக்கோட்பாடுகளுடன் புறக்கோட்பாடுகளையும், அன்பு வழி வந்த இல்வாழ்க்கையும் அறுதியிட்டு உரைக்கின்றது".

**முனைவர் ஆல்விரட்டு சுவைட்சர்**

"ஒரு பிரிவினர்க்கே உரிய கோட்பாடுளைக் கொள்ளாது விலக்கி, உலக மக்கள் அனைவருக்கும் ஒருங்கே பொருந்தும் உண்மைகளையே தெரிந்தெடுத்துத் திருவள்ளுவர் மொழிந்துள்ளார். இவ்விரிந்த உணர்வால் மற்றை மனு முதலிய நூல்களில் கூறப்பெறும் கண்மூடித்தனம் எதுவும் இன்றி நூல் மேலோங்கித் திகழ்கின்றது".

**அறிஞர் துரூ**

"மனு நூல் திருக்குறளுக்கு நானூறு ஆண்டுகளுக்குப் பிற்பட்டதே. ஆனால் இவற்றுக்குள் உள்ள வேறுபாடு என்னவெனில், ஒருமைப்பட்ட மனுநெறி, பிராமணச் செல்வாக்கால் உலகும் வாழ்வும் எதிரானது என ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. திருக்குறளில் உலகு, வாழ்வு இவற்றின் வேறுபாடு தொலைவிலுள்ள வானும் முகிலும் போல ஒன்றுபட்டுள்ளது".

**முனைவர் ஆல்பிரட்டு சுவைட்சர்**

"குறளறம் யூதர்களின் "பத்துக் கட்டளை" களுக்கு ஒப்பானவை. அதன் மொழிநடை இலக்கிய மேதகைமைக்கு எடுத்துக்காட்டாக இலங்குகின்றது.

கிரேக்க நாட்டவரிடம் "கோமர்" பெருமகனார்க்கு எத்துணைச் சிறப்புண்டோ, அத்துணைச் சிறப்பு, தமிழ் நாட்டவரிடம் வள்ளுவப் பெருமகனார்க்கு உண்டு. அன்றியும் கவிஞர் "தாந்தே" யின் நூல் இத்தாலி மொழிக்குப் பெருமையளிப்பதற்கு ஒப்பாக திருக்குறள் தமிழ் மொழிக்குப் பெருமையளிக்கிறது என்று கூறுவது மிகையாகாது".

**அறிஞர் கோவர்**

"சர்.ஏ.கிராண்டு என்பார், "பணிவுடைமை, கற்புடைமை, பொறையுடைமை என்பவை அறிஞர் அரிட்டாட்டிலால் விரித்துரைக்கப் பெறவில்லை" என்றார். ஆனால், இம்மூன்று பண்புகளும் திருவள்ளுவராகிய அறவோரால் ஒவ்வோர் இடத்தும் தம் நூலில் மிக அழுத்தமாக உணர்த்தப் பெற்றுள்ளது".

**முனைவர் போப்**

"திருக்குறள் அமைப்பு வகையாலும் பா வகையாலும் வடமொழித் தொடர்பு சிறிதும் இல்லாமல் தனித்தியங்கும் தனிப் பெருமையுடையது."

**இராபர்டு கால்டுவெல்**

"திருக்குறள் மேலும் விரித்துரைக்க இயலாத சீரிய கட்டுத் திட்ட அமைப்பு உடையது. அது சீரிய பளிங்குக் கல்பரப்பு. அதன் ஒரு சிறு கல்லின் அமைப்பிலோ வடிவிலோ வண்ணத்திலோ சிறியதொரு மாற்றம் செய்தாலும் அப்பரப்பின் முழு அழகும் பழுதுறும்".

**முனைவர் இலாசரசு**

"திருக்குறள் வழங்கும் செவ்விய இன்பம் இத்தகையது என்று எந்த மொழி பெயர்ப்பாலும் ஒரு சிறியதாயினும் கொடுக்க இயலாது. திருக்குறள் உண்மையாகவே வெள்ளியால் செய்யப்பெற்ற எழிற்பேழையில் இட்டுவைக்கப்பெற்ற ஆபபிள் பழம் போன்றது ஆகும்".

**முனைவர் கிரௌல்**

"ஆழ்ந்து அகன்ற அரிய கருத்துக்களைப் பொருத்தமான சொற்களில் சுருக்கமாகக் கூறும் இந்நூல் இக்காலத்துத் தமிழ் மக்களால் பாராட்டப்படும் அளவு பயிலப்படாதது வருந்தத்தக்கதே".

**அறிஞர் அ.மாதவையா**

"திருக்குறள், ஒவ்வொரு வகுப்பிற்கும் ஒவ்வொரு விதமாகக் கூறும் அற நூல்களைப் போல் அமையாமல், எவர்க்கும் ஒரு படித்தாய் அவ்வறங்களைத் திண்ணிதின் விளக்கவல்லது. ஆதலின், தமிழ் மக்கள் இந்நூலைப் பலவகையாலும் போற்றக்கடவர்".

**அறிஞர் கா.நமச்சிவாயர்**

"எனக்குத் தெரிந்தவரை திருக்குறளை நிகர்த்த அரிய பெரிய அறநூல் வேறெந்த நாட்டிலும், வேறெந்த மொழியிலும் இது காறும் தோன்றவில்லை என்பது உண்மையேயாகும்".

**அறிஞர் பா.தாவுத்சா சாகிப்**

"திருக்குறளில் கடவுள் கொள்கையைப் பற்றிய சொற்கள் யாவும் செந்தமிழிலே அமைந்து. நூலின், பொதுத் தன்மையை விளக்குவனவாயிருக்கின்றன. பிரமம். ஆன்மா, தத்துவம், ஞானம், வருணம், ஆசிரமம், வேதம், சாத்திரம், யாகம், விட்டுணு முதலிய

சொற்கள் இதன் கண் காணப்படவில்லை. இல்லறம் துறவறம் என்ற மக்கள் வாழ்வு பிரிக்கப்பட்டதே ஒழிய வடநூலிற் கூறும் நால்வகை நிலை பற்றி அப்பகுப்பு அமையவில்லை. நால்வகைக் குலமும் இந்நூலில் விதந்து ஓதப்படவில்லை. பண்டைத் தமிழரது கடவுள் கொள்கையை நன்கு அறிந்து கொள்வதற்கு இந்நூலே தக்க கருவியாம். வடநூன் முறையையும் ஆரிய அறநூற் பொது விதியையும் மறுத்துக் கூறுவது".

**அறிஞர் கா.சுப்பிரமணியர்**

"வடமொழி நூல்களின் வழி நூலாக வள்ளுவர் குறளை இயற்றினார் என்பது பொருந்தாக் கூற்றாம். ஆரிய தரும சாத்திர முறை வேறு, தமிழ் அறநூன் மரபு வேறாகும். இரு முறைகளையும் ஒத்துணர்ந்த வள்ளுவர் திருக்குறள் தமிழ் மரபு வழுவாது பொருளின்பப் பகுதிகளான அகப்புறத் துறையறங்களை மக்கள் வாழ்க்கை முறைக்காமாறு ஆராய்ந்து அறுதியிட்டு எடுத்து விளக்கும் தமிழ் நூல். தமிழிற் பெருமையுடைய அனைத்தும் ஆரிய நூல்களினின்று திரட்டப்பட்டிருப்பதாகக் காட்டி மகிழ்வர் சிலர்க்கன்றி நடுநிலையாளருக்கு வள்ளுவர் குறள் தமிழில் தனி முதலற நூலேயாகும் என்பது வெள்ளிடைமலை".

**அறிஞர் ச.சோமசுந்தர பாரதியார்**

"செந்தமிழ்ப்பாண்டி நாட்டில் பீடுகெழுமான மதுரையில் தாளாண்மை மிக்க வேளாண் குடியில் தோன்றி பாண்யடிப் பேரரசின் உட்படு கருமத் தலைவராகப் பிறங்கி மின்றார் வள்ளுவர்" என்றார்.

**நாவலர் சோமசுந்தர பாரதியார்**

## திருக்குறள் விரிவுரை – பாயிரம்

"திருவள்ளுவர் முப்பால் கூறி வீட்டுப்பால் விடுத்து

அறப்பேற்றுக்கு இல்வாழ்க்கையைக் குறித்தது; பெண்ணை வெறுத்தல் முதலிய போலித் துறவுகளைக் கடிந்தது; மனமாசு அகற்றலே துறவென்று இயற்கை நுட்பத்தை விளக்கியது. இயற்கைப் பொதுநெறியை அறிவுறுத்தியது. இன்ன பிற"

எது திருக்குறள்?

"செயலுக்கு வரும் அறங்கரைவது திருக்குறள்;
மக்கள் வாழ வழிவகுப்பது திருக்குறள்;
பலநிலையறம் தழுவியது திருக்குறள்
எந்நிலைய மாந்தரையும் முன்னேற்றுவது திருக்குறள்
உலகு ஒட்டும் நெறி காட்டுவது திருக்குறள்;
ஒருவன் வாழ்க்கை அவனைப் பொறுத்தது என்ற
உண்மை அறைவது திருக்குறள்".

**தமிழர் வாழ்வே திருக்குறள்**

"திருக்குறள் ஒரு தனித்தமிழ் நூலாகும்; திருக்குறள் அயற்கொள்கை எதிர்ப்பு நூலேயன்றி எந்த ஓர் அயற்கொள்கையையும் உடன்பட்டுக் கூறும் நூல் அன்று. "தமிழர் வாழ்வே திருக்குறள், திருக்குறளே தமிழர் வாழ்வு" என்னும் அவ்வளவு இன்றியமையாச் சிறப்பினையுடைய நூல் திருக்குறள்.

திருக்குறள் உள்ளதை உள்ளபடியே உயரிய முறையில் எடுத்துரைக்கும் உண்மை நூல் தமிழர் வாழ்வின் படப்பிடிப்பு! பழந்தமிழர் நாகரிக நல்வாழ்வை அப்படியே நமக்குக் காட்டும் களங்கமற்ற காலக்கண்ணாடி! தொன்மையும் எதிர்மையும் ஒருங்கொப்பக்காட்டும் தொலை நோக்காடி! தமிழ் மக்களின் வாழ்க்கைச் சட்டம்! தமிழ் மக்களுக்கு வள்ளுவர் வகுத்தமைத்து வைத்த பாதுகாப்புப் படை! ஏன்? தமிழருக்கு மட்டுமன்றிக் குறள் உலகப் பொது நூல்! மக்கட் பண்பாட்டுச் சரக்கறை! எக்காலத்துக்கும் உரிய நூல்! கன்னித்தமிழ் நூல்! எனல் மிகையாகாது".

**கொ.நீ.சிங்காரவேலு**

"ஒரு சிற்பி உருவற்ற கல்லையோ உலோகத்தையோ" எடுத்து அதன் நாற்பக்கங்களிலும் அடித்து மனித உருவைப் படைக்கிறான். அவன் சில சமயங்களில் அதைச் சம்மட்டி கெண்டு அடிக்கிறான். சில சமயங்களில் சிற்றுளியால் செதுக்குகிறான். அதுபோல வள்ளுவர் மனித உள்ளத்தின் நூற்று முப்பத்து மூன்று பக்கங்களிலும் சிலசமயங்களில் வன்மையாகக் கண்டித்தும் சில சமயங்களில் நுண்மையாக உணர்த்தியும் பண்பட்ட மனித உள்ளமாக உருவாக்க முயல்கிறார்".

**திரு.வி.க.**

"திருக்குறள் ஒரு சமுதாயப் பார்வை" என்ற நூலில், புறநானூற்றில் பாடப் பெறுவோரில் ஒருவரான நாஞ்சில் வள்ளுவன் இயற்பெயரால் குறிப்பிடப் பெறாததால அவன் நாஞ்சில் மலையில் தனிவாழ்வு நடத்தி வள்ளுவர் குலத்தின் தலைவன் என்பதை உய்த்துணரலாம். சேர மன்னனுக்குத் துணைவனாகவும், பரிசிலர்க்கு வழங்கிப் புரவலனாகவும் புகழ்பெற்ற அவனை அவ்வையாரும் வேறு மூவரும் பாடியுள்ளனர்

**டாக்டர். எஸ்.இராதாகிருஷ்ணன்**

"இயல்பினால் வாழுநர் இயவரை இணைக்கலின்
இயவுள் வள்ளுவ ரியம்பிய மொழிபோல்
இயங்குமா வுலக மெங்கனு மிலங்கலின்
முயங்குத லின்றி மறை யெனல் முறையே"

**எம்.ஏசு.பூரணலிங்கம் பி.ஏ., எல்.டி.,**

"பாவிற் சிறக்கும் வள்ளுவர்வெண்
பாவே யென்றும் வாரியரே"

**மேலைச்சிவபுரி. ஆ.பழ சொக்கலிங்கன்**

"வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு"

**- பாரதியார்**

"யாமறிந்த புலவரிலே கம்பனைபபோல்
வள்ளுவன்போல், இளங்கோ வைப்போல்
புவிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை
உண்மை வெறும் புகழ்ச்சி யில்லை"

**- பாரதியார்**

"ஒன்றே முக்கால் அடியாலே
உலகம் தன்னைக் கவர்ந்ததுவாம்
...........................
தெள்ளத் தெளிய உதவுவது
திருக்குறள் திருக்குறள் திருக்குறளே"

**திரு. அழ.வள்ளியப்பா**

"எப்பா லவர்க்கும் எளிதே உரித்தென
தருக்கவுந் தகுந்த தமிழ்மறை யாகிய
திருக்குறள் என்னும் தெய்வீகப் பனுவல்"

**நாமக்கல் கவிஞர் வெ.இராமலிங்கனார்**

திருக்குறள் மறைநூல் ஒன்றே
தேசத்தின் நிறை நூல் ஆகும்

**உவமைக் கவிஞர் சுரதா**

....................
எந்தக் கிழமை ஆயினும், குறளை
எடுப்பேன் 'படிப்பேன்' இன்பம் அடைவேன்

**டாக்டர் பூவண்ணன்**

திருக்குறள் காணப்படும் அரிய கருவூலத்தை அதன் மூலத்திலேயே படித்தறிய வேண்டுமென்ற விருப்பத்துடன் இருபது ஆண்டுகளுக்கு

முன்னர் கற்கத் தொடங்கினேன். தமிழ் மொழியை அந்த அளவு கற்றுத்தேற ஆண்டவர் எனக்கு நேரம் அளிக்கவில்லை என்பது எனக்கு வருத்தத்தைத் தருகிறது

**மகாத்மாகாந்தியடிகள்**

"இதே கன்னியாகுமரிப் பகுதியில்தான திருவள்ளுவர் பிறந்தது"

**பத்மஸ்ரீ டாக்டர் ஆ.சிவதாணு**

"திருவள்ளுவர் குறித்த ஆராய்ச்சியும், திருவள்ளுவர் மயிலாப்பூர் அல்லது குமரிமாவட்டத்தைச் சேர்ந்தவர் என்பதையும் திருவள்ளுவர் தோற்றம், ஆதித்திருக்குறள் ஓலைச்சுவடி கிடைக்குமிடம் எனப் பலவற்றையும் ஆராய்ச்சி செய்ய வேண்டும்" என்றார்

**முன்னாள் குடியரசுத்தலைவர் ஏ.பி.ஜெ. அப்துல்கலாம்**

"தமிழ் தலைமை தலைக் கொண்டான்
சக்கரன்நொக்கார் குழுவில்"

"............... மணிக்கோடு
தங்குபெரு வளநாட்டில்
றமிழிருந்து புறங்காக்குள் தமிழ் நாடியாங்கே"

எனவரும் **செங்கோன் தரைச் செலவாலும்** அதன் உரைப் பகுதிகளாலும் குமரிக்குத் தெற்கே தமிழ் வழங்கும் பெருநாடு இருந்ததெனப் புலப்படும்.

சங்கத்தில் அரங்கேற்றப்பட்ட நூல்களுக்குச் சான்றுக்கவிகள் சிறப்புப் பாயிரமாகும். திருக்குறளுக்குச் சிறப்புப்பாயிரமான பாக்கம் ஐம்பத்து நான்கு. இவையெல்லாம் திரட்டிச் சேர்த்து திருவள்ளுவமாலை எனப்பட்டது

சங்கத் தலைவனான உக்கிரப்பெருவழுதி சாற்றியவெண்பா

"நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான் முகத்தோன்
தான்மறைந்து வள்ளுவனாய்த் தத்துரைத்த - நூன்முறையை

வந்திக்க சென்னி, வாய் வாழ்த்துக, நன் நெஞ்சஞ்
சிந்திக்க கேட்க செவி"

கூலவாணிகள் சாத்தனாருக்கு முற்பட்டவரும், உக்கிரப் பெருவழுதி காலத்தில் வாழ்ந்தவருமாகிய சீத்தலைச் சாத்தனார் பாடிய சாற்றுக்கவி.

"மும் மலையு முந்நாடு முந்நதியு முப்பதிவு
மும்முரசு முத்தமிழு முக்கொடியு - மும்மாவுந்
தாமுடைய மன்னர் தடமுடிமேற் றாரன்றோ
பாமுறை தேர் வள்ளுவர்முப் பால்"

சிவஞானிமுனிவர் இயற்றிய சோமேசர் முதுமொழிவெண்பா

"மெய்த் திருவள்ளுவனர் வென்று உயர்ந்தார், கல்விநலம்
துய்த்த சங்கத்தார் தாழ்ந்தார், சோமேசா - உய்த்தறியின்
மேற்பிறந்தா ராயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்
கற்றா ரனைத்திலர் பாடு" என்று கூறியுள்ளார்.

சீவக சிந்தாமணி, சிலப்பதிகாரம் மணிமேகலை, கம்பராமாயணம் ஆகிய நூல்களில் வள்ளுவன் என்போன் யானை மீதேறி அரசன் ஆணையைப் பறையறைந்து சாற்றுபவன் எனக்குறிக்கும்.

"திருக்குறள் தமிழ் மொழியில் பிறந்த ஒரு பெரும் பொதுமறை. உலகைக் கூறுபடுத்தும் பொருள்கள் அதன்கண் இல்லை. உலகை ஒருமைப்படுத்தும் செவ்விய பொருள்கள் அதன் கண் மிளிர்கின்றன. இப்பெரிய பொதுமறையை மன்பதை பயின்று ஒருமை இன்பத்தை நுகர்வதாக.

"யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்பது பழந்தமிழர் கொள்கை. இக்கொள்கை திருக்குறளாகப் பொலிவுற்றது.

மன்பதைக்கென ஒரு பொதுமறையை அருளிய திருவள்ளுவரைத் தமிழ்மணி என்று மட்டும் வழுத்தாது உலகுக்கு

ஒளி வழங்கத் தமிழ் நாடளித்த ''வான்மணி'' என்று வாழ்த்துவோமாக".

**மறைமலையடிகளார்**

"தீங்கனியாகிய ஒரு மாம்பழத்தைப் பிழிந்தால் எவ்வளவு சாறு தேறும்? தேறும் சிறு அளவிற்றாய சாற்றினைச் சுண்டக் காய்ச்சிக் கற்கண்டு சேர்த்துத் துண்டாக்கினாலொக்க திரண்ட காப்பியங்களையெல்லாம் பிழிந்து வடித்துக் காய்ச்சித் திரட்டிய தீந்தமிழ்ச் சாற்றுக் கட்டியே திருக்குறள்".

**மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர்**

"உலகியல் இனிது நடைபெறுதற்கு இன்றியமையாத நூல் நிலைமையும், இல்லறமும் துறவறமும் அரசியலும் கணவன் மனைவியர் காம இன்பமும் பற்ற உண்மையாகவும் நடுநிலைமையாகவும் எல்லார்க்கும் ஒப்பமுடிந்த வகையிலும் தலைசிறந்த பாவாலும் சிறந்த சொற்களாலும் இலக்கண வழுவின்றி இருவகை அணிகளுடன் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் நூல் திருக்குறள் ஒன்றே. இருமைக்கும் உதவும் விழுமிய பொருளை அணிமிக்க குறள் வெண்பாவாற் பாடியிருப்பது பன்மணி பதித்த ஓவிய வேலைப்பாட்டுப் பொற்காலத்தில் அரசர்க்குரிய அறுசுவையுண்டியைப் படைத்தாற்போலும் குறள் வெண்பாவால் ஆனதினாலும், வீடுபேற்று வழியைக் கூறி மறைத்தன்மை பெற்றதினாலும் திருக்குறள் என அடையடுத்த ஆகுபெயர் பெற்றது".

**திருக்குறள் ஒரு கடல்**

அதில் மறைந்து கிடக்கும் புதை பொருள்கள் விலையுயர்ந்த முத்துக்கள் ஆகும். முத்துக்குளிக்கும் மக்கள் தங்கள் மூச்சு வலிமைக்கு ஏற்ற அளவு செல்வங்களை அள்ளிக் கொள்வதைப் போல, குறளில் முழுவதும் மக்களும் தங்கள் அறிவு வலிமைக்கு ஏற்ற அளவு செல்வங்களை அள்ளிக் கொள்வதுண்டு.

**திருக்குறள்சுரங்கம்**

